**முனைவர் ஒப்பிலா மதிவாணன்,** பிஎச்.டி.
முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை **600 005.**

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியத்தில் அரசப்புலவர்கள்" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருமதி. கோ. ஜெயந்தி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு என் மேற்பார்வையில் நிகழ்த்தியதாகும். இது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அவரால் அளிக்கப் பெறவில்லை என்பதற்கும், இவ்வாய்வு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும் சான்றளிக்கிறேன்.

08-01, 2008

மேற்பார்வையாளர்

OPPILA. MATHIVANAN
Senior Lecturer in Tamil
Directorate of Distance Education
University of Madras
Chennai-600 005

**முனைவர் ஒப்பிலா மதிவாணன்,** பிஎச்.டி.
முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை **600 005.**

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியத்தில் அரசப்புலவர்கள்" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருமதி. கோ. ஜெயந்தி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு என் மேற்பார்வையில் நிகழ்த்தியதாகும். இது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அவரால் அளிக்கப் பெறவில்லை என்பதற்கும், இவ்வாய்வு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும் சான்றளிக்கிறேன்.

08-01-2008

மேற்பார்வையாளர்

OPPILA. MATHIVANAN
Senior Lecturer in Tamil
Directorate of Distance Education
University of Madras
Chennai-600 005

**திருமதி. கோ. ஜெயந்தி, எம்.ஏ., எம்.ஃபில்.,**
தமிழ் ஆராய்ச்சியாளர்
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை **600 005.**

# ஆய்வாளர் உறுதிமொழி

"சங்க இலக்கியத்தில் அரசப்புலவர்கள்" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் செய்துள்ள இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதென்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் ஆய்வரங்கிற்கும் இது அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

கோ.ஜெயந்தி

ஆய்வாளர்

# நன்றியுரை

"சங்க இலக்கியத்தில் அரசப்புலவர்கள்" என்ற தலைப்பில் ஆய்வு நிகழ்த்துவதற்கு அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், தொலைதூரக் கல்வி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் கு. மோகன்ராம் அவர்களுக்கும், தமிழ்ப் பேராசிரியர், சித்தர் சீர் பரவும் டாக்டர் அரங்க. இராமலிங்கம் அவர்களுக்கும் என் நெஞ்சு நிறைந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வுக்கு நெறியாளராக இருந்து ஊக்கமளித்து வழிகாட்டிய முதுநிலை விரிவுரையாளர் முனைவர் ஒப்பிலா மதிவாணன் அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி.

என்பால் அன்பும் அக்கரையும் கொண்டு எல்லா வகையிலும் ஒத்தாசை புரிந்துவரும், என் வாழ்க்கைத் துணைவர் திரு. இரா. கோவிந்தராஜ் அவர்களுக்கும், என் உயர்வுக்கும் வளர்ச்சிக்கும் அன்புக்கரம் நீட்டி உதவி வரும் தாயார் திருமதி. அஞ்சலிதேவி அவர்களுக்கும் காலம் முழுதும் நன்றியுடையேன்.

வளர்ச்சி நிலையின் அடுத்த கட்டத்தை எட்டுவதற்கு முயலும் போதெல்லாம், ஊக்குவித்து அன்பு பாராட்டும், மாமா திரு. வி. இராமானுஜம், அத்தை திருமதி. இரா. இராஜகுமாரி ஆகியோருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இயக்கக நூலகருக்கும், பேரா. டாக்டர். வீ.சேதுராமலிங்கம், திருமதி. சீ. சாந்தா மதிவாணன் ஆகியோருக்கும் நன்றியுடையேன்.

இந்த ஆய்வேட்டினை மிகவும் நேர்த்தியாகவும் சிரத்தையோடும் அச்சிட்டுத் தந்த ரெயின்போ கிராபிக்ஸ் நிறுவனத்தாருக்கும் நன்றியுடையேன்.

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகில் உயர்தனிச் செம்மொழி என்னும் தகுதிப்பாடுடையது தமிழ்மொழி. மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ச்சியான இலக்கிய வளர்ச்சி; தொன்மையான இலக்கணக் கட்டுக்கோப்பு; திராவிட மொழிகளுக்குத் தலைமையேற்கும் தனித்துவம்; ஆயுந்தோறும் புதுப்பொருள் நல்கும் பொருண்மை; உலக மொழிகளில் ஊடுருவி நிற்கும் பான்மை; பழந்தமிழரின் நாகரிகப் பண்பாடுகளை உணர்த்தும் மேன்மை போன்றவை, தமிழ்மொழியின் பழமைக்கும் செழுமைக்கும் சான்றுகள். சங்ககாலம் தமிழின் பொற்காலம் என்று பேசப்படுகிறது. அச்சங்ககாலத்து நூல்கள் சங்க இலக்கியம் என்று குறிக்கப்பெறுகின்றன.

சங்க இலக்கிய நூல்களைத் திணை இலக்கியம், தொகை நூல்கள், பதினெண் மேற்கணக்கு நூல்கள் என்றும் வழங்குவதுண்டு. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களின் மொத்தப் பாடல்கள் 2381 என்று கணக்கிடப் பெற்றுள்ளன; இவற்றுள் அகப்பாடல்கள் 1862; ஏனையவை புறப்பாடல்கள். இவை அகம், புறம் என்னும் பாகுபாடுடையவை; மனித உள்ளத்தை ஊடுருவிச் செல்லும் மாண்புடையவை; உலகப் பொதுநோக்குடையவை; மெய்ம்மை போற்றும் பண்பு; தமிழ்ப் பண்பாட்டை நிலையிறுக்கும் பாங்கு; இலக்கியம் முழுதும் பெயர் சுட்டாப் புதுமை; அறிவியல் தொலைநோக்கு; இனியசந்தம், அணிநலம், கற்பனை வளம், மொழிநடைச் சிறப்பு அனைய பல கூறுகள், சங்க இலக்கியத்திற்கு அழகூட்டுகின்றன.

அப்பாடல்களைப் படைத்த புலவர்கள் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்; உணர்ச்சிக்கு அடிமையாகாமல் உணர்வுக்கு முதன்மை தந்தவர்; வெற்றுச்சொல் புனையாதவர்; நட்பின் நல்லோர்; தமக்கென வாழாத் தகைமையாளர்; இயற்கையைச் சித்தரிக்கும் ஆர்வலர்; புதுப்புது உத்திகளைப் புகுத்திப் பாப்புனைந்தவர்; அத்தகு சிறப்புக்குரிய புலவர் பெருமக்களுள், 30 பேர் அரசப்புலவர்கள். அரச குலத்தில் பிறந்து, வேந்தராய் முடிசூடி, தமிழ்ப் புலமைப்பெற்று, புரவலராகவும் வாழ்ந்து, அறமும் மறமும் கொண்டவர்களாகத் திகழ்ந்தவர்; புலவர் சொற்கேட்டு நல்லாட்சி நடத்தியவர்கள். புலவர்கள் தம்மைப் பாடுவதையே புகழாக எண்ணியவர்; அவ் வேந்துப் புலவர்களின் சங்கப் பாடல்களை ஆராய்வதே, இந்த ஆய்வேட்டின் மையப்பொருளாகும்.

## தலைப்புத் தேர்வு

செம்மொழித் தமிழுக்கான தொன்மைச் சான்றாதாரங்களுள் முதன்மை நிலையில் வைத்து எண்ணத்தக்கவை சங்க இலக்கியங்களாகும். அந்நூல் எழுந்த

காலகட்டத்தில் வாழ்ந்த புலவர்கள், புரவலர்கள், குறுநில மன்னர்கள் முதலானோரைப் பற்றிய ஆய்வு நூல்கள் பல வெளிவந்துள்ளன. நாடாண்ட அரசர்களில் பலர் புலமை திறத்தாலும் மொழிப் பற்றாலும் கவிதைகள் பாடியுள்ளனர். அவ்வாறு பாடிய அரசப் புலவர்கள் பற்றிய தனி ஆராய்ச்சிகள் எவையும் செய்யப்படவில்லை. எனவே வேந்துப் புலவர்களை ஆராய்வதை நோக்கமாகக் கொண்டு **"சங்க இலக்கியத்தில் அரசப் புலவர்கள்"** என்ற தலைப்பு இவ்வாய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

பின்வருவன இவ்வாய்வேட்டின் நோக்கங்களாக அமைகின்றன.

1. சங்க இலக்கியங்களில் கவிதை பாடியுள்ள அரசர்கள் பலர் உளர். அத்தகைய அரசப்புலவர்களை வரையறை செய்வதும், அவர்கள் பற்றிய சிறப்புச் செய்திகளை ஆராய்ந்து காண்பதும் இவ்வாய்வேட்டின் முதன்மை நோக்கமாகும்.
2. சங்கப் புலவர்கள் எண்ணற்றோர் உள்ளனர். அவர்களுக்கும் அரசப்புலவர்கட்கும் உள்ள பாடற்பொருளின் ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்பது.
3. அரசப் புலவர்களின் பாடல்களில் அமைந்துள்ள பாடுபொருள்களைத் தனித்துச் சிந்திப்பது.
4. அரசப் புலவர்கள் நிகழ்த்திய போர்களைக் கால அடிப்படையில் ஆராய்ந்து காண்பது.
5. அரசப்புலவர்களுக்கும் தனிப்புலவர்களுக்கும் இடையிலான உறவு நிலைகளை ஆராய்ந்து, பெருமிதப் பண்புகளை வெளிப்படுத்துவது.
6. தொல்காப்பியர் சுட்டும் 'நோக்கு' என்ற செய்யுள் உறுப்பு அரசப் புலவர்களின் பாடல்களில் அமைந்துள்ள பாங்கினை ஆராய்ந்து காண்பது முதலானவை இவ்வாய்வேட்டின் நோக்கங்களாகும்.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் முப்பது அரசப்புலவர்களின் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவர்கள் பற்பல சூழ்நிலைகளில் பாடிய பாடல்கள் அனைத்தும் இவ்வாய்விற்கு ஆய்வு மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

தமிழறிஞர்கள் எழுதியுள்ள தொடர்புடைய நூல்களும் துணை ஆய்வு மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்கள் பற்றியும், சங்கப் புலவர்கள் பற்றியும், மன்னர்கள், வள்ளல்கள் பற்றியும் பலர் ஆராய்ந்துள்ளனர். சங்க கால அரசப் புலவர்களைப் பற்றிய முழுமையான ஆய்வு எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. ஆயினும் பலர் தொட்டுக் காட்டியுள்ளனர். அவற்றை ஆதாரமாகக் கொண்டு, இவ்வாய்வு மேலெடுத்துச் செல்லப்படுகின்றது. அந்த வகையில் முன்னோடி நூல்களாவன :

1. காவலப்பாவலர்கள் – புலவர் கா. கோவிந்தன் – 1964
2. சங்க இலக்கியத்தில் வேந்தர் – அரங்க. இராமலிங்கம் – 1982
3. சங்க இலக்கியத்தில் போர் முறைகள் – இராம. இராமநாதன் – 1979
4. புறநானூற்றில் அவ்வையும் அதிகனும் – 1981
5. சங்ககால அரசர் வரிசை (பகுதி க) கா. கோவிந்தன் – 1955

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism) மேற்கொள்ளப்பட்டுள்ளது. சிற்சில இடங்களில் ஒப்பீட்டு முறைத் திறனாய்வு (Comparative Criticism) கையாளப்பட்டுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை, பின்னிணைப்புகள் நீங்கலாக ஆறு இயல்களைக் கொண்டமைந்துள்ளது.

| | |
|---|---|
| | முன்னுரை |
| இயல் 1 – | சங்க இலக்கியங்களில் அரசப்புலவர்கள் |
| இயல் 2 – | அரசப் புலவர்களின் புலமை நலம் |
| இயல் 3 – | அரசப் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள் |
| இயல் 4 – | அரசப் புலவர்களும் பிற புலவர்களும் |
| இயல் 5 – | அரசப் புலவர்களும் போர்களும் |
| இயல் 6 – | அரசப் புலவர் பாடல்களில் நோக்கு |
| | முடிவுரை |
| | பின்னிணைப்புகள் |
| | துணை நூற்பட்டியல் |

## முன்னுரை

இவ்வியலில் ஆய்வுப் பொருள் தேர்வு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு முன்னோடிகள், அணுகுமுறைகள், ஆய்வேட்டின் வடிவமைப்பு ஆகியவை விளக்கப் பெற்றுள்ளன.

## இயல் 1

சங்க நூல்கள் எனப்படுபவை பாட்டும் தொகையும் என்பன. இவற்றில் இடம்பெறும் புலவர்கள் 473 பேர்[1]. இவர்கள் பாடிய சங்கப் பாடல்கள் 2381. இவர்களில் நாடாளும் மன்னர்களே புலமை நலம் பெற்றுப் பாடிய பாடல்களும் உள்ளன. இந்த அரசப் புலவர்களின் தொகை 30 எனவும், 31 எனவும், 28 எனவும் அறிஞரிடையே கருத்து வேற்றுமைகள் நிலவுகின்றன. அவற்றை இவ்வியல் ஆராய்ந்து எண்ணிக்கை இன்னதெனத் துணிகின்றது.

பண்டைக் காலத்தில் தமிழ் ஆராய்ந்த மூன்று சங்கங்கள் (முதல் – இடை – கடை) பற்றியும் அறிஞரிடையே கருத்து வேற்றுமைகள் காணப்படுகின்றன. அவை பற்றியும் இவ்வியல் ஆராய்கின்றது.

## இயல் 2

மன்னர்கள் நாட்டிலுள்ள மக்களின் நலம் நாடுவதிலேயே சிந்தனை செலுத்துவர். புலவர்களைப் பொன்னும் பொருளும் தந்து போற்றுவர். ஆனால் தாங்கள் புலமை பெற்றுக் கவிதை பாடுவதில்லை. இதற்கு மாறாகச் சங்கப் பாடல்களில் பல பாடல்களை அரசர்களே பாடியுள்ளனர். அப்பாடல்களில் அமைந்துள்ள சொல் நயம், பொருள் நயம், கற்பனை, உவமை நயம் போன்றவற்றை இவ்வியல் விளக்குகின்றது.

## இயல் 3

சமுதாயம் இன்று வளர்ந்துள்ளது. மக்கள் தொகை பெருகியுள்ளது. பண்டை நாட்களில் இத்தொகை குறைவு. குறைந்தாலும் கூடினாலும் வாழ்க்கை நிலையின் அடிப்படையான வீரம், காதல், அன்பு, தியாகம், கொடைத் தன்மை போன்ற பண்புகள் மாறுவதில்லை. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட மக்கள் வாழ்க்கையில் சமுதாயம் நன்னிலை பெற்று வாழ்வதற்காகச் சான்றோர் கூறிய சிந்தனைகள் இவ்வியலில் ஆராய்ந்து தெளிவுறுத்தப்படுகின்றன.

## இயல் 4

அரசர்கள் நிலை வேறு, புலவர்கள் நிலை வேறு. அரசர்கள் புலவராவது அருமை. அத்தகைய புலமையைப் பெற்றுள்ள அரசர்களும் குருகுலக் கல்வியைப் பெற்றோ, தனிப்பட்ட முறையில் நூல்களைப் பயின்றோ புலமை பெற்ற தமிழ்ப் புலவர்களும் எவ்வாறு ஒன்றுபட்டுச் சிந்தித்துச் செயலாற்றினர் அல்லது வேறுபடுகின்றனர் என்பதை இவ்வியல் சீர்தூக்கி ஆராய்கின்றது.

---

[1] டாக்டர் வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.328.

## இயல் 5

பண்டைத் தமிழகத்தில் போர்கள் இடைவிடாமல் நடைபெற்று வந்துள்ளன. அயல் நாட்டுப் போர்கள் மட்டுமன்றி, உள்நாட்டுப் போர்களும் இடைவிடாமல் நடந்து வந்துள்ளன. முடியுடை மூவேந்தர்கள் தம்முள் ஒற்றுமையாக இருந்தனர் என வரலாறு இல்லை. அவர்களில் புலவர்களாக இருந்த அரசர்கள் செய்த போர்களையும் அவற்றின் விளைவுகளையும் இவ்வியல் விரித்துரைக்கின்றது. அரசர்களிடையே நடந்த போர்களைத் தவிர்க்கப் புலவர்கள் எவ்வெவ்வாறு முயன்றனர் என்பதையும் சங்கப் பாடல் துணை கொண்டு ஆராய்ந்து நிறுவுகிறது.

## இயல் 6

'நோக்கு' என்பது தொல்காப்பியரால் கூறப்படும் ஒருவகை இலக்கணக் கூறு. மாத்திரை முதல் அடிநிலை ஈறாகக் கூறப்பெறும் செய்யுள் உறுப்புகள் அனைத்தையும் (34) முழுநிலையில் பார்ப்பது 'நோக்கு'[2] என்பர் தொல்காப்பியர்.

தொல்காப்பியத்தைத் தவிர நன்னூல் முதலிய பிற்கால இலக்கண நூல்களில் 'நோக்கு' பற்றிய செய்திகள் இல்லை. இந்நோக்கு பற்றிய போக்கினை இவ்வியல் ஆராய்கின்றது.

## முடிவுரை

மேற்கண்ட ஆறு இயல்களிலும், ஆராய்ந்து கண்ட முடிவுகள் முடிவுரையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அவற்றுள் இன்றியமையாத தீர்வுகள் தொகுக்கப்பெற்று முடிவுரைப் பகுதியில் இடம் பெற்றுள்ளன. தொடர்ந்து ஆய்வு மேற்கொள்வதற்கு உரிய களங்களும் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளன.

## துணைநூற் பட்டியல்

ஆய்வுக்குத் துணை செய்த பிற அறிஞர்களின் நூல்கள் துணை நூற்பட்டியலாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

## பின்னிணைப்பு

புலவராக விளங்கிய வேந்தர்கள் தம் பாடல்களில் பயன்படுத்திய அரிய தொடர்கள், உவமைகள், உலகியல் உண்மைகள், நம்பிக்கைகள் போன்றவை தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

---

[2] பேராசிரியர் சுப்பிரமணியன். ச.வே., தொல்காப்பியம் தெளிவுரை செய்யுளியல், சூ.103, ப.537.

# இயல் – 1

# சங்க இலக்கியத்தில் அரசப் புலவர்கள்

## முன்னுரை

சங்க நூல்கள் என்பவை கடைச்சங்கத்தில் தொடுக்கப்பட்ட எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் ஆகிய மேற்கணக்கு நூல்கள் பதினெட்டையும் குறிக்கும்.

இவை புலவர்கள் பல இடங்களில் பல சூழல்களில் பாடப்பட்ட தனிப்பாடல்களின் தொகுப்புக்கள். இப்பாடல்களின் தொகை 2381. பாடிய புலவர்கள் 473 பேர்.[3]

புலவர்கள் மட்டுமன்றி அரசர்கள் பாடிய பாடல்களும் சங்க இலக்கிய நூல்களில் காணப்படுகின்றன. அவ்வாறு பாடிய அரசப்புலவர்கள் எத்தனை பேர் என்பதில் அறிஞரிடையே கருத்து வேறுபாடு உள்ளது.

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அரசப் புலவர் முப்பத்தொருவர் என்பர்.

பேராசிரியர் ந. சஞ்சீவி அரசப்புலவர்கள் இருபத்தொன்பதின்மர் என்பர்.

முனைவர் அரங்க. இராமலிங்கனார் நூலில் இருபத்தெட்டு என்று குறிக்கப்பெற்றுள்ளது.

இக்கருத்துக்கள் யாவும் இவ்வியலில் ஆராயப்பெற்று, அரசப்புலவர்களை வரையறை செய்வதே முதன்மை நோக்கமாகும். மேலும், தமிழ்ச்சங்கம் மூன்று இருந்ததில்லை என்பர் சிலர். இக்கருத்து பற்றியும், சங்கம் பற்றிய அயல்நாட்டினர் கருத்தும் ஆராயப்பெறுகின்றன.

## சங்ககால அரசர்கள்

சங்க காலம் என்பது பொதுச் சொல் எனினும் அது கடைச்சங்க காலத்தையே குறிக்கும் என்பது முன்னர் சுட்டப்பட்டது.

சங்க காலத்தில் சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தரே தமிழகத்தை ஆண்டதாகத் தொல்காப்பியம் கூறுகிறது.

*"வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்*
*போந்தை வேம்பே ஆர்என வரூஉம்*
*மாபெருந் தானையர்"*[4]

என்ற அடிகள் முடியுடை மூவேந்தரைக் குறிப்பது காணலாம். இவர்களில் பலர் புலவர்களாகவும் விளங்கினர். இவர்கள் பாடிய 127 பாடல்கள் சங்க இலக்கியங்களில்

---

[3] வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.328.
[4] தொல். பொருள். புறத்திணையியல், சூ.5.

இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் சொற்செறிவும் பொருட்செறிவும் உடையனவாய்ப் புலவர்கள் பாடிய பாடல்களைக் காட்டினும் சிறந்து நிற்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

சங்க நூல்கள் முடியுடை மூவேந்தர்களையும், குறுநில மன்னர்களையும், கொடைத்தன்மை மிக்க வள்ளல்களையும் பற்றிப் பேசுகின்றன. இவர்கள் அனைவரும் புலவர்கள் அல்லர். இவர்கள் அனைவரிலும் 31 பேர்களே புலவராய்த் திகழ்ந்து பொருள் நலம் வாய்ந்த அமர கவிதைகளைப் பாடினர் என்பது அறியத்தக்கது.

சங்க காலத் தமிழ் மன்னர்கள் புலவர்களைப் பெரிதும் ஆதரித்தனர். பொன்னும் பொருளும் கொடுத்துப் போற்றினர். தமிழ்ப் புலவர்களை ஆதரித்ததோடன்றித் தாமே புலவர்களாக இருந்து தமிழை வளர்த்தனர்.

பாண்டிய மன்னர்கள் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தனர். தமிழை ஆராய்ந்து தக்க தகுதியுடைய தமிழ் நூல்களைத் தொகுத்தனர்.

மற்ற சேர – சோழ மன்னர்களைக்காட்டிலும் தமிழுக்கு அதிகம் தொண்டாற்றியவர்கள் பாண்டிய மன்னர்களே. இவர்கள் சங்கம் வைத்துத் தமிழ் ஆய்வு நிகழ்த்திய செய்தியை,

*"தொல்லாணை நல்லாசிரியர்*
*புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்*
*நிலந்தரு திருவின் நெடியோன்"*[5]

என மதுரைக் காஞ்சியும்,

*"பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்*
*அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து*
*வான்தோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ*
*அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை"*[6]

என அகநானூற்று உரைப்பாயிரமும் கூறுவதால் நன்கறியலாம்.

இவ்வாறு தமிழ்ச்சங்கங்கள் வைத்துத் தமிழை வளர்த்த காரணத்தாலேயே பாண்டிய மன்னர்களில் பலர் தமிழ்ப் பற்று மிகுந்து தமிழ்ப் புலவர் ஆயினர் எனக் கருதலாம். ஏனெனில், மற்றச் சேர சோழ மன்னர்களைக் காட்டிலும் பாண்டிய மன்னர்களிலேயே அரசப் புலவர்கள் மிகுதியாக உள்ளனர் என்பது நினையத்தக்கதாக உள்ளது.

---

[5] மதுரைக்காஞ்சி, 761–63.

[6] பால்வண்ணதேவன் வில்லவதரையன், அகநானூறு, உரைப்பாயிரம்.

அரசப் புலவர்களின் பாடல்களில் கருத்தாழம் மிக்கவை, பல்நோக்குத் திறன் கொண்டவை. வானுலக வாழ்வையும் பரலோக இன்பத்தையும் பேசாமல், அவை நில உலகிற்கேற்ற வாழ்வியல் முறைகளை உணர்த்துகின்றன. தமிழ்ப் பெருமையைப் பேசுகின்றன. புலவர்களின் மாண்பை மதிக்கின்றன.

தமிழின் மீதும் தமிழ்ப் புலவர்கள் மீதும் அவர்கள் கொண்டிருந்த அன்பை வெளிப்படுத்துகின்றன. பெண்ணின் பெருமையைப் பேசுகின்றன. கல்வியின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றன.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஓர் அரசப் புலவன். அவனது பாடல் புறநானூற்றில் 183ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. அப்பாடல் குருகுலக் கல்வியின் அவசியத்தை எடுத்துரைக்கின்றது.

*"கற்கை நன்றே, கற்கை நன்றே,*
*பிச்சை புகினும் கற்கை நன்றே"*[7]

என்றார் அதிவீரராம பாண்டியர். அதற்கு முன்னோடியாக அமைந்தது நெடுஞ்செழியனின் பாடல்.

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"*[8]

எனக் கல்வியின் அவசியத்தை வற்புறுத்துகின்றது.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் பாடல் புறநானூற்றில் 71–ஆம் பாடலாக அமைந்துள்ளது.

"தமிழ் வேந்தர்கள் தமது நீதிமன்றங்களில் நடுநிலை தவறாத சான்றோர்களையே நீதிவழங்கும் நடுவர்களாக நியமித்திருந்தனர் என்பதை அப்பாடல் எடுத்துரைக்கின்றது. இப்பாண்டியன் தான்கூறிய வஞ்சினத்தில் 'என்னை எதிர்த்துப் போருக்கு வந்த மன்னரை ஆரமர் அலறப் பொருது புறங்காண்பேன்; காணேனாயின் அறநிலை தவறாத எனது நீதிமன்றத்தில் திறனிலாத திறப்பாடு இல்லாத ஒருவனை நீதிபதியாக அமர்த்தி முறையற்ற கொடுங்கோல் செய்தேன் ஆகுக!" என்று கூறுகின்றான்.

*"அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தேனாகுக!"*[9]

---

[7] வெற்றிவேற்கை – 35.
[8] புறநானூறு, 183, 1–2.
[9] மேலது, 71, 7–9.

என்ற அடிகளில் இவனது நீதிதவறாத நெடிய செங்கோல் மாட்சியை மட்டுமல்ல, நயம் மிக்க புலமையின் ஆட்சியையும் காண முடிகிறது.

கணைக்கால் இரும்பொறை போன்ற சேர மன்னர்கள் பாடிய பாடல்களும் சங்க நூல்களில் இடம் பெற்றுள்ளன.

*"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்"*[10]

எனத் தொடங்கும் கணைக்கால் இரும்பொறையின் பாடல் தமிழ் வேந்தரின் மான உணர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என்பானது பாடல் ஒருவன் மனைவியை இழக்கும் துயர் எத்துணைத்து என்பதை எடுத்துக் கூறுகிறது.

குறிஞ்சி பாடுவதில் வல்லவர் கபிலர். "கருதும் குறிஞ்சி கபிலன்" என்ற தொடர் இதனைப் புலப்படுத்தும். அதுபோல பாலை பாடுவதில் வல்ல அரசப் புலவர் பாலைபாடிய பெருங்கடுங்கோ. பாலைக்கலியில் உள்ள முதல் 35 பாடல்களைப் பாடியவர் இவர். புறநானூற்றிலும் இவர் பாடிய பாடல் இடம் பெற்றுள்ளது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் அரசப் புலவர்களில் குறிப்பிடத்தக்கவனாவான். இவனது பாடல் சொற்சுவை பொருட்சுவைகளில் மிகுந்து விளங்குகின்றது. இவ்வாறு புலமையில் சிறந்து விளங்கிய அரசப் புலவர்களை தமிழறிஞர்கள் ஆராய்ந்து, பட்டியலிட்டுள்ளனர். அவற்றுள்ளும் வேறுபாடுகள் உள்ளன.

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை கூறும் அரசப்புலவர்கள் – 31 பேர். அவர்கள் பெயர் (அகர வரிசையில்)

1. அண்டர் மகன் குறுவழுதியார்
2. அறிவுடை நம்பி
3. ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன்
4. இளந்திரையனார்
5. இளம்பெருவழுதி
6. உக்கிரப்பெருவழுதி
7. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
8. கருவூர் சேரமான் சாத்தன்
9. கோப்பெருஞ்சோழன்
10. செம்பியனார்
11. சேரமான் இளங்குட்டுவன்
12. சேரமான் கணைக்கால் இரும்பொறை
13. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
14. சேரமானெந்தை
15. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
16. சோழன் நலங்கிள்ளி

[10] மேலது, 74.

17. சோழன் நல்லுருத்திரன்
18. நம்பிகுட்டுவன்
19. நல்வழுதியார்
20. பாண்டியன் அறிவுடைநம்பி
21. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
22. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்
23. பாண்டியன் பன்னாடுதந்தான்
24. பாண்டியன் மாறன்வழுதி
25. பாலைபாடிய பெருங்கடுங்கோ
26. பெருவழுதி
27. மருதம்பாடிய இளங்கடுங்கோ
28. மாலைமாறன்
29. மாவளத்தன்
30. முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்
31. முடத்திருமாறன்

ஆக 31 பேர்

சங்க நூல்களில் பாடல்களைப் பாடியுள்ள அரசப்புலவர்கள் 29 பேர் என்று பேராசிரியர் ந. சஞ்சீவி கூறுகிறார். அவர்கள் பெயரைக் கீழ்வரும் பட்டியல் குறிக்கின்றது.

## பாண்டிய நாட்டு அரசப் புலவர்கள் – 14 பேர்

1. அண்டர் மகன் குறுவழுதியார்
2. அறிவுடை நம்பி
3. இளம்பெருவழுதி
4. உக்கிரப்பெருவழுதி
5. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
6. நல்வழுதியார்
7. பாண்டியன் அறிவுடைநம்பி
8. பாண்டியன் ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன்
9. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்
10. பாண்டியன் பன்னாடு தந்தான்
11. பாண்டியன் மாறன் வழுதி
12. பெருவழுதி
13. மாலைமாறன்
14. முடத்திருமாறன்

ஆகப் பதினால்வர்.

## சோழநாட்டு அரசப்புலவர்கள் – 6 பேர்

1. கோப்பெருஞ்சோழன்
2. செம்பியனார்
3. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
4. சோழன் நலங்கிள்ளி

5. சோழன் நல்லுருத்திரன்
6. மாவளத்தான்

ஆக அறுவர்.

**சேர நாட்டு அரசப்புலவர்கள் – 9 பேர்**

1. கருவூர்ச் சேரமான் சாத்தன்
2. சேரமான் இளங்குட்டுவன்
3. சேரமான் கணைக்கால் இரும்பொறை
4. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
5. சேரமானெந்தை
6. நம்பிகுட்டுவன்
7. பாலை பாடிய பெருங்கடுங்கோ
8. மருதம்பாடிய இளங்கடுங்கோ
9. முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்

ஆக ஒன்பதின்மர்.

ஆக இவர் கூறும் புலவர் தொகை

பாண்டிய நாட்டு அரசப் புலவர்கள் – 14 பேர்.

சோழ நாட்டு அரசப் புலவர்கள் – 6 பேர்.

சேரநாட்டு அரசப்புலவர்கள் – 9 பேர்

மொத்தம் – 29 பேர்

ஆய்வறிஞர் டாக்டர் அரங்க இராமலிங்கம் அவர்கள் பதிவு செய்துள்ள அரசப்புலவர்களின் பட்டியல் சற்று வேறுபடுகிறது. அப்பட்டியல் கீழே தரப்படுகிறது.

புலவராக விளங்கிய பாண்டிய மன்னர்கள் – 13 பேர் அவர்களின் பெயர் (அகர வரிசையில்)

1. அண்டர் மகன் குறுவழுதியார்
2. அறிவுடை நம்பி
3. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
4. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
5. கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதி
6. கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி
7. குறுவழுதி
8. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்
9. நல்வழுதி
10. மதிவாணன்
11. மாலைமாறன்
12. மாறன்வழுதி
13. முடத்திருமாறன்

ஆக பதின்மூவர்.

## சோழ மன்னர்கள்

சோழர்களில் அரசப் புலவர்கள் – 5 பேர். அவர்கள் பெயர்

1. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்
2. கோப்பெருஞ்சோழன்
3. நல்லுருத்திரன்
4. நலங்கிள்ளி
5. மாவளத்தான்

ஆக ஐந்து பேர்.

சேர மன்னர்களில் அரசப்புலவர்களாக விளங்கியவர்கள் – 13 பேர். அவர்கள் பெயர்

1. இளங்குட்டுவன்
2. கணைக்கால் இரும்பொறை
3. கருவூர்ச் சாத்தன்
4. குட்டுவன் கண்ணன்
5. கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
6. சேரமானெந்தை
7. நம்பிகுட்டுவன்
8. பாலைபாடிய பெருங்கடுங்கோ
9. மருதம்பாடிய இளங்கடுங்கோ
10. முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்

ஆகப் பத்து பேர்

பாண்டிய மன்னர்கள் – 13 பேர்

சோழ வேந்தர்கள் – 5 பேர்

சேர மன்னர்கள் – 10 பேர்

ஆக அரசப்புலவர்கள் 28 பேர்.

## ஆய்வுக் குறிப்பு

- இங்கு குறிப்பிட்ட தமிழ் மன்னர்களேயன்றி ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தனும் தமிழ்ப்புலவனாக எண்ணப்படுகின்றான் என்பது குறிப்பிடத்தக்கது.
- தமிழ்நிலை பெற்ற தாங்கரு சிறப்பினை உடைய மதுரையில் அரசப்புலவர்கள் மிகுதியாய் இருந்தமை நினைக்கத்தக்கது.
- சோழநாட்டு அரசப் புலவர்களை விடச் சேரநாட்டு அரசப் புலவர் தொகை மிக்கிருந்தது குறிப்பிடத்தக்கது.
- மேற்குறித்துள்ள பட்டியலில், அறிவுடைநம்பியும் பாண்டியன் அறிவுடைநம்பியும் ஒருவரே என்பது நினைக்கத்தக்கது.

- மேற்குறித்த பட்டியலில், பாண்டிய மன்னர்கள் வரிசையில் மதிவாணன் பெயர் இடம் பெறத்தக்கதே. அவன் தமிழ்ப்பற்றாளன், தமிழ் வளர்ச்சியில் நாட்டம் கொண்டவன். அவன் இயற்றியது நாடகத் தமிழ் நூலேயன்றி, சங்கப் பாக்கள் ஒன்றுமில்லை. ஆகவே, சங்கப் பாடல்கள் யாத்த அரசப்புலவர் வரிசையில் வைத்து எண்ணத்தக்கவன் அல்லன்.
- அடுத்து, சோழர்கள் வரிசையில், நல்லுருத்திரன் வேறு, சோழன் நல்லுருத்திரன் வேறு. சோழன் நல்லுருத்திரன் அரசப்புலவனாவான். அவன் பாடிய பாடலொன்று புறநானூற்றில் (190) இடம் பெற்றுள்ளது. ஆகவே அரசப் புலவர் பட்டியலில் நல்லுருத்திரனைச் சேர்ப்பது பொருத்தமாகாது.
- பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை குறிப்பிட்ட பட்டியலில் உள்ள 31 புலவர்களில், அரசப்புலவர்கள் 30 பேர் என்பது பொருந்தும்.
- பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் என்பவர் அரசப் புலவராக இருப்பார் என்று கருதுவாரும் உளர். ஆயின், அல்லர் என்பதற்குச் சான்றுகள் உள. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் குட்டுவன் கண்ணன் சேரமன்னன் என்று கருதுவர். அதற்கான சான்றுகள் எவையும் கிடைக்கப் பெற்றில. எனவே, அவன் குட்டநாட்டுப் புலவனாகக் கருதுதல் சாலப் பொருத்தமானதாகக் கருதலாம். களஞ்சியம் தொகுதி மூன்றில் அதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன.

அரசப் புலவர்கள் முப்பதின்மர் என்பது கண்டறியப் பெற்றுள்ளது (காண்க. பின்னிணைப்பு). அவர்கள் பாடியுள்ள பாடல்களின் துணைகொண்டு அவர்களைப் பற்றிய செய்திகள் இங்கு தரப்படுகின்றன. அகர வரசையில் அவர்களைப் பற்றிய செய்திகள் விளக்கப்படுகின்றன.

## 1. அண்டர் மகன் குறுவழுதியார்

பாண்டிய மன்னர்களில் மூன்று அகப்பாடல்களைப் பாடியவர் இவர். மூன்றும் களவுத்துறை பற்றியன. கூறுபவள் தோழி; கேட்பவள் தலைவன்.

பெண்ணின் உறுப்பு நலன்களை வருணிப்பதில் திறன் பெற்றவர் இளவனப்பை நுண்மை உடையதாக இவர் புனைந்துள்ளார்.

கூந்தல் நெளிவையும், பின்னத்தக்க நீளத்தையும் உடையது. மார்பில் பொன் போன்ற மஞ்சள் நிறம் கொண்ட சுணங்கு பரந்துள்ளது. முலைக்காம்பு வீங்கிக் கச்சினை நெரிப்பது என்று பாடுகின்றார்.

*"பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென*
*ஆகத்தரும்பிய சுணங்கும் வம்புவிடக்*
*கண்உறுத்து எழுதரு முலையும், நோக்கி;[11] "*

என்பது இவர் புனையும் இளங்குமரியின் வனப்பு. குறுவழுதி படைத்துக் காட்டும் தோழி அறிவுநலம் மிக்கவள். நமது கண்போல் குவளை மலர்ந்துள்ள சுனையில் தலைவன் பகல் முழுதும் நம்மோடு கூடிவிளையாடினால் என்ன? அதன்பின் நம்மைத் தொடர்ந்து நம் ஊருக்கு வந்தால் என்ன? என்று அவள் வினவுகிறாள். இவளும் தலைவியும் களவுப் புணர்ச்சியை மிகவும் விரும்புபவர்கள் என்பது இதனால் தெரிகிறது.

## 2. பாண்டியன் அறிவுடைநம்பி

அறிவுடைநம்பி என்ற பெயர் பாண்டியன் என்ற அடையுடன் சேர்ந்து பாண்டியன் அறிவுடைநம்பி எனவும் காணப்படுகிறது. இதனால் இவ்விருவரும் வெவ்வேறானவர் என்று சிலர் கருதினர்.

பேராசிரியர் ந. சஞ்சீவியும் எஸ். வையாபுரிப்பிள்ளையும் இக்கருத்தினர். நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் என்ற நூலாராய்ச்சி நிலையத்தின் பதிப்புக் குழுவினர் தாம் வெளியிட்ட பாட்டும் தொகையும் என்ற நூலில் இருவரும் ஒருவரே எனக் கொண்டனர்.[12]

பதிப்புத்துறை வல்லுநரான டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் தாம் பதிப்பித்த புறநானூறு பாடினோர் வரலாற்றில்,

பாண்டியன் அறிவுடைநம்பி – இவர் அரசர். புதல்வர்களால் உண்டாகும் இன்பமானது இம்மை இன்பம் எல்லாவற்றினும் சிறந்தது என்பதை இவர் "படைப்புப் பலபடைத்து" என்னும் பாடலால் நன்கு விளக்கியிருக்கின்றார். இவர் காலத்துப் புலவர் பிசிராந்தையார் என்று குறிப்பிடுகிறார்.[13]

எனவே, இவர் அறிவுடைநம்பி இருவர் எனக் கொள்ளாது பாண்டியன் அறிவுடைநம்பி என்ற பெயருடைய ஒருவரேயாவர் எனக்கொண்டார் என்பது புலப்படுகின்றது.

அறிவுடை நம்பி பாடியுள்ள சங்கப் பாடல்கள் : நற்றிணை – 15; குறுந்தொகை – 230; பாண்டியன் அறிவுடைநம்பி என்ற பெயரோடு குறிக்கப்பட்ட அகநானூறு – 28; புறநானூறு – 188 ஆகியவையாகும்.

---

[11] அகநானூறு; 150; 1–3.
[12] ஆசிரியக் குழுவினர்; 'பாட்டும் தொகையும்', நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், ப.11.
[13] டாக்டர் உ.வே. சாமிநாதய்யர்; (பார்) புறநானூறு பாடினோர் வரலாறு; ப.31.

இவர் புறநானூற்றில் பாடிய பாடலில் "இம்மையில் பெறவேண்டிய செல்வங்களை எல்லாம் படைத்துப் பலருக்கும் விருந்தளித்துப் பலரோடு உண்ணும் பெருஞ்செல்வராயினும்,

குறுகுறுவென்று தவழ்நடை நடந்து, தன் சிறு பிஞ்சுக் கையை நீட்டி, கலத்தில் உள்ள உணவைத் தரையில் சிந்தியும், பிசைந்து தோண்டியும், வாயால் கவ்வியும், கையால் துழாவியும், நெய் கலந்த உணவை உடம்பில் பூசியும் – இவ்வாறு பல இன்பந்தரும் செயல்களைச் செய்து அறிவை மயக்கும் புதல்வரைப் பெறாதவர்கட்குத் தாம் வாழும் நாளில் பெறவேண்டிய பயன் எதுவுமில்லை" என்ற அரிய கருத்தொன்றினை அமைத்துப் பாடியுள்ளார்.

### 3. ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்

சங்க காலத்தில் ஆரிய அறிஞர் சிலர் தமிழ் மீது விருப்பமுற்றுத் தமிழ்ப்புலவரை நாடித் தமிழ் பயின்று புலவர்களாய் விளங்கினர் என இலக்கியங்களால் அறிகிறோம். ஆரியவரசன் பிரகத்தன் என்பான் கபிலரை அடுத்துத் தமிழ் பயில விரும்பினான் எனவும், அவனுக்குள் தமிழின் பாங்கு இன்னதென அறிவுறுத்துவதற்காகக் கபிலர் குறிஞ்சிப்பாட்டை இயற்றினார் எனவும் வரலாறு கூறுகின்றது[14]. அவன் வேறு; ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன் வேறு.

யாழ்ப்பிரமதத்தன் பாடியதாகக் குறுந்தொகையில் 184ஆம் பாடல் அமைந்துள்ளது. களவுப் பாடல், கழறிய பாங்கனுக்குத் தலைவன் கூறியதாகப் பொருளமைதி கொண்டது.

பெண்களின் கண்கள் ஆண்களை வசப்படுத்தும் காமவலை போன்றது என்பதைப் பாடல் விளக்குகின்றது. இவ்வொருபாடலைத் தவிர வேறு எந்தப் பாடலையும் இப்புலவர் பாடவில்லை.

### 4. இளந்திரையனார்

'திரையன்' என்ற சொல் சங்க காலத்தில் பலரும் விரும்பிப் பெயராக வைத்துக் கொள்ளும் சிறப்பைப் பெற்றிருந்தது. தொண்டைமான் இளந்திரையன் என்ற பெயரை நினைக.

இவர் நற்றிணையில் 94, 99–ஆம் பாடல்களைப் பாடியுள்ளார். தொண்டைமான் இளந்திரையன் என்ற மன்னனே இவராகலாம் என பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் கருதுகிறார்.

---

[14] டாக்டர் உ.வே. சாமிநாதய்யர்; (பார்) புறநானூறு பாடினோர் வரலாறு; ப.15

“தொண்டைமான் இளந்திரையன் என்பவர் இவரே. இவர் கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் பாடப்பெற்ற பெரும்பாணாற்றுப்படை கொண்டவர்.

*“ஆழிஇழைப்பப் பகல்போம் இரவெல்லாம்*
*தோழிதுணையாத் துயர்தீரும் – வாழி*
*நறுமாலை தாராய் திரையவோரு என்றும்*
*சிறுமாலை சென்றடையும் போது”*[15]

எனப் பொய்கையாரால் பாராட்டப் பெற்றவரும் இவரே. இவர் நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று பாடல்கள் (94, 99, 106) கிடைத்துள்ளன” என்பதை அவர் எழுதிய உரைக்குறிப்பால் அறியலாம்.

## 5. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

இவர் பாண்டியர் மரபில் வந்த அரசப் புலவர். பரிபாடலில் திருமாலுக்குரிய 15–ஆம் பாடலை இயற்றியவர். கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதியும் இவரும் ஒருவராகவே கருதப்படுகின்றனர்.

இவரைப் பற்றிப் பரோபகாரச் செய்தி கூறல் முதலிய கருத்துக்களில் இருவர் பாடல்களும் ஒத்திருத்தலும், பெயர் ஒற்றுமையும் பிறவும் இக்கருத்தை வலியுறுத்தும்.

கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதியும், இளம்பெருவழுதியும் ஒருவர் எனக் கொண்டால் அவன் பாடிய ‘உண்டாலம்ம’ எனத் தொடங்கும் புறப்பாடல் நினைக்கத்தக்கது.

பண்டைத் தமிழரசர்கள் கருங்கடலிடையே பெருங்கலங்களைச் செலுத்திக் கடாரம், சாவகம் முதலிய நாடுகளுடன் பொருது வென்று அடிப்படுத்தி ஆட்சி செய்ததைக் கடாரம் முதலிய நாட்டு வரலாறுகள் கூறுகின்றன. பாண்டிய நாட்டு அரசகுமாரருள் இளம்பெருவழுதி இளமையிலேயே கற்பன கற்று அக்கல்விக்கேற்ற மேம்பாடு உடையவனாக விளங்கினான். தமிழ்ப்புலவர்களைப் பெரிதும் ஆதரித்தான்; தமிழ் நூல்களைப் பயின்று புலமை பெற்றான். புலவரைப் போற்றும் உள்ளமும், புலமை நலமும் வாய்ந்த இளம்பெருவழுதி கடலில் கலம் ஊர்ந்து செல்கையில் மாண்டான். அதனால் அவனைக் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என ஆன்றோர் குறித்தனர்.

புறநானூற்றில் இவன் பாடியது ஒரேபாடல். அது மற்ற அத்துணைப் பாடல்களினும் பொருட்சிறப்பால் விஞ்சி நிற்கின்றது.

தனக்குகெனவாழாது பிறர்க்கென வாழும் பண்புடைய பெருமக்களால்தான் உலகம் அழியாமல் நிலைபெற்றுள்ளது என்பர் திருவள்ளுவர்.

[15] பொய்கையார், தனிப்பாடல் திரட்டு, 18.

*"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுவின்றேல்*
*மண்புக்கு மாய்வது மன்"*[16, 17]

'பண்புடையார்' என்று அவர் கூறினாரேயன்றி அப்பண்பு யாது எனக் கூறவில்லை. அப்பண்பு யாது என்பதை விளக்குகின்றது இளம்பெருவழுதியின் பாடல்.

"இந்திரர் உண்ணும் அமுதம் தெய்வவயத்தால் கிடைத்ததெனினும் தான் மட்டும் தனித்து உண்ணார், பலரோடும் கூடியே உண்பர். யார்மீதும் வெறுப்புக்கொள்ளார். பிறர் அஞ்சும் பழிபாவங்கட்குத் தாமும் அஞ்சுவர், எக்காலத்தும் சோம்பலை மேற்கொள்ளார், புகழ் வருவதாயின் அதற்கீடாக உயிரையும் தருவர், பழிவருவதாயின் உலகம் முழுவதும் தரினும் கொள்ளார்.

தமக்கென்று முயலாமல் பிறர் நன்மைக்கென்றே வாழ்வர். இத்தகைய பண்பு உடையவர்களால்தான் உலகம் அழியாது நிற்கின்றது. இதனை விளக்கும் வழுதியின் பாடல்,

*"உண்டா லம்ம இவ் வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்*
*தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்,*
*துஞ்சலும் இலர்; பிறர்அஞ்சுவ தஞ்சிப்*
*புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்*
*உலகுடன் பெறினும்கொள்ளலர்; அயர்விலர்;*
*அன்ன மாட்சி யனைய ராகித்*
*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"*[18]

என்பது.

*"தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்"*

என்ற தொடருக்கு முன்னோடியாக விளங்கியவர் இவரே எனலாம்.

## 6. கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

இவர் பாண்டிய மன்னரில் குறிப்பிடத்தக்கவர். பகைவர் அஞ்சும் தோற்றமும், அதற்கேற்ற பெருமையும் உடைமையால் இப்பெயர் பெற்றார்.

உக்கிரப் பெருவழுதி எனவும், பாண்டியர் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி எனவும் இவர் குறிக்கப்படுகின்றார்.

நற்றிணை 98–ஆம் பாடல் உக்கிரப் பெருவழுதி பாடியதாகவும், அகம் 26–ஆம் பாடல் பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி பாடியதாகவும்

---

16 பின்னத்தூர் அ. நாராயணசாமி அய்யர் (பார்) நற்றிணை உரை பாடினோர் வரலாறு ப.21.
17 திருக்குறள் 996.
18 புறநானூறு 182.

அடிக்குறிப்பு கூறுகிறது. திருவள்ளுவ மாலையில் ஒரு பாடல் உள்ளது. ஆக இவன் பாடியனவாக மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன.

இவன் தன் பகைவனாகிய வேங்கை மார்பனை வென்று அவனுக்குரிய கானப்பேரெயில் என்னும் ஊரைக் (காளையார்கோயில்) கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என அழைக்கப்பட்டான்.

கானப்பேரெயில் என்பது அக்காலத்தில் வலிமை மிக்க அரண் காப்பு உடையதாக பலம்பெற்றிருக்க வேண்டும். பெருவழுதி அதனை அழித்த செய்தியை,

*"நிலவரை இறந்த குண்டுகண் ணகழி*
*வான்தோய் வன்ன புரிசை, விசும்பில்*
*மீன்பூத் தன்ன உருவ ஞாயில்*
*கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை*
*அருங் குறும்புடுத்த கானப் பேரெயில்"*[19]

என ஐயூர் மூலங்கிழார் புனைந்துரைப்பதால் அறியலாம். இப்பெருவழுதியின் அவையில் திருக்குறள் அரங்கேறியதென்பர். அகநானூற்றைத் தொகுப்பித்தவன் இவனே.

### 7. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள ஒலியமங்கலம் என்னும் சிற்றூரே அக்காலத்தில் 'ஒல்லையூர்' என்று வழங்கப்பட்டிருந்ததாக அங்கு கிடைத்துள்ள சாசனம் ஒன்றால் அறியப்படுகிறது. தென்னாட்டில் உள்ள 'பூதப்பாண்டி' என்னும் ஓர் ஊரும் இப்பாண்டியன் பெயரால் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இரண்டும் சேர்ந்து ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என வழங்கப்பட்டிருத்தல் கூடும்.

போரில் வல்லவனான இப்பாண்டியன் கூறிய வஞ்சினச் செய்யுள் ஒன்று புறநானூற்றில் காணப்படுகிறது. அச்செய்யுளில் (புறம்–71) இவன் நான்கு வஞ்சினங்களைக் கூறுகிறான்.

கட்டுக்கடங்காத வீரம் மிகுந்த சேனையை உடைய பகைமன்னர்கள் என்னோடு போரிடவந்துள்ளனர். அவர்களைப் போர்க்களத்தில் போரில் அலறும்படித் தாக்கிப் புறமுதுகு காண்பேன். அவ்வாறு காணேனாயின்,

"என் உயிரிலும் சிறந்தவளும், மதர்த்தமை தீட்டிய கண்களை உடையவளும் ஆகிய என் அருமை மனைவியை விட்டுப் பிரிவேனாகுக!"

"அறநிலை குன்றாத எனது நீதிமன்றத்தில் நடுநிலைமையும் அறத்தின் திறப்பாடும் இல்லாத கயவன் ஒருவனை நீதிபதியாக அமர்த்திச் செங்கோலை வெங்கோல் ஆக்கிய கொடியேன் ஆகுக!"

---

[19] புறநானூறு 21: 2–6.

"மையல் கோமான் மாவனும், மன்எயில் ஆந்தையும், அந்துவஞ் சாத்தனும், ஆதன் அழிசியும், வெஞ்சின இயக்கனும் உள்ளிட்ட நண்பர்களையும் கேளிரையும் பிரிந்து அகல்வேனாகுக!"

"மன்பதை காக்கும் நன்குடியாகிய பாண்டியர் குடியினின்றும் தப்பி அறநிலைஇல்லாத வேறு குடியில் சென்று பிறப்பேனாகுக!" என்று கூறுகிறான். இக்கூற்றினை நோக்குமிடத்து இவன் தன் காதல் மனைவிபால் எழுமையும் தொடரும் பேரன்பு உடையவன் என்பதும், தன் நண்பர்களை விட்டு நீங்காத உயிர் நட்பு உடையவன் என்பதும், அறமன்றத்தில் நீதிதவறாமல் ஆட்சி செய்யும் நேர்மையாளன் என்பதும், பாண்டியர் குடியில் பிறந்திருத்தலைப் பெருமையாக மதிப்பவர் என்பதும் புலப்படுகின்றன.

இவன் பாடியன அகநானூற்றில் – 1, புறநானூற்றில் – 3 பாடல்கள்.

### 8. கருவூர்ச் சேரமான் சாத்தன்

இவன் சேரநாட்டு அரசப்புலவன். இவன் பாடியதாகக் குறுந்தொகையில் ஒரு பாடல் (268) காணப்படுகிறது.

பாடல் களவுப் பாடல். கூறியவள் தோழி; கேட்பவள் தலைவி. தலைவன் இரவுக் குறிக்கண் வந்து சிறைப்புறத்தானாக, வெளியில் நிற்கும் அவன் காதில் விழும்படி தலைவியை நோக்கித் தோழி கூறுகிறாள்.

"என்னருமைத் தோழி! இடியேற்றின் முழக்கத்தோடு கூடிய இந்நள்ளிரவில் நம் தலைவர் நடுயாமம் என்றும் கருதாவராய் நம்பால் வந்து உன் தோள்களை அணையும் கருத்தோடு நிற்கின்றார். அவர் நம்மைவிட்டுப் பிரிந்து போகும்போது செல்கின்றீரோ? என்று கூறும் வன்மையும் இல்லாதவர்கள் ஆனோம். செல்லுகின்றவரை நோக்கி, 'மீண்டும் வருவீரோ?' என்று கேட்டலும் செய்யோம்.

நிலைமை இவ்வாறுள்ளது! நாம் என் செய்ய இயலும்? என்று வருத்தத்தோடு கூறுகிறாள்.

இந்நிலை நீங்கி நன்னிலை தோன்ற வாய்ப்பு யாதெனில் தலைவன் விரைவில் மணஞ்செய்து கொள்ளுதலேயாம் என்ற குறிப்புத் தோன்ற நின்றது.

இப்பாடலைத் தவிர, இவர் வேறு பாடல் எதுவும் பாடியதாகத் தெரியவில்லை.

### 9. கோப்பெருஞ்சோழன்

சோழ மன்னர்களில் அரசப் புலவனாக விளங்கியவன் கோப்பெருஞ்சொழன். கவிதை இயற்றுவதில் வல்லவன். புலவர்களைப் போற்றியதோடன்றி அவர்களை நண்பர்களாகவும் தழுவிக் கொண்டவன்.

பொத்தியார், பிசிராந்தையார் இருவர்க்கும் உயிர் நண்பன்; உறையூரைத் தலைநகரமாகக் கொண்டு அரசாண்டவன்.

புணர்ச்சி வேண்டாமலும், சேர்ந்து பழகாமலும் நட்புத் தோன்றும் என்பதை இவனது வாழ்க்கை வரலாறு விளக்குகிறது.

*"புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான்*
*நட்பாங்கிழமை தரும்"*[20]

என்ற குறளுக்கு எடுத்தக்காட்டானவன். பாண்டிய நாட்டுப் பிசிராந்தையாரும் இச்சோழனும் நேரில் காணாமல் செவியால் கேள்வியுற்று நண்பரானவர்கள். கோப்பெருஞ்சோழன் தன் புதல்வர்களிடம் நேரிட்ட மனக்கசப்பால் வடக்கிருந்து உயிர்நீத்தான். அதனை உணர்ந்த பிசிராந்தையார் தானும் சோழநாடு வந்து அவனுடன் வடக்கிருந்து உயிர்நீத்தார் என்பது வரலாறு.

இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் நான்கு செய்யுள்களும் (20, 53, 129, 147) புறநானூற்றில் மூன்று செய்யுள்களும் (214, 215, 216) இடம் பெற்றுள்ளன.

## 10. செம்பியனார்

செம்பியனார் சோழநாட்டு அரசப் புலவர். இவர் பாடிய செய்யுள் நற்றிணையில் ஒன்று (102). இவரது அகத்திணைப்பாடல் காமமிக்க கழிபடர் கிளவியாக அமைந்துள்ளது.

காதலன் தன்னைப் பிரிந்து நீண்ட நாள் வாராதிருந்தமையால் பிரிவாற்றாத தலைவி கிள்ளை ஒன்றனை நோக்கி, "செவ்வாய்ப் பைங்கிள்ளாய்! நீ என் தலைவர் நாட்டிலுள்ள நின் சுற்றத்தாரிடம் செல்லுங்கால் அங்கே என் தலைவரைக் கண்டு, இம்மலைக் குறவர் மகள், மீட்டும் தினைப்புனம் காவல் செய்வதற்கு வந்தனள்" என்று இவ்வொன்றை மட்டும் சொல்வாயாக!" என்று கூறும் கருத்து சுவைமிக்கதாக அமைந்துள்ளது.

## 11. சேரமான் இளங்குட்டுவன்

'குட்டுவன்' என்ற பெயர் சேரநாட்டில் பெருவழக்காக இருந்து வந்துள்ளது.

சேரன் செங்குட்டுவன், குட்டுவன் கண்ணன், குட்டுவன் கீரன் போன்ற பெயர்களை நினைக. அந்த மரபை ஒட்டி 'இளங்குட்டுவன்' எனப் பெயர் பெற்ற சேர அரசப்புலவர் இவர்.

அகநானூற்றில் 153–ஆம் செய்யுளைப் பாடியவர். மகட்போக்கிய செவிலித்தாய் வருந்திக் கூறியதாகப் பாலைத்திணையில் அமைந்துள்ளது இப்பாடல்.

---

[20] திருக்குறள் 785.

## 12. சேரமான் கணைக்கால் இரும்பொறை

தமிழர்கள் 'மானத்தை' உயிரினும் மேலாகக் கொண்டவர்கள்.

*"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்*
*உயிர் நீப்பர் மானம் வரின்"*[21]

என்பது தமிழரின் வாழ்வியல் நெறி. இதனை,

*"மானமொன்றே நல்வாழ்வெனக் கொண்டு*
*வாழ்ந்த எம்தமிழ் வேந்தர்*
*பூனைகள் அல்லர் அவர்வழி வந்தோர்*
*புலிநிகர் தமிழ் மாந்தர்!"*[22]

என்று பெருமிதத்துடன் பாடினார் பாவேந்தர்.

சங்க காலத்தில் மானத்தைக் காப்பதற்காக உயிர்விட்ட மன்னர்களில் குறிப்பிடத்தக்கவர் கணைக்கால் இரும்பொறை.

இவர் சேரநாட்டு அரசப்புலவர். இவரைக் 'கோச்சேரமான்' என்றும் 'கோமான்' என்றும் புலவர்கள் போற்றுவர். இவன் வீரமும் தீரமும் மிக்கவன்.

சோழ நாட்டை ஆண்டுவந்த செங்கணானுக்கும் இரும்பொறைக்கும் எக்காரணத்தாலோ பகை மூண்டு இருவரும் சேனைகளோடு கழுமலம் என்னுமிடத்தில் பொருதனர்.

போர் நிகழ்ந்த இடம் 'குணவாயிற் கோட்டம்' எனத் தமிழ் நாவலர் சரிதையும், வெண்ணிப் பறந்தலை என நற்றிணை முன்னுரையும், திருப்போர்ப்புறம் என இப்புறநானூற்றுக் குறிப்புரையும் கூறுகின்றன.

போர் கடுமையாக நடந்தது. போர் முடிவில் சேரமான் படை உடைந்தது. இரும்பொறை சிறை செய்யப்பட்டான். சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்த போது ஒரு நாள் சேரமான் நீர் வேட்கையுற்று, காவலரை நீர் கொணருமாறு கட்டளையிட்டான். அவர்கள் அவன் கட்டளையை அவமதித்துச் சிறிது நேரம் சென்று நீர் கொண்டு வந்து தந்தனர்.

அந்த மானத்தைப் பொறாத சேரமான்,

"அரசரானவர்கள் குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும் இவை வாள் வாய்ப்பட்டு மடிந்தாலன்றி நன்மை விளையாது என்று கருதி, அவற்றையும் வாளால் வெட்டிப் பிளந்து அடக்கம் செய்வர்.

---

[21] திருக்குறள் 969

[22] பாரதிதாசன்; இசை அமுது.

அக்குடியில் பிறந்த யான் சிறைவாய்ப்பட்டுக் கைதியாகக் கிடந்து உயிர் நீப்பது பெருந்தீமையாகும். இத்தகைய மறக்குடியினரான எம் பெற்றோர் பகைவன்பால் உணவை இரந்துண்டு உயிர் வாழுமாறு மக்களைப் பெறார்காண்" என்று நினைத்து அக்கருத்தை ஒரு பாடலாக எழுதி வைத்துவிட்டு உயிர்நீத்தான்.

"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்" என்ற புகழ்பெற்ற அப்பாடல் புறநானூற்றில் 74–ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது.

## 13. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

இவன் சேரமன்னர் பரம்பரையில் வந்த அரசப் புலவன். அன்பும், பண்பும், மனைவியின்பாற் காதலும் கொண்டவன்.

கோட்டம்பலம் என்பது சேரநாட்டு ஊர்களில் ஒன்று. இப்போது 'அம்பலப்புழை' என்று வழங்குகிறது. இன்றும் இது தொன்மைச் சிறப்பு வாய்ந்த ஊராகவே விளங்கி வருகிறது.

சேரமான் மாக்கோதை தன் இறுதிநாளில் இக்கோட்டம்பலத்தில் தங்கியிருந்து மடிந்தமையால் 'கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை' எனக் குறிப்பிடப்பட்டான்.

இவன் மனைவி பெருங்கோப்பெண்டு இளம்பருவத்திலேயே இறந்தாள். அவள் பிரிவு மாக்கோதையின் மனத்தில் பெருந்துன்பத்தை விளைவித்தது. அவளது ஈமத்தீயில் எரிந்த வெம்மை அவன் நெஞ்சத்தைச் சுட்டது. அப்பிரிவை ஆற்றாது அவன் உயிர்விட எண்ணினான்.

அதனைக் குறிப்பால் உணர்ந்த சான்றோர்கள், "வேந்தே! காதலிபால் கொண்ட காதலைவிட நாட்டிலுள்ள மக்களின் நலம் பெரியது. அதனால் நாடு காவலைக் கடமையாக மேற்கொள்வாயாக!" என்று அறிவுரை கூறினர்.

அதனால் மனம் தேறிய மாக்கோதை "யாங்குப் பெரிதாயினும்" என்ற பாடல் ஒன்றை நெஞ்சுருகிப் பாடினான். அப்பாடல் புறநானூற்றில் 245–ஆம் செய்யுளாக இடம் பெற்றுள்ளது.

## 14. சேரமான் எந்தை

இவனும் சேரநாட்டு அரசப்புலவனேயாவான். குறுந்தொகையில் 22–ஆம் பாடல் இவன் பாடியது.

பாலைத் திணையைச் சேர்ந்தது இப்பாடல். தலைவன் பிரிந்து செல்வதைக் குறிப்பால் அறிந்த தலைவி பெரிதும் வருந்த அவளுக்குத் தோழி ஆறுதல் கூறுவதாக அமைந்த பாடலாகும்.

தோழி தலைவியை நோக்கி, "பிரிவுத் துயரால் இடையறாது நீர் ஒழுகும் கண்களை உடையவனாய் நீ வருத்தத்தோடு இங்கே இருக்கும்போது, உன்னைப் பிரிந்துசெல்லும் வன்மை உடையவர் யார் இருக்கின்றார்கள் ? வேனிற் காலத்து மலரும் கடம்ப மலர் போன்று மணங்கமழும் நெற்றியை உடையவளே! வருந்தற்க!

தலைவர் பிரிவு உன்னுடன் உடன் போக்கில்தான் நிகழும்" என்று தோழி கூறுகிறாள். வேறு பாடல் எதுவும் இவர் பாடவில்லை.

## 15. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

சோழ மன்னர்களில் மிகச்சிலரே அரசப்புலவர்களாக விளங்கியுள்ளனர். வடநாடுகளை அடுத்து இவர்கள் நாடு அமைந்திருப்பதால் அடிக்கடி போர்கள் நிகழ்ந்து அமைதி குலைந்திருக்க வேண்டும். அதனால்தான் தமிழ்ப் பயிற்சியில் இவர்கள் அதிக ஊற்றம் செலுத்தவில்லை போலும். எனினும் இலக்கிய வரலாற்றை ஆராயும்போது சோழநாட்டு அரசப்புலவர்கள் எழுவரைப் பற்றி அறிய முடிகிறது. அவர்கள்

1. கோப்பெருஞ்சோழன்
2. செம்பியனார்
3. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
4. சோழன் நலங்கிள்ளி
5. சோழன் நல்லுருத்திரன்
6. மாவளத்தான்
7. தொண்டைமான் இளந்திரையன்

என்போராவர். இவர்களில் குறிப்பிடத்தக்க சிறப்புடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.

இவன் பாடிய பாடல் புறநானூற்றில் 173–ஆம் பாடலாக அமைந்துள்ளது. இப்பாடலுக்கு ஒரு தனிப்பெருமை உண்டு. அரசப் புலவர்கள் பலரும் உலகியல் பற்றியோ, வஞ்சினம் பற்றியோ தான் பாடுவர். இக்கிள்ளிவளவன் தன் நண்பனான சிறுகுடிகிழான் பண்ணனைப் பாடி நட்பின் பெருமையை நிலை நாட்டியுள்ளான்.

### சிறுகுடிகிழான் பண்ணன்

சிறுகுடி என்பது சோழநாட்டின் கண்ணதோர் சிற்றூர். அதில் 'பண்ணன்' என்ற வேளாண் பெருமகன் கொடைஉள்ளம் பெற்ற பெருவள்ளலாய் வாழ்ந்து வந்தான். அற்றார் அழிபசி தீர்த்தலே அறம் என்பதை எண்ணி இரவும் பகலும் தன் இல்லத்தில் உணவு சமைத்து அளிக்கும் பேருதவியைச் செய்து வந்தான். அவனது அறச்செயலைப் பாராட்டிக் கிள்ளிவளவன் ஓர் அரிய பாடலைப் பாடினான்.

உணவு பெறவிரும்பும் பாணன் கூற்றாக அமைந்தது அப்பாடல். "யான் வாழும் வாழ்நாளையும் சேர்த்து அப்பண்ணன் வாழ்வானாக!" என்று கிள்ளிவளவன் பாடுவது பொருள் நலம் மிக்கது.

பண்ணன்பால் பரிசில் பெறச்சென்ற பாணன் ஒருவன் வழியில் பரிசில் பெற்று வரும் பாணர் சிலரைக் காண்கிறான். 'பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணனது இல்லம் அணித்தோ ? சேய்த்தோ ?' என்று வினவுகின்றான்.

பண்ணனது அற்றார் அழிபசி தீர்க்கும் அருஞ்செயலைப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றது அப்பாடல்:

"யான் உயிர் வாழும் நாள்களையும் பெற்று பண்ணன் வாழ்வானாக! புதிதாகப் பழுத்த பழுமரத்தில் பறவைகள் கூடி ஒலிக்கும் ஒலி போன்று பண்ணனது இல்லத்தில் இரவலர்கள் உணவுண்ணும் ஒலி கேட்டபடி இருக்கும். மழைவரும் என்பதை அறிந்து தமது முட்டைகளைத் தூக்கிக்கொண்டு மேட்டுநிலத்தை நோக்கிச் செல்லும் சிற்றெறும்பின். வரிசையைப் போன்று, பண்ணன்பால் பெற்ற உணவுருண்டையைப் பாத்திரங்களில் ஏந்தியபடி சிறுவர்கள் வரிசை வரிசையாகச் செல்வதைக் காண்மின்! அப்பண்ணனது இல்லம் அணித்தோ ? சேய்த்தோ ? சொல்லுங்கள்!"

'பசிப்பிணி மருத்துவன்' என்பது அரிய பொருள் நயம் வாய்ந்த தமிழ்ச்சொல். இதனைத் தமிழுக்கு அளித்தவன் இக்கிள்ளிவளவன்.

## ஆய்வுக்குறிப்பு

இப்பாடல் 'பாணன் கூற்றாக வைத்துப் பாடப்பெற்றது' என பழைய உரைக்குறிப்பு கூறுகிறது. இது பொருந்துமா என்பது ஆராயத்தக்கது.

பாணன் ஒருவன் 'யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய' என்று கூறினான் என்பது இயல்புக்குப் பொருந்தாதது. கிள்ளிவளவன் கூற்றென்பதே பொருந்தும்.

"பாணர் காண்க இவன் கடும்பினது இடும்பை" என்பது பண்ணனோடு நெருங்கிப் பழகியவர்களாகத்தான் இருக்கமுடியும். புதிதாக வந்த பாணன் இதனைக் கூறியிருக்க முடியாது. புதிதாக வருபவன் பண்ணனது சுற்றத்தார் படும் துன்பத்தை எவ்வாறு கண்டு கூறியிருக்கமுடியும் ?

உணவு பெற்றுவரும் சிறுவர்களைக் கண்டு, பண்ணன் இல்லம் அணித்தோ, சேய்த்தோ ? என்று வினவியதாகப் பாடல் கூறுகிறது. வினவியது யார் ? பரிசில் பெற வரும் பாணன் அச்சிறுவர்களை நோக்கி வினவியதாகக் கொண்டால் அவன் பரிசில் பெற்று வரும் பாணனை நோக்கிக் கூறினான் என்பது எவ்வாறு பொருந்தும் ?

எனவே, இப்பாடல் பாணன் கூற்று என்பது முற்றிலும் பொருந்தாது. 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய' என்பது முதல் 'அரவம் தானும் கேட்கும்' என்பதுவரை கிள்ளிவளவன் கூற்றாகவே தோன்றுகின்றது. அடுத்து வரும் அடிகள் பாணன் கூற்று எனக் கொள்ளலாம்.

## 16. சோழன் நலங்கிள்ளி

சோழன் நலங்கிள்ளி பாடிய இரண்டு பாடல்கள் (73–75) புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன.

சோழன் நலங்கிள்ளி காலத்தில் சோழநாடு இருபிரிவாக அமைந்து இரு மன்னர்களால். ஆளப்பட்டு வந்தது. நலங்கிள்ளி படையாண்மையும் கொடையாண்மையும் மிக்க பெருவீரன். பூம்புகாரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான். அப்போது நெடுங்கிள்ளி உறையூரில் ஆட்சி புரிந்து வந்தான். இவ்விருவர்க்கும் எக்காரணங் கொண்டோ பகைமை உண்டாயிற்று.

பகைமை அதிகரிக்கவே நெடுங்கிள்ளி, இந்நலங்கிள்ளியை இகழ்ந்து போருக்கு எழுவதற்குரிய சினத்தை உண்டாக்கினான். நெடுங்கிள்ளி தன்மீது இவ்வாறு பகைமை பாராட்டுவதற்குக் காரணம் யாதென நலங்கிள்ளி சிந்தித்தான். தனது நாட்டையும் கைப்பற்ற வேண்டும் என்பதே காரணமாக இருக்கும் என அவன் எண்ணினான். அவ்வெண்ணம் ஒரு பாடலாக வெளிப்பட்டது. நலங்கிள்ளியின் வஞ்சினக் கூற்றாக அமைந்தது அப்பாடல்.

"என் பகைவன் அமைதியாக வந்து என் பாதங்களைப் பணிந்து, 'உன் நாட்டைத் தருக!' என இரந்து கேட்பானாயின் மும்முரசும் முழங்கும் பெருமையை உடையதும் பழைமையாய் வருகின்ற உரிமையை உடையதும் ஆகிய என் அரசு உரிமையை அவனுக்குக் கொடுப்பேன். அவ்வாறு கொடுத்தல் என்பது எளிது. எனது இனிய உயிரை வேண்டினும் தரத் தயங்கேன்.

இந்நிலத்தின்கண் மிக்க வலிமையை உடைய என் ஆற்றலை அறியாது என் ஆண்மையை இகழ்ந்த மடவோன், தூங்கும் புலியைக் காலால் இடறிய குருடனைப் போல இங்கிருந்து உயிர் பிழைத்துச் செல்லல் அரிது!

யான் படையுடன் அவனை எதிர்த்துப் போர்முனையில் சென்று, மூங்கிலைத் தின்னும் வலிமையை உடைய யானையின் காலின்கீழ் அகப்பட்ட மூங்கில் குருத்தைப் போன்று அவனை அழிப்பேன். அவ்வாறு அழியேனாயின் காதல் இன்னதென அறியாத பொதுப்பெண்டிரின் பொருந்தாத முயக்கத்தில் என்மாலை குழைவதாக!" என்ற

வஞ்சினக் கூற்று இவன் பாடலில் அமைந்துள்ளது. பரத்தமை ஒழுக்கத்தைக் கடிந்த கற்புநிலை வாய்ந்தவன் இவன் என்பது இதனால் அறியப்படுகின்றது.

### 17. சோழன் நல்லுருத்திரன்

'உருத்திரன்' என்ற புலவர் பெயர் சங்க நூல்களில் காணப்படுகிறது. சோழன் நல்லுருத்திரன் எனவும் இது குறிக்கப்படுகிறது. இவ்விருவரும் வேறுவேறானவர் என்பது ஆய்வாளர் கருத்து.

"இப்பெயர் சோழன் நல்லுருத்திரன் என்றும், நல்லுருத்திரன் எனவும், உருத்திரன் எனவும் பிரதிகளில் வேறுபட்டுள்ளது"[23] என்றும் உ.வே. சாமிநாதையரின் பதிப்புக் குறிப்பு இதனை வலியுறுத்தும்.

அரசப் புலவனான சோழன் நல்லுருத்திரன் சங்க காலத்துச் சோழவேந்தருள் காலத்தால் பிற்பட்டவன் என்பது இவன் பெயரால் தெரிகின்றது. 'உருத்திரன்' என்பது வடசொல். ஆயினும் இவன் உயர்ந்த உள்ளமும், பரந்த நோக்கமும், சிறந்த கல்விப் பயிற்சியும் உடையவன் என்பது இவன் பாடலால் அறியப்படுகின்றது.

குறுநில மன்னர்களும், செல்வப் பெருமக்களும் எப்போதும் இவனைச் சூழ்ந்த வண்ணம் இருப்பர். அவர்களின் துணைகொண்டு அரிய பல செயல்களைப் புரிந்து புகழும் செல்வமும் பெற்றவன் இவன். தன்னைச் சூழ்ந்திருப்பவர்களில் குறுகிய உள்ளம் உடையவர்களையும் இவன் கண்டான். இவர்களை எண்ணி, எலி முயன்றதைப் போன்று வளம் இல்லாதவராய் வலிய உள்ளம் இல்லாதாரோடு எனது நட்பு இல்லாதாகுக! ஆண் யானையை அடித்து வலப்பக்கத்தே வீழ்த்தும் புலி போன்ற உரன் உடையவர்களோடு எனது நட்பு உளதாகுக! என்ற கருத்தமைந்த பாடலை இவன் பாடியுள்ளான்.

புலிதான் அடித்து வீழ்த்திய பன்றி, யானை முதலியன இடப்புறம் வீழ்ந்தால் அவற்றை உண்ணாது என்பதனை,

*"தொடங்குவினை தவிரா அசைவில் நோன்தாள்*
*கிடந்துயிர் மறுகுவ தாயினும்*
*இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலி"*[24]

என்னும் வெள்ளாடியனார் பாடலால் உணரலாம்.

### 18. நம்பிகுட்டுவன்

சேரமன்னர் பரம்பரையினர் குட்டநாட்டை ஆட்சி புரிந்தமையின் 'குட்டுவர்' என வழங்கப்பட்டனர். செங்குட்டுவன், குட்டுவன் கண்ணன், குட்டுவன் கீரன் போன்ற பெயர்களை நோக்குக. அம்முறையில் நோக்கும்போது இவர் சேரமன்னர் என்பது

---

23 உ.வே. சாமிநாதையர் (பார்) புறநானூறு; பாடினோர் வரலாறு, ப.28.

24 வெள்ளாடியனார், அக.29: 1–3.

புலப்படுகிறது. இவர் அரசப்புலவர். இவர் பாடியனவாக குறுந்தொகையில் இரண்டு செய்யுட்களும் (109, 243) நற்றிணையில் மூன்று செய்யுளும் (145, 236, 345) ஆக ஐந்து செய்யுள்கள் கிடைத்துள்ளன. இவர் நெய்தல் நிலத்தையும், குறிஞ்சி நிலவளத்தையும் பாடியுள்ளார்.

தலைமகன் நாட்டிலுள்ள மலையினின்றும் வீசும் காற்று வந்து வீசினால் தலைவியின் ஆகத்துள் படர்ந்துள்ள சுணங்கு (தேமல்) தணியும் என்று இவர் பாடியிருப்பது காதல் சுவை கனிந்த பாடல் (நற்.236).

இவர் கூறிய உவமை புதுமையானது. எப்புலவரும் கூறாதது. ஆம்பல் மலர்வது காக்கை கொட்டாவி விடுவதைப் போன்றது (நற்.345) என்று கூறுகிறார். இவ்வுவமை எத்துணைப் பொருத்தமானது என்பது சிந்தனைக்குரியது.

நம்பிகுட்டுவனார் என்ற பெயரும் நம்பிகுட்டுவன் என்ற பெயரும் ஒன்றென்றே அறிஞர் கருதுகின்றனர்.[25]

## 19. நல்வழுதியார்

'வழுதி' என்ற பெயரைக் கொண்டே இவர் பாண்டிய மன்னர் என்பதை அறியலாம். இவர் பரிபாடலில் 12–ஆம் பாடலைப் பாடியவர். இப்பாடல் வையை பற்றியது. மதுரையை வளப்படுத்தி நீர் பெருகிப் பாயும் வையையாற்றின் சிறப்பைக் கற்போருக்குக் கண்கூடாகப் புலப்படும்படி பாடியுள்ளார்.

தலைமகன் கேட்பத் தோழி இயற்பழித்தது என்ற துறையில் அமைந்தது இப்பாடல்.

வையைப் புதுநீர்பொங்கிப் பெருகிவரும் இனிய காட்சியும், நீராடும் மகளிர் தம்முள் உரையாடும் சொல்லாட்டங்களும், தன் கணவனை மற்றொருத்தி பார்த்ததால் அவனோடு பிணங்கும் காதலியின் கடுஞ்சொற்களும், பிழை செய்யாத அத்தலைவன் அவளைத் தொழுது 'என் பிழை யாது? யான் பிழைப் பறியேன்' எனப் பணிவாகக் கூறுவதும் இப்பாடலில் சுவைபடக் கூறப்பட்டுள்ளன.

## 20. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

பாண்டிய மன்னர்களில் அரசப்புலவர்களாக இருந்தவர்கள் 13 பேர். அவர்களில் குறிப்பிடத்தக்கவன் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

நெடுஞ்செழியன் என்று பெயர் பெற்ற பாண்டிய வேந்தர்கள் பலர் இருந்ததால் அவர்களிடையே வேற்றுமை தெரிதற்கு இவனைச் சான்றோர் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என அடைமொழி தந்து சிறப்பித்து வழங்கினர்.

---

[25] முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன், (உ.ர்) நற்றிணை மூலமும் உரையும், ப.786.

இவன் கல்வி கற்றல் மிகவும் இன்றியமையாதது என்பதைத் தான் பாடிய புறம் 183–ஆம் பாடலில் வற்புறுத்தியுள்ளான்.

ஆசிரியனுக்கு உற்றுழி எல்லாம் உதவியும் உறுபொருள் கொடுத்தும், வழிபாடு செய்வதில் தயங்காமல் கற்றல் மாணவனின் கடமை என்பதை வலியுறுத்துகின்றான். ஒரு குடியில் பிறந்த மக்களுள் கல்வி கற்றதன் சிறப்பினால் தாயும் மனம் வேற்றுமைப்படுவாள், கல்வியில் சிறந்த அறிவுடை ஒருவனையே அரசனும் விரும்பி அழைத்து அவன் அறிவுரைப்படி ஆட்சி நடத்துவான். அரசர்,அந்தணர், வணிகர்,வேளாளர் என்று வகுக்கப்பட்ட நான்கு பாலாருள்ளும் கீழ்க்குலத்தைச் சேர்ந்த ஒருவன் கல்வி கற்றிருப்பானாயின் மேற்குலத்தைச் சேர்ந்த ஒருவனும் அவனிடத்தே சென்று வழிபடுவான்'' என்று இவன் பாடல் கூறுகிறது.

சங்க காலத்திலேயே இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே முதன்முதலில் இவ்வாறு கல்வியின் சிறப்பை எடுத்துரைத்தவன் இவனே என்று தெரிகிறது.

*"மேல்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்*
*கற்றார் அனைத்திலர் பாடு"*[26]

என்ற குறள் இங்கு நினையத்தக்கது.

## 21. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

பாண்டிய மன்னர்களில் மாபெரும் போராண்மை உடையவனாகவும், அரசப் புலவனாகவும் விளங்கியவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

புறநானூற்றில் 72–ஆம் பாடலாக இவன் பாடிய பாடல் அமைந்துள்ளது. இவனது வஞ்சின மொழி அப்பாடலைச் சிறப்புடையதாக்குகிறது.

இவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபோது இளைஞனாக இருந்தான். இளைஞன் ஆனதால் எளிதில் வென்று ஆட்சியைக் கைப்பற்றி விடலாமென்று கருதிச் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் எழுவர் இவன்மீது படையெடுத்து வந்தனர்.

அவர்களைக் கண்டஞ்சாமல் வஞ்சினம் கூறி எதிர்த்து நின்று வென்றோட்டியவன் இவ்வீரப் பெருமகன். இவன் கூறிய வஞ்சினமே புறப்பாடலாக அமைந்துள்ளது.

அவன் கூறிய வஞ்சின உரை:

---

[26] திருக்குறள் 409.

இவன் வயதில் இளையவன்; அதனால் வீரம் குறைந்த சிறுவன்; போர்ப் பயிற்சி இல்லாதவன் என்று மனம் வருந்தும் வார்த்தைகளைக் கூறி ஏழு மன்னர்கள் என்மீது படையெடுத்து வந்துள்ளனர்.

மணிகள் ஒலிக்கும் யானைகளையும், பாய்ந்து செல்லும் குதிரைகளையும், தேர்களையும், படை வலிமிக்க மறவர்களையும் யாம்பெற்றிருக்கிறோம் என்று கருதி இறுமாப்பினால் சிறுசொற்களைக் கூறிய அவ்வேந்தர்களைப் போர்க்களத்தில் அவர் தம் வலிமை சிதறத் தாக்கிச் சிறைப்படுத்துவேன். அவ்வாறுஅகப்படுத்தேனாயின்,

எனது செங்கோல் நிழலில் வாழும் குடிமக்கள் பல துன்பங்கட்கு ஆட்பட்டு வருந்தி, தாம் அடைக்கலமாகச் சென்றடையும் நிழலைக் காணாமல், 'கொடியன் எம்மன்னர்' என்று குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!

உயர்ந்த கல்வி கேள்விகளை உடைய மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட சங்கத்தைச் சார்ந்த தமிழ்ப்புலவர்கள் என் நிலவெல்லையைப் புகழ்ந்து பாடாமல் நீங்குவாராக!

என்பால் வந்து இரப்பவர்கட்கு எப்பொருளையும் வழங்க இயலாத வறுமையை யான் அடைவேனாக!"[27] என்பது.

இப்பாடலால் இவன் குடிகளின் நலத்தைப் பெரிதும் பாதுகாக்கும் செங்கோல் ஆட்சியை உடையவன் என்பதும், மாங்குடி மருதனாரைத் தலைவராகக் கொண்ட தமிழ்ச்சங்கத்தை நிறுவித் தமிழ் வளர்த்தவன் என்பதும், தன்பால் வந்து இரப்பவர்க்கு அவர்கள் வறுமைதீரும் பொன்னையும், பொருளையும் அள்ளிக் கொடுத்த வள்ளலாக வாழ்ந்தான் என்பதும் அறியப்படுகின்றன.

இவன் தேரில் ஏறிப் போர்க்களம் சென்று பகைவரை எதிர்த்து நின்ற காட்சியை,

*"கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டு*
*குடுமிகளைந்த நுதல் வேம்பின் ஒண்டளிர்*
*நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து*
*குறுந்தொடி கழித்தகை சாபம் பற்றி*
*நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்*
*யார்கொல் ? வாழ்க அவன் கண்ணி!'*[28]

என்று இடைக்குன்றூர் கிழார் பாராட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது. பகைமன்னர்களைத் தலையாலங்கானம் என்னுமிடத்தில் நடந்த போரில் வென்றமையால் இவன் தலையாலங்கரனத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் எனச் சிறப்புப் பெயர் பெற்றான்.

---

[27] புறநானூறு, 72–ஆம் பாடல் பொருள்.
[28] புறநானூறு, 77: 1–6.

## 22. பாண்டியன் பன்னாடு தந்தான்

இப்பாண்டியன் பாடிய செய்யுள் குறுந்தொகையில் 270–ஆம் செய்யுளாக இடம் பெற்றுள்ளது. இது அகப்பாடல். கற்பொழுக்கம் பற்றியது.

வினைமுடித்து மீண்ட தலைவன் தலைவியோடு கூடிமகிழ்ந்த காலத்து, மழையை வாழ்த்தியதாக இப்பாடல் கருத்து அமைகிறது.

"மேகமே! யாம் செய்யவேண்டிய வினைகளைச் செய்து முடித்துத் திரும்பி வந்து, மலர்களின் மணம் கமழ்கின்ற இத்தலைவியின் கூந்தலாகிய பாயலில் கிடக்கப் பெற்றோம்.

ஆதலின் நீ உயிர்கள் தொழில் புரியாமல் தாழ்த்திருப்பதற்குக் காரணமாகிய இருள் நீங்கும்படி மின்னலை மின்னி, குளிர்ச்சி பொருந்திய நுண்டுளிகளை மென்மையாகச் சிதறி, குறுந்தடியால் அடிக்கப்பெறும் அரசர்களின் முரசம் போலப் பலமுறை இடித்து முழங்கி மழையைப் பெய்வாயாக! நீ வாழ்க!" என வாழ்த்துகிறான்.

மழையை வாழ்த்தும் அளவுக்கு இவர் நல்லுள்ளம் கொண்டவர் எனத் தெரிகிறது. வேறு பாடல்களை இவர் பாடாமையாலும், இவரை எப்புலவரும் பாடாமையானும்,இவர் பற்றிய செய்தி எதுவும் அறியுமாறில்லை.

## 23. பாண்டியன் மாறன் வழுதி

மாறன் வழுதி என்றும், பாண்டியன் மாறன் வழுதி என்றும் இரு புலவர் பெயர்கள் காணப்படுகின்றன. இருவரும் ஒருவரே. ஒருவர் என்று கொண்டால் இவர் பாடிய செய்யுள்கள் இரண்டு. அவை நற்றிணை செய்யுள் 97, 301.

இவர் பாடிய நற்றிணை 97–ஆம் பாடல் முல்லைத்திணை பற்றியது. தலைவி கூற்றாக அமைந்தது.

தலைவன் தலைவியைப் பிரிந்து வினை மேற்சென்றான். அவன் "கார்முந்துமுன் தன்தேர் முந்தும்; விரைவில் திரும்புவேன்" என்று ஆறுதல் கூறிச் சென்றான். ஆனால் குறிப்பிட்டபடி வரவில்லை.

இதனால் தலைவியின் வருத்தம் மிகுந்தது. அவள் "முல்லை நிலக்கருப்பொருள்களான குயில் கூவும் ஒலியும், ஆற்றுநீர்ப் பெருக்கும், குருக்கத்தி, பித்திகை மலர்களை விற்கு பெண்ணின் குரலும் என் காமத்தை மிகுவித்துக் கொடுமைசெய்கின்றன. யான் என் செய்வேன்?" என்று கூறிப் புலம்புகின்றாள்.

இவர் பாடிய 301–ஆம் பாடல் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ளது. தோழி கூற்றாக அமைவது. தோழி தன் நெஞ்சுக்குள், "தலைவன் தலைவியை விரைந்து மணந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அவன் தலைவியை நெருங்காமல் சேட்படுத்தினோம். அதனால் அவன் படும் துன்பத்தையும் அறிந்தோம்.

தாயோ, தலைவியைப் பலகாலும் புகழ்ந்து கூறி நேயம் பாராட்டுகின்றாள்.

நாம் இங்கு களவு ஒழுக்கத்தில் தலைவியைத் தலைவனோடு கூட்டுவிப்பதை அவள் அறிந்தால் என்ன நிகழுமோ? என் உள்ளம் இதனால் கவல்கின்றது" என்று கூறுகிறாள்.

தோழி களவு ஒழுக்கத்தில் எத்துணைப் பொறுப்புள்ளவள் என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

## 24. பாலைபாடிய பெருங்கடுங்கோ

இவர் சேரநாட்டு அரசப்புலவர். அரசப்புலவர்களில் மிகுதியான பாடல்களைப் பாடியவர். குறிஞ்சி பாடுவதில் வல்லவர் கபிலர் என்பதைப் போல, 'பாலை'த் திணையைச் சிறப்பித்துப் பாடுவதில் வல்லவராதலின் 'பாலை பாடிய' என்ற அடைமொழியால் சிறப்பிக்கப்பட்டார்.

முடிகெழு மூவேந்தருள் ஒருவராக இருப்பினும் ஆன்றவிந்தடங்கிய சான்றோர் வரிசையிலும் அமைந்து அரிய கருத்துக்களைக் கூறிய பெருமை இவருக்குண்டு.

இவர் பாடியன:

நற்றிணை – 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391–ஆம் செய்யுட்கள்.

குறுந்தொகை – 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398–ஆம் செய்யுட்கள்.

அகநானூறு – 5, 9, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379–ஆம் செய்யுட்கள்.

புறநானூறு 282–ஆம் செய்யுள்.

ஆக இவர் பாடியனவாக முப்பத்து மூன்று பாடல்கள் சங்க நூல்களில் இடம் பெற்றுள்ளன. புறநானூற்றுப்பாடல் இடை இடையே சிதைந்துள்ளது.

நற்றிணையில், கொண்கானத்து நன்னனையும், அவனது எழில் மலையையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

பாலைத் திணையைப் பாடும்போது உடன் போக்கு முதலிய துறைகளை அமைத்து நயம்படப் பாடியுள்ளார். தலைமகளைத் தலைமகன் பெற்றபோது, ஒருவன் தனது வழிபடு தெய்வத்தைக் கண்ணெதிரேகாணும்படி வரம்பெற்றாற் போன்றுள்ளது என்று கூறுவது ஒரு புதுமை.

குறுந்தொகையில் தலைவன் வாராமையால் தலைவி படும் துயரத்தை உருக்கமாக எடுத்துரைக்கிறார். குறுந்தொகை 37–ஆம் பாடலில் இவர்,

*"பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்*
*அன்பின – தோழி – அவர் சென்ற ஆறே"*[29]

என்று கூறுகிறார். இது தோழி கூற்றாக அமைந்த பாடல். தலைவர் விரைவில் திரும்பி வருவர் எனத் தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள். இதன்கண், பெண் யானையின் பசியை நீக்குதற்கு ஆண்யானை வேனில் வெம்மையால் வற்றிய யா மரத்தின் பட்டையை உரித்து அம்மரத்தின் நீரைப் பருகச் செய்யும் என்றது.

தலைவன் தலைவியின் துன்பத்தை நீக்கத் தன் வினையை முடித்து விரைவில் வருவான் என்ற இறைச்சி தோன்ற நின்றது. இதே இறைச்சியை,

*"பொத்துஇல் காழ அத்த யாஅத்துப்*
*பொரிஅரை முழுமுதல் உருவக் குத்தி*
*மறங்கெழு தடக்கையின் வாங்கி உயங்குநடைச்*
*சிறுகண் பெருநிரை உறுபசி தீர்க்கும்*
*தடமருப்பு யானை கண்டனர் தோழி"*[30]

என வரும் குறுந்தொகைப் பாடலில் கடுகு பெருந்தேவன் கையாண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## 25. பெருவழுதி

இவர் பாண்டியர் மரபைச் சேர்ந்த அரசப் புலவர். நற்றிணையில் 55, 56–ஆம் பாடல்களை இவர் பாடியுள்ளார். மற்றும் பரிபாடலில் ஒன்றும் (15) புறத்தில் ஒன்றும் (182) இவர் பாடியனவாக அறியப்படுகின்றன. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி என ஒருபுலவர் பெயர் காணப்படுகிறது. இருவரும் ஒருவரே என்பது ஆய்வாளர் கருத்து.[31]

பரோபகாரச் செய்தி கூறல் முதலிய கருத்துக்களில் இருவர் பாடல்களும் ஒத்திருப்பது இதனை வலியுறுத்தும் சான்றாகும்.

இவர் பாடிய 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்னும்புறப்பாடல் இலக்கியப் புகழ் பெற்றது. இவர் பாடல் நற்றிணையில், தாய் கேட்பத் தோழி ஏமாற்றியதாக வரும் செய்தி நயம் மிக்கது (5.5)

---

[29] குறுந்தொகை, 37.

[30] குறுந்தொகை, 225.

[31] டாக்டர் உ.வே. சாமிநாதையர் (ப.ர்) புறநானூறு. பாடினோர் வரலாறு, ப.13.

நற்றிணை 56–ஆம் பாடல் வரைவிடை மெலிவாற்றுவிக்கும் தோழிக்குத் தலைவி கூறியதாக அமைந்தது. தலைவி, "என்வளை களைவதற்குக் காரணமான என் தலைவன் பிரிவை எண்ணி என் நெஞ்சம் வருந்துகின்றது. தலைவனை நாடிச்சென்ற அந்நெஞ்சம், தலைவன்செய்யும் முயற்சிக்குத் துணையாக உடனிருக்கும் விருப்பத்தால் வருந்தி இருக்கின்றதோ அன்றி அத்தலைவன் அருளாமையால் எனக்கு உண்டான மேனிவேறுபாட்டையுடைய என்னிடம் வந்து, அவன் பிரியும் முன் இருந்த பழைய அழகெல்லாம் போகவும், பசலை பாய்ந்து பொன்னிறத்துடன் மெலிந்திருக்கின்ற இம்மேனியை நோக்கி, "இவள் அயலாள் என்னை விடுத்த தலைவி அல்லள்" என்று கருதிற்றுப் போலும். அதனால் வருந்தி என்னைத் தேடிச்சென்றதுபோலும்! என்று கூறுவதாகப் பாடியிருப்பது வியத்தற்குரியது.

## 26. மருதம்பாடிய இளங்கடுங்கோ

இவர் சேரநாட்டு அரசப்புலவர். 'இளங்கடுங்கோ' என்று பெயர் பெற்றிருப்பதால் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பியாக இருக்கலாம் என்று யூகிக்கப்படுகிறார். குறிஞ்சி பாடிய கபிலரைப் போலவும்,பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் போலவும் மருதத்திணையைப் பாடுவதில் பெரும்புலமை பெற்றுள்ளதால் இவர் இவ்வாறு பெயர்பெற்றுள்ளார்.

இவர் பாடியனவாக நற்றிணையில் 50–ஆம் பாடலொன்றும், அகநானூற்றில் 96, 176 ஆகிய இரண்டு பாடல்களும் ஆக மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன. அகம் 96–ஆம் பாடலில் 'அகுதை' என்பாளின் தந்தையான சோழ வேந்தனைச் சிறப்பிக்கின்றார். அவனிடம் சேர–பாண்டியர் வந்து போர்புரிந்து தோற்ற வரலாற்றையும் கூறுகின்றார். நற்றிணை 50–ஆம் பாடலில், பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனைத் தோழி வாயில் மறுத்தமை நயம்படக் கூறப்படுகிறது.

## 27. மாலை மாறன்

இவர் பெயர் 'மாலை மாறனார்' என்றும் காணப்படுகிறது. 'மாறன்' என்ற பெயரைக் கொண்டு இவர் பாண்டியர் மரபில் வந்த அரசப்புலவர் என அறியலாம்.

இவர் பாடியது குறுந்தொகை 245–ஆம் பாடல் ஒன்றே. வேறு எந்த நூலிலும் இவர் பாடல் காணப்படவில்லை.

இவரது பாடல் களவுத் துறையில் அமைந்தது. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது.

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிந்து சென்றான். அப்பிரிவை ஆற்றாது தலைவி வருந்துவாள் என்று தோழி கவன்றாள். அப்போது தலைவி தோழியை நோக்கி, 'யான் ஆற்றேனாயவிடத்துப் பலரும் இவள் ஆற்றாமைக்குக் காரணம் யாது என ஆராய்வர். ஆராய்ந்த வழி களவொழுக்கம் வெளிப்பட்டுப் பழியாம். இவ்வாறு பலரும் அறிவது, யான் என் பெண்மை நலத்தை இழந்ததைக் காட்டினும் கொடியது! எனவே யான் அதை மறைக்கும் பொருட்டேனும் ஆற்றியிருப்பேன்' என்று கூறுவது கவிஇன்பம் நல்குவதாகும்.

## 28. மாவளத்தான்

இவர் பாடியுள்ளது ஒரே பாடல். குறுந்தொகையில் 348–ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. இது களவுப் பாடல். தோழி கூற்று. துறை: செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

அதாவது தலைவனது ஒழுகலாற்றைக் கண்ட தலைவி 'இவன் நம்மைப் பிரிவன் போலும்' என்று கருதி, அஞ்சி வருந்துகிறாள். அவ்வாறு வருந்திய தலைவிக்குத் தோழி, 'அவன் பிரியான்' என்று காரணத்துடன் கூறி ஆற்றுவித்தது.

இப்பாடலில் தோழி தலைவியை நோக்கி, "அவர் பிரிவார் என்று எண்ணியவுடனே உன் கண்கள் நீரைச் சொரியும், அந்நீரினை நம் தலைவர் காண்பர் அல்லரோ ? அங்ஙனம் கண்டால் அவர் நின்னைப் பிரியக்கருதுவரோ ? மாட்டார்" என்று கூறித் தேற்றுகின்றாள்.

மாவளத்தன் என்ற பெயர் 'மாவளத்தனார்' என்று காணப்படுகிறது.

## 29. முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்

இவர் சேர அரசப்புலவர். இவரைப் பற்றிய வரலாறு எதுவும் தெரியவில்லை. பகைமன்னர் எவர்மீதும் படை எடுத்துச்சென்றுபோர் புரியாமல் தங்கியிருந்ததனால் 'முடங்கிக் கிடந்த' என்ற அடையால் வழங்கப்பட்டனர் போலும்.

இவர் பாடியதாக அகநானூற்றில் ஒரு பாடல் உள்ளது. நெய்தல் திணையில் அமைந்த பாடல். இதன் துறை – பகற்குறி வந்த தலைமகனுக்குத் தோழி கூறியது.நீண்ட நாட்களாகத் தலைவியைக் காண்பதற்கு வராத தலைவன் ஒருநாள் பகற்பொழுதில் வந்தான்.

தோழி அவனை நோக்கி, "புன்னை மரங்கள் அடர்ந்து நறுமணம் கமழும் கடற்கரைச் சோலைக்கு என்றேனும் ஒரு நாள் வந்து, அங்கு விளையாடும் எம்மைக் கண்டு, 'உம் அழகு என்னவாயிற்று' என்று வினவிச் சென்றால் உமது பெருமை குறைந்தா போய்விடும் ? நீர் வாராமைக்கான காரணந்தான் யாதோ ?" என்று தோழி

கேட்பதாக அமைந்தது இப்பாடல். பரதவரின் கடல்படு வாழ்க்கை இப்பாடலில் அழகுறச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

## 30. முடத்திருமாறன்

முடத்திருமாறன் என்ற பெயர் ஆர்விகுதி தந்து முடத்திருமாறனார் எனவும் காணப்படுகிறது. இருவரும் ஒருவரே என்று கொண்டால் இவர் பாடிய பாடல்கள் இரண்டு. நற்: 105, 228 என்பன.

இவர் பாண்டிய மரபினர். இடைச்சங்கத்து இறுதியில் பாண்டிய நாட்டை ஆட்சி செய்தவர். இவர் காலத்து இடைச்சங்கம் இருந்த கபாடபுரம் கடற்கோளால் அழிந்து போகவே, உடனே இவர் மதுரையிற் போந்து கடைச்சங்கத்தை நிறுவினர்.

இதனை இறையனார் களவியலுரையாலும், சிலப்பதிகார உரைப்பாயிரத்திற்கு மேற்கோளாகக் காட்டப்பட்ட "வேங்கடங்குமரி" எனத் தொடங்கும் அகவற்பாவாலும் அறியலாம். பாலைத் திணையையும், குறிஞ்சி நிலத்தையும் இவர் சுவைபட வருணித்துள்ளார். சேரமான் குட்டுவஞ்சேரலைப் பாடியிருப்பதால் இவர் அவன் காலத்தவர் என்பதை அறியலாம். இவர் பாடியவை மேற்குறித்த இரண்டு பாடல்களே.

## சங்க இலக்கியங்கள்

ஒரு நாட்டின் பெருமையை வானோங்கிய மலைகளோ, வற்றாது வளங்கொழிக்கும் ஆறுகளோ அறிவிப்பன அல்ல. அந்த நாட்டில் வாழும்அறிஞர்களைக் கொண்டே நாட்டின் பெருமை மதிப்பிடப்படுகிறது.

*"நாடா கொன்றோ, காடா கொன்றோ*
*அவலா கொன்றோ மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே"*[32]

என்னும் ஔவையின் அமுதவாக்கு இதனை எடுத்துரைக்கிறது. ஆன்றவிந்தடங்கிய சான்றவர் வழங்கிய அரிய நூல்களே கலைக்கருவூலமாகத் திகழ்கின்றன. மேனாட்டவர் மதிக்கும் தமிழின் பெருமை எதைக்கொண்டு கணிக்கப்படுகிறது.

புராணங்களையும், இதிகாசங்களையும் பொய்ம்மை நிறைந்த பிற நூல்களையும் உலக அறிஞர்கள் மதிப்பதில்லை. பின்னர் எதைக்கொண்டு மதிப்பிடுகின்றார்கள். வற்றாத கலை இன்பத்தை வழங்கும் மெய்ந்நூல்களாகிய சங்க இலக்கியங்களைக் கொண்டே தமிழின் பெருமையைக் கணக்கிடுகிறார்கள்.

[32] புறநானூறு, 187.

சங்க இலக்கியங்கள் என்பவை எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகிய பதினெட்டு நூல்களே என்பது முன்னரே சுட்டப்பட்டது. தமிழின் பெருமைக்கு நிலைக்களனாக விளங்குவனவும், உலக அறிஞர்களால் பாராட்டப்படுவனவுமான இச்சங்க இலக்கியங்களின் சால்புகள் யாவை என அறிவது இன்றியமையாதது. சங்க இலக்கியச் சால்புகள் இன்னவை என்பதை மேனாட்டு அறிஞர்களும் நம் நாட்டு ஆய்வாளர்களும் ஆராய்ந்து கூறியுள்ளனர். அவற்றுள் சில இங்கே தரப்படுகின்றன.

**சங்க இலக்கியச் சால்புகள்**

1. சங்க இலக்கியங்களில் பொய்ம்மைக் கருத்துக்கள் இடம் பெறவில்லை. கூறப்பட்டவை அனைத்தும் மெய்ம்மையைஅடிப்படையாகக் கொண்ட யதார்த்த வாதத்தைப் பின்பற்றியவை.
2. அனைத்தும் தனிப்பாடல்கள். உரை நடையே கலவாதவை.ஒவ்வொரு பாடலை வைத்தே ஒரு நூல் எழுதலாம்.
3. பெரிய கருத்துக்களைச் சிறிய பாடலில் பகர்வது.
4. காலத்தால், இடத்தால், கருத்தால் சிதறிக் கிடந்தபோதும் ஓர் இயைபும் மரபும் பெற்று விளங்குகின்றன.
5. பிற்காலத்தில் கவிதைகளில் கையாளப்படும் சொற்சாலமோ, உயர்வு நவிற்சியோ, செயற்கைப் புனைவோ இல்லாதவை.
6. உலகின் பல்வேறு மொழிகளில் இலக்கியம் தோன்றிய காலத்தை நோக்கச் சங்க இலக்கியங்கள் தோன்றிய காலம் தொன்மையானது.
7. தமிழ் ஓர் உயர் தனிச்செம்மொழி என்ற சிறப்பை உணர்த்தும் சான்றுகளாகத் திகழ்பவை சங்க இலக்கியங்களே.
8. முதல்—கரு—உரி என்ற மூன்று அரங்கில் உரிப்பொருள்களான உணர்வுகள் பேசப்படுகின்றன.
9. மரம், செடி, கொடிகளின் தன்மையும், விலங்கு பறவைகளின் இயல்பும் அறிவிக்கும் ஓர்அறிவியல் களஞ்சியமாக இவை காட்சியளிக்கின்றன.
10. பாடல்கள் வடமொழிக்கலப்பு அருகியவை. 2 விழுக்காடுக்கும் குறைவானவை.

## சங்க காலம்

இவ்வாறு தோன்றிய சங்க நூல்களின் காலம் என்ன ?

"சங்க காலம் என்பது முச்சங்கங்களில் கடைச்சங்க காலத்தையே குறிக்கும். அதன் கீழ் எல்லை கி.பி.300. மேல் எல்லை வரலாற்றுக்கு எட்டாத தொன்மை உடையது என்பர் டாக்டர் மா. இராசமாணிக்கனார்.[33]

கடைச்சங்க காலம் கி.மு.300 – கி.பி.250 என்பர் வரலாற்றறிஞர் மது.ச. விமலானந்தம்.[34]

முனைவர் அரங்க. இராமலிங்கம் அவர்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை இடைப்பட்ட 500 ஆண்டுகள் என்பர்.[35]

டாக்டர் மு. வரதராசனார் சங்க காலம் கி.மு.500 முதல் கி.பி.200 வரை உள்ள காலம் என்பர்.[36]

சங்க காலம் பொற்காலம் என்பர். காரணம், மக்கள் செல்வச் செழிப்போடு அமைதியாக வாழ்ந்த காலம் அது.

தமிழகம் மூவேந்தர் ஆட்சியிலும் குறுநில மன்னர்கள் ஆளுகையிலும் தழைத்திருந்தது.

தமிழ்ச் சமுதாயத்தில் சாதிப் பிரிவுகள் இல்லை. சாதிப் போராட்டங்கள், சாதிக் கொடுமைகள் இல்லை. குறிஞ்சி, முல்லை,மருதம்,நெய்தல் எனும் நானில வாழ்க்கை பற்றிய குறவர், எயினர், பரதவர், ஆயர் போன்ற குடிமுறைப்பகுப்புகளே நிலவின. மக்கள் பசியும், பிணியும், பகையும் நீங்கி வாழ்ந்தனர். வாணிகம் தழைத்திருந்தது. அயல்நாட்டு வணிகர்கள் தமிழகம் நாடி வந்து பொன்னையும், பொருளையும் தந்து, மிளகும், முத்தும் வாங்கிச் சென்றனர். உரிமை வாழ்வில் எல்லா மக்களும் ஏற்றம் பெற்றிருந்தனர். இக்காரணங்களால் சங்க காலம் பொற்காலம் எனப் போற்றப்பட்டது.

## முச்சங்கம்

'கடைச்சங்கம்' என்று சொல்லும்போதே அச்சொல்லாற்றலால் முதல்சங்கம், இடைச்சங்கம் என்பனவும் அமைந்து தமிழ் வளர்த்தன என்பது பெறப்படும்.

33 டாக்டர் மா. இராசமாணிக்கம், தமிழ் மொழி இலக்கிய வரலாறு, ப.60.
34 மது.ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், தொகுதி 1, ப.4.
35 டாக்டர் அரங்க. இராமலிங்கம், அஞ்சல்வழிப் பாடம், தமிழ், பாடம் 2. ப.36.
36 டாக்டர் மு. வரதராசன், தமிழ் இலக்யிக வரலாறு, ப.25.

அச்சங்கங்களைப் பற்றி அறிவதற்குத் திடமான சான்றுகள் எதுவும் இல்லை. இறையனார் களவியலுக்கு நக்கீரர் எழுதிய உரைநூல் கொண்டுசில செய்திகளை அறிய முடிகிறது. அவ்வுரை கூறும்செய்திகள் கீழே தரப்படுகின்றன.

**தலைச்சங்கம்**

'தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின்கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐந்நூற்று நாற்பத்தொன்மதின்மர் என்ப.

அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப.

அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ? பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன.

அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப.

அவர்களைச் சங்கம் இரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்மதின்பர் என்ப.

அவருள் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப.

அவருக்கு நூல் அகத்தியம்.

**இடைச்சங்கம்**

"இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க்கருங்கோழியும், மோசியும், வெள்ளூர்க்காப்பியனும், சிறுபாண்டரங்கனும், திரையன்மாறனும், துவரைக்கோனும், கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப.

அவருள்ளிட்டு மூவாயிரத்து எழுநூற்றுவர் பாடினார் என்ப.

அவர்களால் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப.

அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமும் என இவை என்ப.

அவர் மூவாயிரத்து எழுநூற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப.

அவரைச் சங்கம் இரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப.

அவருள் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியர் என்ப.

அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது கபாடபுரத்து என்ப. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது!

**கடைச்சங்கம்**

"கடைச்சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தார் சிறுமேதாவியரும், சேந்தம் பூதனாரும், அறிவுடை அரனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப.

அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப.

அவர்களால் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும். நற்றிணை நானூறும் புறநானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையுமென்று இத்தொடக்கத்தன.

அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப.

அவர் சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தது ஆயிரத்து எண்ணூற்றைம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப.

அவருள் கவியரங்கேறினார் மூவர் பாண்டியர் என்ப.

அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது உத்தரமதுரை என்ப."[37] – நக்கீரர்; **இறையனார் களவியல் உரை**

இவற்றை நோக்கும்போது அளவுகடந்த மீஇயற்கை நிகழ்வுகள் போன்று தோன்றுகின்றது. நம்பிக்கை அளிப்பதாக இல்லை. எனவே, இச்சங்கங்கள் பற்றி அறிஞரிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றியுள்ளன.

'சங்கம்' என்ற ஒன்றே இருந்ததில்லை என்பாரும் கடைச்சங்கம் என்ற ஒன்று மட்டுமே இருந்து தமிழ் ஆராய்ந்தது என்பாரும், முச்சங்கங்களும் உண்டு என்பாரும் என முத்திறத்தினராவர் அவர்கள்.

'சங்கம்' என்ற சொல்லாட்சி சங்க நூல்களிலோ, தொல்காப்பியத்திலோ இடம் பெறவில்லை. அதனால் சங்கம் என்ற ஒன்று இல்லை என்பார் ஒருசார் அறிஞர்.

---

[37] நக்கீரர், இறையனார் களவியலுரை, பக்.5–7.

பி.பி. சீனிவாச அய்யங்கார், கே.என். சிவராச பிள்ளை, கா. நமச்சிவாய முதலியார் ஆகியோர் 'இல்லை' என்ற கருத்தினராவர். முனைவர் அரங்க. இராமலிங்கம் அவர்கள் தொல்காப்பியர் காலத்தில் 'சங்கம்' என்ற சொல் ஏன் இடம் பெறவில்லை என்பதைப் பின்வருமாறு விளக்குகிறார்.

"தொல்காப்பியனார் காலத்தில் 'சங்கம்' என்ற சொல்லாட்சி இல்லை. ஏனெனில், மொழிமுதற்காரணச் சொல்லாக அமைக்கவேண்டிய நிலை அக்காலத்தில் ஏற்படவில்லை. இதனால் தொல்காப்பியம்,

*"சகரக்கிளவியும் அவற்றோ ரற்றே*
*அஐஔ எனும் மூன்றலங்கடையே" – தொல். மொழிமரபு. சூ. 29.*

எனக் கூறுகிறது.

சங்கம் வடசொல்லாக அக்காலை விளங்கியது. எனவே சங்க நூல்களில் இடம் பெறவில்லை. பிற்காலத்தே சங்கு, சக்கரம், சட்டி முதலிய சொற்கள் நடைமுறையில் வந்துவிட்டன. இதனை நன்னூல் விதிவகுத்துக் கூறுகின்றது."[38] இக்காரணம் பொருத்தமாகவே தோன்றுகிறது.

முதன்முதலில் 'சங்கம்' என்ற சொல்லைக் கையாண்டவர் திருநாவுக்கரசர்.

*"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி*
*நற்கனகக் கிழிதருமிக்கு அருளினோன் காண்."*

*– திருப்புத்தூர் திருத்தாண்டகம் – 3*

என்பது அவர் தேவாரம்.

சங்கம் என்ற சொல்லுக்குப் பதிலாகக் கழகம், அவை என்ற சொற்கள் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன.

## அகநானூறு உரைப்பாயிரம்

*"பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்*
*அறிவு வீற்றிருந்த செறிவுடை மனத்து*
*வான்தோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ*
*அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை."*[39]

என்று கூறுகிறது.

*"கண்ணுதல் பெருங்கடவுளும்*
*கழகமோடு அமர்ந்து*
*பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழ்"*[40]

என்பர் பரஞ்சோதியார்.

---

[38] டாக்டர் அரங்க. இராமலிங்கம், அஞ்சல்வழிக் கல்வி, பாடம் 1, ப.9.
[39] அகநானூறு உரைப்பாயிரம்.
[40] பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்.

## சங்கம் இருந்ததில்லை என்பார் கூற்றும் அவற்றின் மறுப்பும்

1. சங்கம் என்ற சொல் தமிழ்ச்சொல் அன்று. சொல்லே தமிழில்லை என்றால் சங்கம் இருந்திருக்க எவ்வாறு இயலும் ?

**மறுப்பு**

சங்கம் என்பது வடசொல் அன்று; தமிழ்ச்சொல்லே. ஒலிஒப்புமை கொண்டு ஒரு சொல்லை வடசொல் என்பது நன்றன்று. 'சங்கம்' என்பதில் 'gha' என்ற ஒலி உள்ளது. அதனால் வடசொல் என்பது வீண்.

தமிழில் 'அப்பர்' என்ற சொல்லும் ஆங்கிலத்தில் 'upper' என்ற சொல்லும் ஒலியால் ஒற்றுமை உடையன. இதுகொண்டு இவற்றை ஒருசொல் எனக் கூறல் பொருந்துமோ ? தொல்காப்பியத்தை ஒட்டி அமைந்த சங்க நூல்களில் 'சமழ்ப்பு', 'சையொத்து', 'சந்து' என்பன போன்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. எனவே, ஒலி, தொல்காப்பிய நூற்பா ஆகிய காரணங்களால் 'சங்கம்' என்பது தமிழ்ச்சொல்லே எனத் தெளிக.

2. சங்க இலக்கியங்கள் எனப்படும் சங்க நூல்களிலேயே சங்கம் இருந்தமைக்கு எத்தகைய சான்றும் இல்லை. சங்கம் என்ற சொல்வழக்கும் காணப்பெறவில்லை.

**மறுப்பு**

சங்க இலக்கிய்ங்களில் சான்று வரவில்லை என்பதாலேயே சங்கம் இல்லை என்று கூற முடியாது. 'பண்பாடு' என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. இதுகொண்டு தமிழர்க்கும் பண்பாடு இல்லை என்று கூறிவிட முடியுமா ?

பண்டை இலக்கியங்களில் பயின்றுவரும் புணர்கூட்டு, தொகை, கழகம், குழு, பட்டி மண்டபம், அவை போன்ற சொற்கள் சங்கம் – புலவர் கூட்டம் என்ற பொருளில் தானே வழங்குகின்றன ?

புலவர் கூட்டத்தைக் குறிக்கப் பலசொற்கள் பயின்றுவரப் பிற்காலத்தில் 'சங்கம்' எனும் சொல் அனைவராலும் வைத்து வழங்கப்பட்டிருக்கலாம். எனவே, சங்க நூல்களில் சான்றில்லை என்பது கொண்டு சங்கமே இல்லை எனக் கூறுதல் பொருந்தாது.

3. சமண–பௌத்த சமயச் சங்கங்கள் போன்றே தமிழ் வளர்க்கச் சங்கங்கள் இருந்தன என்ற எண்ணத்தை உண்டாக்க முச்சங்கக்கதை மொழியப்பட்டுள்ளது.

மறுப்பு

பின் நிகழ்ந்த நிகழ்ச்சியை இணைத்து முன்னிருந்த கருத்தினை மறுத்தல் நன்றன்று. தங்கள் தாய் மொழியை வளர்க்கத் தமிழர்க்குத் தகுதி இல்லையா? அல்லது கூடிநின்று கொழுந்தமிழ் ஆயும் திறமற்றவர்களா? அல்லது ஒன்றைப் பார்த்தே செயல்படும் தன்மை உண்டே தவிர, தாமே இயங்கும் திறம் தமிழர்க்கு இல்லை என்பது திட்டமான முடிவா?

பெற்ற பிள்ளையைப் பேணத் தாய்க்குத் தெரியாதா? தமிழரின் திறமறியாமையால் எழுந்த கூற்றே தவிர இது வேறன்று!

4. இறையனார் களவியலுரை கருத்துக்கள் அறிவுக்கும் பொருந்துவனவல்ல.

இவ்வுரை முதற்கண் தோன்றிய நூல் 'அகத்தியம்' என்கின்றது. அவ்வாறானால் அதற்கு முன் தோன்றிய இலக்கியங்களைப் பற்றி ஏன் ஒன்றும் இயம்பவில்லை?

சிவன், முருகன், குபேரன் போன்ற கடவுளர்கள் சங்கத்தில் கலந்து கொண்டதாகக் கூறுவது கற்பனையல்லவா?

மூன்று சங்கங்களிலும் முறையே, 89, 59, 49 அரசர்கள் இருந்து 3700, 4400, 1850 ஆண்டுகள் வாழ்ந்தனர் என்றால் எவர் நம்புவர்? இக்கூற்றுகள், 'சங்கம்' ஒரு செயற்கைப் புனைவு என்ற எடுத்துக்காட்டுகின்றன.

கடல் கொண்ட நாடுகள் – 49

வேளிர் பரம்பரை – 49

வடமொழி எழுத்துக்கள் – 49

இவற்றை ஒட்டி சங்கச் சான்றோர் 49 பேர் என மொழிந்திருக்கலாம்" என்பர் கே.எஸ். சிவராஜபிள்ளை.[41]

வரலாற்று ஆராய்ச்சியாளர் K.A. நீலகண்ட சாஸ்திரியார் அகத்தியர் பற்றிப் பின்வருமாறு கூறுவது இங்கு நினையத்தக்கது.

"அகத்தியர் தமிழ் இலக்கணத்தைச் செய்தார் என்று தொல்காப்பியரோ, பிற சங்ககாலப் புலவர்களோ கூறவில்லை. இச்செய்தியை முதன்முறையாகக் கூறியுள்ளது இறையனார் களவியல் உரையேயாகும். அதன் காலம் கி.மு.11 அல்லது 12–ஆம் நூற்றாண்டாகும்.

---

[41] K.A. Sivaraja Pillai, The Derivation of the Tamils, Tamil Ayvu, 1979 மற்றும் தமிழகத்தில் அகத்தியர்.

அகத்தியர் பற்றிய கதைகள் எல்லாம் ஆரியர் தென்னாட்டிற்கு வந்ததையும், அவ்வருகைக்கு அவர் தலைவராக இருந்ததையும் குறிப்பனவாகக் கோடலே பொருத்தமாகும்."[42] என ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார். முச்சங்கம் இருந்தது உண்மையே என்பார் கூற்று

பன்னெடுங்காலமாக முச்சங்கம் இருந்ததாக மொழியப்பட்டு வருகிறது உண்மையின்றி இதனை வழிவழியாக ஏற்கமாட்டார்கள்.

இறையனார் களவியலுரையும் தமக்கு முன்னிருந்த செய்திகளை இலக்கியக் கூற்றுகளை நிலைபெறக் கொண்டே முச்சங்க உண்மை மொழிகிறது. பின்வந்த உரையாசிரியர்கள் அனைவரும், மறக்காமல் இவற்றை உறுதிசெய்து பேசுகின்றனர்.

டாக்டர் உ.வே. சாமிநாதையர், கா. சுப்பிரமணியப் பிள்ளை, கா. அப்பா துரையார், நா. தேவநேயப் பாவாணர் ஆகியோர் முச்சங்கம் இருந்தன என்னும் கருத்தினராவர்

கருத்து – மறுப்பு முதலியன மது.ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், பாகம் 1, பக்கம் 20–27.

## ஒரு சங்கம் இருந்தது உண்மையே

மூன்று சங்கங்கள் இருந்தன என்பதை மறுத்த போதிலும் பல தமிழறிஞர்கள் ஒரு சங்கம் இருந்தது உண்மை என்பதை ஒப்புகின்றனர்.

T.R. சேஷகிரி சாஸ்திரி, V.R. இராமச்சந்திர தீட்சிதர், K.A. நீலகண்ட சாஸ்திரியார், எஸ். வையாபுரிப் பிள்ளை ஆகியோர் இக்கருத்தினராவர்.

ஒரு சங்கம் இருந்தமைக்கு முற்கால இலக்கியச் சான்றுகள்.

1. *"நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையத்துத்*
   *தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி"* — *தொல். பாயிரம்.*

2. *"தொல்லாணை நல்லாசிரியர்*
   *புணர்கூட் டுண்ட புகழ்கால் சிறப்பின்*
   *நிலந்தரு திருவின் நெடியோன்"* — *மதுரைக் காஞ்சி – 761–63.*

3. *"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்*
   *மகிழ்நனை மறுகின் மதுரை"* — *சிறுபாண்: 66–67.*
   *'தமிழ்நிலை பெற்ற மறுகின் மதுரை'*

என்ற தொடர் தமிழ் வீற்றிருந்த தமிழ்ப்புலவர் உறைந்த தெருவினை உடைய மதுரையை உணர்த்தும்.

---

[42] K.A. Nilakanta Sastry, A.History of South India, pp.67-70.

4. *“பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்
அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து
வான்தோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை”*

பால்வண்ண தேவன்,அகநானூற்று உரைப்பாயிரம்.

5. *“இமிழ்குரல் முரசம் மூன்றுடன் முழங்கும்
தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே!”* *– புறம்: 58; 13–14.*

6. *நிலன்நாவில் திரிதரூஉ நீண்மாடக் கூடலார்
புலன்நாவில் பிறந்தசொல் புதிதுண்ணும் பொழுதன்றோ ?”*

*கலித்தொகை: 353; 17–18.*

இவை போன்ற இலக்கியச் சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கின்றன.

**சங்கம் இருந்தமைக்குப் பிற்காலச் சான்றுகள்**

பிற்கால இலக்கியங்களிலும் மதுரையில் சங்கம் இருந்த செய்தி பேசப்படுகிறது.

கி.பி. 7–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர்,

*“நற்பாட்டும் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக்கு அருளினோன் காண்”*

*– அப்பர் தேவாரம்: 6–76–3.*

கி.பி. 8–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான ஆண்டாள், தனது திருப்பாவையில்,

*“பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும்”* *– திருப்பாவை – 30.*

என்று பாடுகிறார்.

கி.பி. 9–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான மாணிக்கவாசகர் மதுரையில் புலவர் கூடித்தமிழ் ஆராய்ந்த திறத்தை

*“உயர்வான் உயர்மதில் கூடலில்
ஆய்ந்த வொண்தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ ?”* *– திருக்கோவையார் – 20.*

என்று பாடிப்புலப்படுத்தினார். இவ்வாறு பல இலக்கியச் சான்றுகள் இதற்குக் கிடைக்கின்றன.

**முடிவுரை**

- சங்க நூல்கள் என்பவை கடைச்சங்கத்தில் தொகுக்கப்பட்ட பத்துப் பாட்டும் எட்டுத்தொகையுமாகிய பதினெட்டு நூல்களேயாகும்.
- கடைச்சங்கம் நிலவிய காலம் பற்றி அறிஞரிடையே கருத்து வேற்றுமைகள் காணப்படினும் கி.மு. 250 முதல் கி.பி 300 வரையுள்ள காலம் கடைச்சங்க காலம் என்பதைப் பலரும் ஒப்புகின்றனர்.

- சங்கம் புலவர்கள் பாடிய பாடல்களேயன்றிச் சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட மன்னர்களும் புலமை பெற்றுப் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.
- அவ்வாறு பாடிய அரசப் புலவர்கள் 31 பேர் என்பர் டாக்டர் ந. சஞ்சீவி.
- முனைவர் அரங்க. இராமலிங்கம் 28 பேர் என்பர்.
- பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை முப்பத்தொருவர் என்பர்.
- முறையோடு இவற்றை ஆராய்ந்து பார்க்கும்போது முப்பத்தொருவர் என்பதே வலியுறுகின்றது.
- அகம் புறம் இரண்டையும் பாடிய சங்க காலப் புலவர்கள் 473 பேர்.
- இவர்கள் பாடிய பாடல் தொகை – 2381.
- இவர்களில் அரசப்புலவர்கள் – 31 பேர்.
- இந்த முப்பத்தொருவரும் பாடிய பாடல்களின் மொத்த தொகை – 135.
- தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கங்கள் பற்றிய விபரங்களை இறையனார் களவியல் உரை கூறுகின்றது.
- மூன்று சங்கங்கள் இருந்ததில்லை என்பர் சிலர்.
- ஒரு சங்கம் இருந்து தமிழாய்ந்தது உண்மை என்பர் சிலர். இவ்வாறு அறிஞரிடையே கருத்து வேற்றுமைகள் உள்ளன. ஒரு சங்கம் இருந்தது. அதுவே கடைச்சங்கம் என்று கொள்வது பொருந்தும்.

# இயல் – 2

# அரசப்புலவர்களின் புலமை நலம்

### முன்னுரை

தமிழ் 'உயர்தனிச் செம்மொழி' எனப் பாராட்டப்படுவதற்குக் காரணம் தனித்தன்மை வாய்ந்த சங்க இலக்கியங்களே எனலாம்.

சங்க நூல்கள் இல்லாவிடில் தமிழ் இலக்கியங்கள் புராணங்கள் போன்ற பொய்ம்மை மலிந்த புளுகு மூட்டைகள் ஆகி இருக்கும்.

தான் வழங்கும் நிலத்தில் உள்ள மொழிகட்கெல்லாம் உயர்நிலை பெற்று அறிஞரால் போற்றப்படும் மொழி உயர்மொழி.

பிற மொழிகளின் துணை இன்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றது தனிமொழி.

சிறந்த செம்மையாக வகுக்கப்பட்ட இலக்கண இலக்கிய வளம் உடையது செம்மொழி.

தமிழ் இந்த மூவகையிலும் சிறப்புற்று நிமிர்ந்து நிற்பதால், 'உயர்தனிச் செம்மொழி' என மொழிநூல் வல்லுநர்களால் பாராட்டப்பெற்றது.

இந்த பெருமைக்கு அடித்தளமாக அமைந்தவை சங்க இலக்கியங்கள். சங்க இலக்கியப் பாடல்கள் 2381. இவற்றைப் பாடிய புலவர்கள் 473 பேர். இவர்களில் அரசப்புலவர்களும் உள்ளனர். அவர்கள் தொகை 31 என்பது சென்ற இயலில் குறிக்கப்பட்டது. முப்பத்தொருவரும் பாடிய பாடல்கள் 135. இவற்றுள் தரமிக்க பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றின் சொற்சுவை, பொருள்சுவை, வருணனை, கற்பனை, உவமைச்சிறப்பு போன்ற நலங்களை இவ்வியல் ஆராய்கின்றது.

### 1. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

இவர் சேரநாட்டு அரசப்புலவர் அகம் – புறம் இரண்டையும் பாடும் புலமை நலம் வாய்ந்தவர். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் ஒரு பாடலும் (245), அகநானூற்றில் ஒரு பாடலும் (168) இடம் பெற்றுள்ளன.

சேர நாட்டில் கோட்டம்பலம் என்றோர் நகர் உண்டு. இப்போது அது அம்பலப்புழை என வழங்குகிறது. இதை அடுத்து மாக்கோதை மங்கலம் என்ற ஊரும் காணப்படுகிறது.

இவை வரலாற்றுச் சின்னமாகக் கருதத்தக்கன. மாக்கோதை என்னும் சேரமன்னர் தம் இறுதிக் காலத்தில் அக்கோட்டம்பலத்தில் வாழ்ந்து உயிர்விட்டமையால், 'கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை' என வழங்கப்பட்டார்.

'துஞ்சிய' என்ற சொல் 'இறந்த' எனப்பொருள்படும். தமிழ் அரசர்கள் பலர் 'துஞ்சிய' என்ற சொல்லைத் தமது பெயர்களோடு சேர்த்து வழங்கப்பெற்றதை இலக்கியங்களில் காணலாம்.

- இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்
- சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
- சிக்கல் பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன்
- குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன்
- காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி
- வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி

என்பன போன்றவர்களை நினைக.

சில ஏட்டுச் சுவடிகளில் இம்மாக்கோதையின் பெயர் 'கூத்தம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை' எனக் காணப்படுகிறது.

"சேரநாடு கூத்துக்குப் பெயர் போயது. கூத்து நடைபெறும் கூத்தம்பலங்கள் அந்நாட்டின் பல பகுதிகளிலும் காணப்படும். இம் மாக்கோதை அத்தகைய கூத்தம்பலம் ஒன்றில் இருந்து, ஆங்கு நடைபெற்ற கூத்தொன்றைக் கண்டிருந்தவழி உயிர் துறந்திருக்கக்கூடும். அதனால் அவன் பெயர் கூத்தம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என வழங்குவதாயிற்று"[1] என்பர் ஆய்வறிஞர்.

## புலமை நலம்

மாக்கோதை பாடியுள்ள சங்கப் பாடல்கள் இரண்டுதான். அவையே அவருடைய புலமை நலத்தை எடுத்துக் காட்டுகின்றன.

அகநானூற்றுப் பாடலில், சின்னாட்களுக்கு முன்னர்ப் பிறந்த தன் தளர்நடைக் குழவியைக் களிறு ஒன்று அன்போடுதழுவி நிற்கின்றது.

அசைந்து அசைந்து தளர்நடை பயிலும் அக்கன்று அருவியின் இன்னோசையால் தன்னை மறந்துதூங்குகின்றது. யானையின் இவ்வன்பு வாழ்க்கைக்கு ஊறு விளைவிக்கக் கல்குகை ஒன்றில் வயப்புலி ஒன்று முழங்குகின்றது.

---

[1] புலவர் கா.கோவிந்தன்; காவலப்பாவலர்கள், ப.13.

அன்பு வாழ்க்கையும் கொடிய வாழ்க்கையும் பிணைந்து நிற்கும் இக்காட்சியை,

*"கொடைக் கடன்ஏன்ற கோடா நெஞ்சின்*
*உதியன் அட்டில்போல ஒலி எழுந்து*
*அருவி ஆர்க்கும் பெருவரைச் சிலம்பின்*
*ஈன்றணி இரும்பிடி தழீஇக் களிறுதன்*
*தூங்குநடைக் குழவி துயில்புறங்காப்ப*
*ஒடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்*
*வாள்வரி வயப்புலி கன்முறை உறழ"*[2]

என்ற பாடல் ஒவியப்படுத்துகிறது.

இப்பாடலில் மாக்கோதை, தான் பிறந்த சேரர் குடியில் வந்த உதியஞ்சேரல் என்பான் இரவலர்கட்கு வேண்டிய உணவை அளித்துக் கொடையாண்மை உடையவனாக விளங்கிய திறத்தைப் போற்றுகின்றார்.

உதியனது அட்டிலில் உண்ண வருவாரது ஒலி கேட்டவண்ணம் இருக்கும் என அவன் உணவிடும் சிறப்பை எடுத்துரைக்கின்றார்.

சிறுகுடிக்கிழான் பண்ணனது உணவு விடுதியில்,

*"யாணர்ப் பழுமரம் புள் இமிழ்ந் தன்ன*
*ஊணொலி அரவம் தானும் கேட்கும்"*[3]

எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாடலை இக்கருத்து நினைக்கத் தூண்டுகிறது.

இந்நாளில் நாள்தொறும்பல எளியவர்கட்கு உணவளிக்கும் சத்திய தருமச்சாலை வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகள் நிறுவி உணவளித்ததைப் போன்று பண்டை நாளில் பல மன்னர்கள் அறக்கூழ்ச்சாலை நிறுவி, எளியவர்களுக்கும் இரவலர்களுக்கும் உணவளித்து வந்தனர் என்பதை இவற்றால் அறிய முடிகிறது.

மாக்கோதை பாடிய அகப்பாடல், இரவுக் குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி தனியிடத்தே கண்டு, இரவு நேரத்தில் வரும் வழியின் ஏதங்களை எடுத்துக்கூறி, இனி இரவுக் குறிக்கண் வருதலைத் தவிர்க்குமாறும், விரைவில் தலைவியை மணந்துகொள்ளுமாறும் வேண்டியது என்ற துறையில் அமைந்தது.

"குழுமூர் என்ற ஊரின்கண் கொடைக்கடன் பூண்ட வள்ளலாகிய உதியன் என்பானது அடுக்களை ஆரவாரம் போல, பெரியமலையின் பக்கமலையில் அருவிகள் வீழ்ந்து ஆரவாரித்துப் பாயும், அத்தகைய மலையில் ஒரு களிறு ஈன்றணிமையை உடைய

[2] அகம்; 168: 6–12.
[3] புறம்; 173: 3–4.

தன் பிடியோடும் தளர்நடைக் கன்றோடும் தங்கியிருக்கிறது. அக்களிறு உறங்கும் பிடிக்காகக் காவல் காத்து நிற்கின்றது.

அஞ்சாமையை உடைய வாள் போன்ற கோடுகளை உடைய வலிய புலி ஒன்று தான் உறங்கிக் கிடந்த குகையை விட்டு வெளியேறி மலைச்சாரலில் முழக்கம் செய்யும். வேட்டுவரும் உறங்கும் நள்ளிரவில் விலங்குகள் உலாவித்திரியும். இச்சிறுவழியில் வருதலை இனிநீ தவிர்க்க" என்பது இப்பாடலின் பொருள்.

## உள்ளுறை நயம்

புறப்பாடல்களினும் அகப்பாடல்களிலேயே உள்ளுறை மிகுதியாக அமைந்திருக்கும்.

நள்ளிரவில் வயப்புலி முழங்குகின்றது. அப்புலியின் கொடுமையினின்றும் பாதுகாக்கப் பிடிக்குக் காவலாகக் களிறு உறங்காமல் நிற்கும் என்பது,

ஊரார் கூறும் அலரினின்றும் தலைவியைப் பாதுகாத்துத் திருமணம் புரிந்து கொள்வது தலைவனின் கடமை என உள்ளுறை தோன்ற நின்றது.

## உவமைச் சிறப்பு

உதியனது அட்டிலில் எழும் உணவுண்போர் ஒலி, மலைச்சாரல்களில் வீழும் அருவியின் ஒலிக்கு உவமையாயிற்று. உணவளிக்குங்கால் உண்பவரது ஒலியைப் 'பெருஞ்சோற்றமலை' என இலக்கியங்கள் பேசுகின்றன.

மாக்கோதை பாடிய புறப்பாடல் அவர் மனைவி பால் கொண்டிருந்த பேரன்பைப் புலப்படுத்துகிறது. மனைவி இறந்த துன்பம் தாளாது அவர்வருந்திய வருத்தத்தை இப்பாடலில் காண முடிகிறது.

மாக்கோதையின் மனைவியாராகிய அரசமாதேவி காலமானார். அவர் உடலை ஈமத்தீயிலிட்டுக் கொளுத்தினர். சிதை எரிவதைக் கண்ட மாக்கோதையின் உள்ளம் கழிந்த காலத்தில் அவரோடு வாழ்ந்த நல்வாழ்வை எண்ணிப் பெருந்துன்பம் உறுவதாயிற்று.

"இன்று அவள் இறந்துவிட்டாள். அவள் பொன்னுடல் என் கண்ணெதிரே ஈமத்தீயில் பற்றி எரிகிறது". அதை நான் இந்தக் கண்களால் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனினும் என் உயிர் போய்விடவில்லை. உயிரோடு வாழ்ந்துகொண்டிருக்கிறேன். இந்நிலை என் உள்ளத்தைப்பெரிதும் வருத்துகிறது.

அவள் இறந்ததால் யான் பெற்ற துன்பம் அத்துணைப் பெரிதன்று என்றே தோன்றுகிறது. பிரிவினால் ஏற்பட்ட துயர் உண்மையில் பெரிது என்றால், அது என் உயிரையும் அன்றோ கொண்டு போயிருக்க வேண்டும்! ஆனால், அது அதனைச் செய்யவில்லையே!

உயிரைக் கொண்டு போகும் வலிமை அப்பிரிவுத்துயருக்கு இல்லை என்றால் இது உண்மையான துயரன்று; இறந்த மனைவியை எண்ணி உண்மையான துயர் உறாத யான், அவள்பால் கொண்ட காதலும்உண்மைக் காதலன்று போலும், என்று நயம்படக் கூறி வருந்துகின்றார்.

அவரது வருத்தமிகுதியைக் கூறும் புறப்பாடல்,

*"யாங்குப் பெரிதாயினும் நோயளவு எனைத்தே;*
*உயிர்செகுக் கல்லா மதுகைத்து அன்மையின்;*
*கள்ளி போகிய களரி மருங்கின்*
*வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து*
*ஒள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி*
*ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை;*
*இன்னும் வாழ்வல்; என் இதன் பண்பே"*[4]

என்பதாகும்.

## 2. பாலை பாடிய பெருங்கடுங்கோ

குறிஞ்சி பாடுவதில் வல்லவர் கபிலர். பாலை பாடுவதில் வல்ல புலமை உடையவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

இவர் சேரமன்னர்களில் அரசப்புலவர். மற்ற அரசப்புலவர்களைக் காட்டிலும் அதிகமான சங்கப் பாடல்களைப் பாடியவர்.

இவர் பாடியன:

நற்றிணையில் 10 பாடல்கள் – 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391 ஆகியனவாகும்.

குறுந்தொகையில் 10 பாடல்கள் – 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398 ஆகியனவாகும்.

அகநானூற்றில் 12 பாடல்கள் – 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379 ஆகியனவாகும்.

புறத்தில் 1 – 282–ஆம் பாடல்

கலித்தொகை – பாலைக்கலி – 35 பாடல்கள்

ஆக இவர் பாடியன – 68 பாடல்கள்.

---

[4] புறம், 245.

'பாடிய' என்ற அடைமொழி அவ்வப் பொருள் பற்றிப் பாடிய புலவர்கட்கு வைத்து வழங்கப்பட்டுள்ளது.

- கோடை பாடிய பெரும்பூதனார்
- வெறி பாடிய காமக்கணியார்
- மடல் பாடிய மாதங்கீரனார்
- பாரதம் பாடிய பெருந்தேவனார்
- மருதம் பாடிய இளங்கடுங்கோ

என்னும் பெயர்களை நினைக.

இவர் பாடியுள்ள எல்லாப் பாடல்களிலும் பாடியவர் பெயர் 'பாலைபாடிய பெருங்கடுங்கோ' என்றே காணப்படுகிறது. ஆனால், புறநானூற்றுப் பாடல் ஒன்றின் (11) கீழ் 'சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி' பாடியது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் இவர் சேரமன்னர் மரபைச் சேர்ந்தவர் என அறிய முடிகிறது.

பேய்மகள் இளவெயினியார் "நம் சேரர் பெருந்தகைக்குரிய கருவூர் வானுற உயர்ந்த வெற்றிப் புகழ்கொண்டது. அக்கருவூரை அடுத்துப் பாயும் பொருநை ஆற்றில் அந்நாட்டு இளமங்கையர் மணற்பாவை செய்து மலர்சூட்டியும், ஆற்றுப் புனலில் படிந்தும் ஆடிமகிழ்வர்.

அக் கருவூரில் இருந்து ஆட்சி புரியும் நம்பெருங்கடுங்கோ புலவர் பாடுதற்கான பேராற்றல் வாய்ந்தவன். கடிய அரண் பல கடந்து அப்பகைவர் பணிந்து தந்த பெரும்பொருள் கொண்டவன். பகைவர் பால் கொண்ட பெரும்பொருள் உடையனைப் பாடிப் பாண்மகள் பல கழஞ்சு நிறையுள்ள பொன்னரி மாலையைப் பரிசாகப் பெறுவள். பாண்மகள் பின் நின்று இசைபாடும் பாண்மகன், வெள்ளி நார் கொண்டு தொடுக்கப்பெற்ற பொற்றாமரை மலரைப் பெறுவன்."[5] என்று பெருங்கடுங்கோவைப் பாடியுள்ளார்.

இதனை நோக்குமிடத்துப் புலவராக இருந்து அரிய பலபாடல்களைப் பாடியதேயன்றிப்புலவரால் பாடப்பெறும்புகழும் உடையவன் பெருங்கடுங்கோ என்பது புலனாகின்றது.

[5] புறம், 11. பேய்மகள் இளவெயினி பாடியது.

## கொண்கான நன்னன்

பாலை பாடிய பெருங்கடுங்கோ தமது பாடல்களில் பாலைத் திணையைப் புனைந்து கூறியதோடு அப்பாலைத் திணைக்கிடையே அமைந்த வரலாறு சிலவற்றையும் கூறுகிறார். அவற்றுள் கொண்கான நாட்டை ஆண்டிருந்த 'நன்னன்' என்பவனது வரலாறும் ஒன்று.

"சேரர் குலத்தின் வழிவந்த 'நன்னன்' என்பானொரு குறுநில மன்னன். கொண்கான நாட்டை ஆட்சி செய்திருந்தான். அவனது நாடு பொன்னும் பொருளும் மிகுந்து செல்வத்தால் செழித்திருந்தது.

வேளிர் குலப் பெருமக்கள் தாம் அரிதின் முயன்று சேர்த்த பெரும் பொருளைப் பாதுகாப்பாக வைத்தற்கிடமான அரிய காவலையுடைய பாழி, பாரம் என்பன அவனுக்கு உரிய ஊர்களாக இருந்தன. நன்னன் சிறந்த வீரம் உடையவன்; பெருங்கொடையாளன்; அவனுடைய நாட்டில் வளம் மிகுந்த 'ஏழிற்குன்றம்' என்னும் மலை ஒன்று இருந்தது. அதுபுலவர் பாடும் புகழ் உடையது. மலைபடு பொருள்களை ஏராளமாக வழங்குவது.

இந்நன்னன் என்பானையும், அவனது கொண்கான நாட்டையும், அவனது ஏழிற்குன்றையும் பலபடப் புனைந்து பாடியுள்ளார் பெருங்கடுங்கோ.

*"ஆழல்மடந்தை அழுங்குவர் செலவே*
*புலிப்பொறிஅன்ன புள்ளி அம் பொதும்பின்*
*பனிப் பவர் மேய்ந்த மாஇரு மருப்பின்*
*மலர்த் தலைக்காரான் அகற்றிய தண்ணடை*
*ஒண்தொடி மகளிர் இழைஅணிக் கூட்டும்*
*பொன்படு கொண்கான நன்னன் நல்நாட்டு*
*ஏழிற்குன்றம் பெறினும், பொருள் வயின்*
*யாரோ பிரிகிற் பவரே – குவளை*
*நீர்வார் நிகர்மலர் அன்ன நின்*
*பேர்அமர் மழைக்கண் தெண்பனி கொளவே"*[6]

என்ற பாடலில் இவற்றைக் காணலாம்.

தனித்தனியே இவர் பாடிய பாடல்களைவிட கலித்தொகையில் இவர்பாடிய பாடல்கள் தனிச்சுவை உடையவை.

## கலித்தொகை மாட்சி

கலித்தொகையில் பாலைத்திணைக்குரிய 35 பாடல்கள் இவரால் பாடப் பெற்றவை. நிலங்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பவை வனப்புடையவை. வளம் உடையவை. பாலை என்பது வளமற்ற வறண்ட நிலம். ஓய்ந்த மாவும், உடைந்த

---

[6] நற்றிணை, 391.

கற்களும், காய்ந்த மரங்களும், நீரற்ற சுனைகளும், நெஞ்சற்ற மறவரும் கொண்டது பாலை. அதை வருணிப்பதோ புகழ்ந்து பாடுவதோ கடினம் என்பதுகூறாமலே விளங்கும். அக்கடினமான வேலையைத் திறம்பட ஆற்றித் தமிழக்கு வளம் சேர்த்தவர் பாலைபாடிய பெருங்கடுங்கோ.

சான்றுக்கு ஒருபாடலைக்காண்போம். தலைமகன் தலைமகளை நள்ளிரவில் உடன் போக்கில் அழைத்துச் சென்று விட்டான் என்பதை உணர்ந்து தாயுள்ளம் தவிக்கிறது; மருள்கிறது; மகளை எண்ணி எண்ணி மடிகிறது. அவள் வருத்தத்தை மாற்ற வேண்டிச் செவிலி மகளைத் தேடிப் புறப்படுகிறாள்.

அது பாலைவன வழி என்றாலும் அது பாலைவனமாக அவளுக்குத் தோன்றவில்லை. அப்பாலைவனத்தில் மகளைத் தேடித் தனியாகப் புறப்படுகிறாள். இவ்வரிய செயலை வியந்து,

*"ஏமப்பேரூர்ச் சேரியும் சுரத்தும்*
*தாமே செல்லுந்தாயரும் உளரே"*[7]

எனத் தொல்காப்பியர் தனிவிதி வகுத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

"காதல் நம்பிமார், நங்கைமார் உடன் போக்கும், போயபின் நற்றாய் இரங்கலும் புலவோர்தம் கற்பனைப் பாய்ச்சலுக்கு வளமான துறைகளாம். 122 – களவுப் பாடல்களில் ஏழில் ஒரு கூறு இத்துறைப் பாடல்கள்"[8] என இத்துறையின் சிறப்பைப் புலப்படுத்துவர் டாக்டர் வ.சுப. மாணிக்கம்.

இத்துறையைப் பாடும்பெருங்கடுங்கோ துறைத் தொடர்பானசெய்தியை மட்டும் கூறாமல் அரிய உண்மைகள் அமைந்த உலகியல் கருத்துக்களை அதில் அமைத்துக் கூறுகிறார்.

மகளைத் தேடிச்சென்ற செவிலி சுரவழியில் முக்கோல் பகவர் சிலர் எதிரே வருவதைக் காண்கிறாள். கண்டதும் அவர்களை வினவுகிறாள்.

"உறிதாழ்ந்த கரகமும், உரைசான்ற முக்கோலும் தாங்கிவரும் அந்தணப் பெரியீர்! என் மகள் ஒருத்தியும், பிறன் மகன் ஒருவனும் இவ்வழியே செல்வதைக் கண்டீரோ ?" என வினவுகின்றாள்.

முக்கோற் பகவர்கள் உண்மை நிலையை உணர்கின்றனர். இவள் மனத்தை உறுதிமொழிகளைக் கூறி ஆறுதல் அடையச் செய்வது நம் கடமை என்று எண்ணுகின்றனர். எண்ணிப் பின்வருமாறு கூறுகின்றனர்.

---

[7] தொல். பொருள், அகத்திணை இயல், சூ.37.
[8] வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.26.

"அம்மையே! பொறுமையை மேற்கொள்ளுங்கள்; மனம் அமைதி பெறுங்கள்; இவ்வழியே சென்ற உம் மகளையும் யாம் காணேம் அல்லேம்; கண்டனம்! அப்பெண்ணுக்கு நீங்கள் தாய் போலத் தோன்றுகிறது. நீங்கள் சில உலகியல் உண்மைகளை எண்ணிப் பார்க்க வேண்டும்.

மணம் கமழ்கின்ற சந்தனம் அதை மார்பில் பூசிக் கொள்பவர்களுக்குப் பயன்தருமே தவிர, தான் பிறந்த மலைக்கு என்ன நன்மையைத் தருகின்றது ?

வெண்மையான ஒளியை வீசும் முத்துக்கள் கடலில் பிறக்கின்றன. அவற்றைக் கோத்து மாலையாக அணிபவர்க்குப் பயன்படுகின்றனவே தவிர, தான் பிறந்த கடலுக்கு அவை நன்மை தருவது உண்டா ?

ஏழு வகையான சுரங்களை உடைய இன்னிசை யாழில் பிறக்கிறது. அந்த இன்னோசையைக் கேட்பவர்களுக்கு அது மனமகிழ்ச்சியைத் தருமே தவிர, தான் பிறப்பதற்கு இடமான யாழுக்கு அது ஏதேனும் பயனைத் தருவதுண்டா ? இல்லையே!

ஆராய்ந்து பார்க்குமிடத்து உமது அருமை மகளின் நிலையும் அதுதான்! ஆண்களில் சிறந்த ஒருவனை – அழகனை – தன் மனதிற்கு ஏற்ற மணாளனைத் தேர்ந்தெடுத்து அவனை வழிபட்டு அவன்பின் செல்கிறாள்! இதற்காக நீங்கள் மகிழ்ச்சிஅடையுங்கள். மன நிறைவோடு திரும்பிச் செல்லுங்கள்! என்று கூறுகின்றனர். செவிலி மனம் அமைதி பெற்றுத் திரும்புகிறாள்.

இவ்வரிய கருத்தமைந்த பாடல்

*"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை*
*மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும் ?*
*நினையுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே!*
*சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை*
*நீருளேபிறப்பினும்நீர்க்கு அவைதாம் என்செய்யும் ?*
*தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே!*
*ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கு அவைதாம் என்செய்யும் ?*
*சூழுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே!*

எனவாங்கு

*இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்!*
*சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்*
*அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே"[9]*

என்பதாகும். அரிய பொருள்நயம், சொல்லாட்சி, உவமை நலம் அனைத்தும் வாய்ந்தது இப்பாடல்.

---

[9] கலித்தொகை, 9: 12–24.

## சொல்லாட்சி

திருவள்ளுவர் ஒரு கற்புடைய மங்கை கணவனைத் தொழுதெழத் தயங்காள் என்பதை,

> *"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்*
> *பெய்எனப் பெய்யும் மழை"*[10]

என எடுத்துரைப்பார்.

அவர் கூறிய "கணவன் தொழுதெழுவாள்" என்ற சொற்றொடரை,

"சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்"

என 'வழிபடீஇ' என்ற சொல்லால் விளக்கினார் பெருங்கடுங்கோ.

**உவமை நயம்**

மலையிடைப் பிறந்த சந்தனம்

கடலிடைப் பிறந்த முத்து

யாழிடைப் பிறந்த இன்னிசை

மூன்றும் ஒரு தலைவனை மணந்த மங்கையர்க்கு உவமை ஆயின. இம்மூன்றும் அவற்றை நுகர்வோர்க்கேயன்றி பிறந்த இடத்திற்குப் பயன்தராதவை. பருவம் வந்த மங்கையரும் அத்தகையரே என்பது உலகியலை ஒட்டிய உவமை.

> *"மலையிடைப் பிறவா மணியே என்கோ!*
> *அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!*
> *யாழிடைப் பிறவா இசையே என்கோ!"*[11]

எனக் கோவலன் கண்ணகியைப் பாராட்டியது இங்கு நினையத்தக்கது.

## 3. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

கரிகால் சோழன் சங்க காலத்தில் பூம்புகாரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை ஆண்டுவந்தான். அவனுடைய ஆட்சிக்குப் பின்னர் சோழநாடு இருகூறுபட்டு இருதிறத்து சோழ மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது.

இந்நாடுகளில் ஒன்றன் தலைநகர் பூம்புகார்; மற்றதன் தலைநகர் உறையூர் என்பதைப் பெரிப்புளூஸ் என்ற நூல் கூறுகிறது. கரிகாலனுக்குப் பின்னர் உறையூர்ச் சோழமன்னர்கள் சிறப்புற்று விளங்கினர். அவர்களில் குறிப்பிடத்தக்க பெரும்புகழ் வாய்ந்தவன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். இவன் புலவர் பாடும் புகழ் மிக்கவன். உறையூரை ஆண்ட சோழமன்னர்களில் இவனே சிறந்தவன் என்பர் ஆய்வறிஞர்.

---

[10] திருக்குறள் 55.

[11] சிலம்பு, மனையறம் படுத்த காதை; 77–79.

ஆலத்தூர்கிழார், ஆடுதுறை மாசாத்தனார், ஆவூர் மூலங்கிழார், இடைக்காடனார், எருக்காட்டூர் தாயங்கண்ணனார், ஐயூர் முடவனார், கோவூர் கிழார், நல்லிறையனார், மாறோக்கத்து நப்பசலையார், வெள்ளைக்குடி நாகனார் ஆகிய புலவர்கள் பதின்மர் இவனைப் பாடியுள்ளனர்.

புலவர்களால் பாடப்பெறும் புகழ் உடையவன் என்பது மட்டுமல்ல; இவனே ஒரு புலவன் என்பது குறிப்பிடத்தக்கது. பிற நாடுகளை நாடாத சோழநாட்டு வளம், ஆட்சித் திறம், கொடையாண்மை, படையாண்மை செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடைமை ஆகிய பெருநலங்களே புலவர்கள் இவனைப் பாடுதற்குக் காரணங்களாக அமைந்தன.

இவன் சிறந்த தமிழ்ப்புலமை பெற்றவன். அதன் காரணமாகவே பெரும்புலவர் பதின்மரால் பாடும் புகழை இவன் பெற்றான் என்று கருதலாம்.

மலையில் தோன்றிய பேராறு பள்ளத்தை நோக்கிப் பாய்வதைப் போன்று புலவர்கள் எல்லாம் உன்னை நோக்கி ஆர்வத்துடன் பாட வந்தனர் என்று இடைக்காடனார் இவனைப் போற்றுகிறார்.

*"மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி*
*நிலவரை இழிதரும் பல்யாறு போலப்*
*புலவ ரெல்லாம் நின்னோக் கினரே"*[12]

என்பது அவர் புகழ்ப்பாடல்.

ஆவூர் மூலங்கிழார் அவனதுவீரத்தை, "நீ சினந்து நோக்கிய இடம் செந்தீ பற்றி எரியும்! நீ மனம் குளிர்ந்து நோக்கிய இடத்தில் பொன் கொழிக்கும்" எனவும், "பகைவரை வென்று அவர்கள் மணிமுடிகளைஅழித்துப்பெற்ற பொன்னால் செய்த வீரக்கழலை அணிந்தவன்" எனவும் அவனது வீரத்தைப் பாராட்டியுள்ளார்.

*"நீ உடன்று நோக்கும் வாய் எரிதவழ,*
*நீ நயந்து நோக்கும் வாய் பொன்பூப்ப."*[13]

எனவும்,

*"நீயே*
*பிறர் ஓம்புற மறமன்னெயில்*
*ஓம்பாது கடந்து அட்டு அவர்*
*முடி புனைந்த பசும் பொன்னின்*
*அடி பொலியக் கழல் தைஇய*
*வல்லாளனை"*[14]

எனவும் வரும் பாடலடிகளில் இதனைக் காணலாம்.

---

[12] புறம்; 42: 19–21.
[13] புறம்; 38: 5–6.
[14] புறம்; 40: 1–50.

இத்துணைப் புகழும், புலமையும் பெற்ற கிள்ளிவளவன் பாடியது ஒரே பாடல்தான். சிறு குடிகிழான் பண்ணன், கிள்ளி வளவனது உயிர் நண்பன். அற்றார் அழிபசி தீர்க்கும் பெருவள்ளல். வந்தோர் அனைவருக்கும் உணவிட்டு அவர்களது பசிப்பிணியைத் தீர்க்கும் பண்ணனைப் 'பசிப்பிணி மருத்துவன்' என்ற சிறப்புப் பெயர் தந்து கிள்ளிவளவன் பாராட்டுகின்றான்.

*"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!*
*பாணர் காண்க இவன்கடும்பின திடுடம்பை;*
*யாணர்ப் பழுமரம் புள்இமிழ்ந் தன்ன*
*ஊண்ஒலி அரவம் தானும் கேட்கும்;*
*பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி*
*முட்டை கொண்டு வற்புலம் சேரும்*
*சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்*
*சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்*
*இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும் கண்டும்*
*பசிப்பிணி மருத்துவன் இல்லம்*
*அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே"*

என்பது அவன் பாடிய பாடல்.

'ஒன்றமையாதோ கரிக்கன்று ஒது' என்ற மொழிக்கிணங்க அவனது ஒரே பாடலே அவனது பெரும்புலமையைக் காட்டப் போதுமானதாக உள்ளது.

மணிமேகலை காப்பியத்துள் கூறப்படும் கிள்ளிவளவன் என்ற சோழமன்னன் இவனேயாவான் என்பது அறிஞர் கருத்து.

## 4. கோப்பெருஞ் சோழன்

நட்பு உண்டாவதற்குக் காரணம் பல நாள் பழகும் பழக்கமாகும். அவ்வாறு பலநாள் பழகுதலோ, சேர்ந்து தங்க வேண்டிய சூழ்நிலையோ இல்லாத போதிலும் மனமொத்த உணர்ச்சி உண்டானால் போதும், நட்பு உண்டாகக்கூடும் என்பது வள்ளுவரின் கருத்து.

*"புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான்*
*நட்பாங் கிழமை தரும்"* *(திருக்குறள் 785)*

எனப் புதுமைக் கருத்தைப் புனைவர். அக்கருத்திற்கு எடுத்துக் காட்டாக அமைந்தவன் கோப்பெருஞ்சோழன். இவன் ஓர் அரசப் புலவன்.

உறையூரில் கோப்பெருஞ்சோழன் ஆண்ட காலத்தில் பாண்டிய நாட்டில் பிசிர் என்னும் ஊரில் ஆந்தையார் என்ற புலவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவர் பெரும்புலமையும், பலரும் பாராட்டும் ஒழுக்கப் பண்புகளும் பெற்றிருந்தார். அவரது

நற்பண்புகளைக் கேள்வியுற்ற கோப்பெருஞ்சோழன் அவரைப் பாராமலே புணர்ச்சியும் பழகுதலும் இல்லாமலே அவர்பால் உயிர்நட்புக் கொண்டான்.

அந் நிலையைப் பிசிராந்தையாரும் பெற்றார். கோப்பெருஞ்சோழனது அரும்பண்புகளைக் கேள்வியுற்ற அப்புலவர், அவனைப் பாராத நிலையிலேயே அவன்பால் நட்புப் பெற்றார்.

இவ்வாறு அவர் கொண்டிருந்த நட்பை

*“நுங்கோ யாரென வினவின் எங்கோ . . .*
*யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்*
*பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்*
*கோழி யோனே கோப்பெருஞ் சோழன்”*[15]

என்று அவர் பாடிய பாடலால் அறியலாம்.

கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார்பால் பெருநட்புக் கொண்டிருந்தான் என்பதை,

*“தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்*
*பிசிரோன் என்பஎன் உயிரோம் புநனே”*[16]

எனவும்,

*“இகழ்விலன், இனியன், யாத்த நண்பினன்,*
*புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே;*
*தன்பெயர் கிளக்குங் காலை, என்பெயர்*
*பேதைச் சோழன் என்னும் சிறந்த*
*காதற் கிழமையும் உடையன்”*[17]

எனவும், இவன் பாடிய பாடல்களால் அறியலாம்.

பிசிராந்தையாரைப் பார்த்து சில புதியவர்கள், ‘உமது பெயர் என்ன?’ என்று கேட்டால் அவர், ‘என் பெயர் கோப்பெருஞ்சோழன்’ என்று கூறுவாராம். இருவருள்ளும் அந்த அளவுக்கு நட்புரிமை வேரூன்றி இருந்தது. இச்செய்தியைக் கோப்பெருஞ்சோழனே தன் பாடலில் குறிப்பிட்டுள்ளான்.

## கோப்பெருஞ்சோழன் பாடல்கள்

கோப்பெருஞ்சோழன் ஒரு அரசப்புலவன் என்பது முன்னரே கூறப்பட்டது. இவன் பாடியவை,

---

[15] புறம்; 212: 1–8.

[16] புறம்; 215: 6–7.

[17] புறம்; 216: 6–10.

TA
65

குறுந்தொகையில் 4 பாடல்கள் – 20, 53, 129, 147

புறநானூற்றில் 3 பாடல்கள் – 31, 32, 33

ஆக ஏழு பாடல்கள்.

இத்துணைப் பெரும்புலவனாக இருந்தும், பகைவர் பலரை வென்ற வீரவேந்தனாகத் திகழ்ந்தபோதிலும் அவனது இறுதிக் காலம் அவலக்காலமாகவே முடிந்துள்ளது.

இந்நாட்களில் சமுதாயத்தில் ஒரு மாபெருங்குறை – மாற்றுதற்கரிய ஒரு மாசு படர்ந்து வருகிறது. ஒரு தந்தை பெற்ற புதல்வர்கள் வயதேறியவுடன் தந்தையை மதிப்பதில்லை; துச்சமாகப் பேசித் தூறு செய்வதைப் பல இடங்களில் காணலாம். இது வீண் பழியன்று. இலக்கியச் சான்றும் நடைமுறை அனுபவச் சான்றும் பெற்றுள்ள உலகியல்.

*"பிள்ளைதான் வயதில் மூத்தால்*
*பிதாவின் சொற்புத்தி கேளான்;*
*கள்ளவிழ் குழலாள் மூத்தால்*
*கணவனைக் கருதிப் பாராள்;*
*தெள்அற வித்தை கற்றால்*
*சீடரும் குருவைத் தேடான்;*
*உள்ளநோய் பிணிகள் தீர்ந்தால்*
*உலகர் பண்டிதரைத் தேடார்;"*[18]

என்னும் பாடலை நினைக.

"புல்லிதழ் பூவிற்கும் உண்டு என்ப. குணங்களால் நிறைந்த குன்றென விளங்கும் கோப்பெருஞ்சோழனுக்குப் பிறந்த மக்கள் தகாத ஒழுக்கம் மேற்கொண்டு மாண்பிலராயினர். தங்கள் தந்தையார் இருக்கும்போதே தாங்கள் நாடாள வேண்டும் என்ற பேராசை உடையராயினர்.

மக்கள் மாண்பிலராதலை அறிந்த கோப்பெருஞ்சோழன் அவர்கள் விருப்பத்திற்கு இசையானாயினன். அதனால் சினங்கொண்ட அவனது புதல்வர்கள் அவனை வென்று நாட்டைக் கைப்பற்றக் கருதிப் போருக்கு எழுந்தனர்.

நாட்டின் மக்கள் துன்புறுவரே என்ற எண்ணம் கொண்ட கோப்பெருஞ்சோழன் தன் புதல்வர்களை அடக்கக் கருதித் தானும் போருக்கு எழுந்தான். அப்போது அவனுடைய நன்மையில் நாட்டம் கொண்ட புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற புலவர் அவனைத் தடுத்தார்.



[18] விவேக சிந்தாமணி, ப.31.

"வேந்தர் வேந்தே! நின் புதல்வர்கள் அறியாமையால் போருக்கு எழுந்துள்ளனர். நீயும் அவ்வாறு எழுதல் தக்கதன்று. உன்னோடு போருக்கு எழுந்தவர்கள் நின்குலப் பகைவராகிய பாண்டியரோ, சேரரோ அல்லர். அவர்களை வென்று புறங்காணப் புறப்பட்டிருக்கும் நீயும் அவர்களின் குலப்பகைவன் அல்ல; அவர்கள் உன் புதல்வர்கள்.

இவ்வுலகில் புகழை நிலைநிறுத்தி நீ வீட்டுலகம் சென்றபின் இந்நாட்டாட்சிக்குரியவர் அவர்களேயன்றோ? இப்போரில் நின் மக்கள் மடிகின்றனர் என்று வைத்துக் கொண்டால் அதற்குப் பின் உன் ஆட்சியை யாருக்குத் தருவாய்? அவ்வாறன்றி நீ மடிகின்றனை என்று வைத்துக் கொண்டால் அதனால் உனக்கு உண்டாகும் பழியை எண்ணிப் பார்! ஆகவே இப்போரை மேற்கொள்ளுதல் உனக்குத் தக்கதன்று; போரைத் தவிர்க!" என்று எடுத்துரைத்தார்.

புலவரின் அறிவுரை கேட்ட மன்னன் போரைத் தவிர்த்து மீண்டான். ஆனால் மக்களின் செயல் அவன் மனத்தைக் குன்றச் செய்தது. மானம் இழந்தபின் வாழாமை முன் இனிதே என்று எண்ணினான். வடக்கிருந்து தன் உயிரை விடத் தீர்மானித்தான்.

மன்னன் விருப்பப்படி வடக்கிருப்பதற்கான இடம் தயாரிக்கப்பட்டது. அப்போது அவன் பாடிய பாடல்கள் (புறம்: 214, 215, 216) அவனது புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன.

தான் வடக்கிருப்பதற்குத் தயாரிக்கப்பட்ட இடத்திலேயே தன் நண்பர் பிசிராந்தையார்க்கும் வடக்கிருப்பதற்கான இடம் அமைக்குமாறு கூறினான்.

அதுகேட்ட புலவர்கள் வியந்தனர். "அரசே! பிசிராந்தையார் நின் பெயரையும் புகழையும் கேட்டவரேயன்றி நின்னைக் கண்டு பழகியவரல்லர். அவர் இருக்கும் இடமோ மிகச் சேய்மையில் உள்ளது. அவ்வாறிருக்க அவர் எப்படி வர இயலும்?" என்றனர்.

அது கேட்ட கோப்பெருஞ்சோழன், "அவர் என் உயிர் நண்பர். சேய் நாட்டினராயினும் உறுதியாக வருவார். "கெட்டகாலை விட்டனர்" என்ற பழிக்கு நாணுந்தன்மை உடையவர், நிச்சயம் வருவர், இடம் ஒழித்து வையுங்கள்" என்றான்.

இக்கருத்தமைந்த அவனது பாடல்

*"கேட்டல் மாத்திரை யல்லது யாவதும்*
*காண்டல் இல்லாது யாண்டுபல கழிய*
*வழுவின்று பழகிய கிழமைய ராகினும்*
*அரிதே தோன்றல் அதற்பட் டொழுகல்என்று*
*ஐயம் கொள்ளன்மின் ஆறறி வாளீர்!*
*இகல்விலன்; இனியன்; யாத்த நண்பினன்;*
*புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே*

*தன்பெயர் கிளக்குங் காலை என்பெயர்*
*பேதைச் சோழன் என்னும் சிறந்த*
*காதற் கிழமையும் உடையன் அதன்தலை*
*இன்ன தோர் காலை நில்லலன்*
*இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கிடமே"*[19]

என்பதாகும்.

## 5. சோழன் நலங்கிள்ளி

சோழ நாட்டு அரசப்புலவர்களில் வீரத்தாலும் ஈரத்தாலும் புலமையாலும் சிறந்த புகழை உடையவன் சோழன் நலங்கிள்ளி. இவன் சங்ககாலச் சோழமன்னருள் ஒருவன்.

இவன் பாடிய பாக்கள் புறநானூறு 73, 75–ஆம் பாடல்கள். வஞ்சினத்தால் புகழ் பெற்றவன் என்பதை இப்பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.ஆலத்தூர் கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கோவூர் கிழார் என்ற முப்பெரும்புலவர்கள் இவனைப் பாராட்டிப்பாடியுள்ளனர். இவர்கள் நலங்கிள்ளியின் வீரம், கொடை, வெற்றி முதலியவற்றைப் பாராட்டியுள்ளனர்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் இவனது படையின் பேரளவைப் பின்வருமாறு புகழ்ந்து பாடியுள்ளார்:

"பகைவர் நாட்டை வெல்லக் கருதிச் செல்லும் அவனது படை, வழியில் பனந்தோப்பு ஒன்றினூடே செல்லும்போதுஅப்படையின் முன் வரிசையில் செல்லும் வீரர்கள் பனையின் நுங்கினை உண்பர். அவர்கள் சென்றதும் படைவரிசையின் இடைப்பகுதி அவ்விடம் வரும்போது அப்பனைமரங்கள் முற்றிப் பழுத்து நிற்கும். ஆதலின் அவ்விடைப் பகுதியில் வருவோர் பனையின் பழத்தினை உண்பர். படை மிக நீளமானது. படையின் பிற்பகுதி அவ்விடத்தை அடையும்போது பனையின் கிழங்கு மட்டுமே கிடைக்கும். அத்துணைப் பெரும்படை அது என அவனது படைப்பெருமையைப் போற்றுவர்.

*"தலையோர் நுங்கின் தீஞ்சோறு மிசைய*
*இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்*
*கடையோர்,*
*விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர"*[20]

என்னும் பாடலடிகளில் இதனைக் காணலாம்.

சோழன் நலங்கிள்ளி செய்த அயல்நாட்டுப் போர்கள் பற்றிய செய்திகள் விரிவாக அறியப்படவில்லை. நலங்கிள்ளிக்கும் அவன் தாயத்தானாகிய உறையூர்

---

[19] புறம்; 216.
[20] புறம்; 225: 1–3.

நெடுங்கிள்ளிக்கும் இடையே நடைபெற்ற போர் குறித்துக் கோவூர்கிழார் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.

நலங்கிள்ளி பெரும்புலவன். அவன் பாடிய புறம் 73–ஆம் பாடல். பெரும் போர் கண்டும் கலங்காத உறுதியான நெஞ்சம் உடையவன் இவன் என்பதை எடுத்துரைக்கின்றது.

ஒருமுறை பகைவர்கள் தன் மீது படை எடுத்து வந்தபோது,

"என் அரசைக் கைப்பற்றுவதற்காகப் படை எடுத்து வந்து நிற்கும் என் பகை மன்னன், மெல்ல வந்து? என் நல்லடியில் பணிந்து, 'நின் ஆட்சி உரிமையைத் தந்தருள்க' என்று இரந்து கேட்பானாயின் என் ஆட்சியைத் தருவது என்பது எளிது; என் உயிரையே வேண்டுமாயினும் தருவேன். ஆனால் அப்படிச் செய்யவில்லை!

தூங்கும் புலி ஒன்றைக் காலால் மிதித்து எற்றிய குருடனைப் போன்று, அமைதியாக ஒதுங்கியிருந்த என் ஆண்மையை இகழ்ந்த அம்மடவோன் இனித் தப்பிச் செல்லுதல் எளிதன்று.

அப்பகைவன், யானையின் காலில் மிதிபட்ட மூங்கில் முளையைப் போன்று அழியுமாறு அவனை அழித்து வெற்றி கொள்வேன்.அவ்வாறுகொள்ளேனாயின் அன்பை விழையாது, பொருளை விழையும் பரத்தையருடைய அணைப்பில் என் மாலை குழைவதாகுக" என்று அவன் கூறிய வஞ்சின மொழிகள் அவனதுபெருவீரத்தையும், பரத்தை மகளிர் வலையில் படாத அவனது நல்லொழுக்கத்தையும் எடுத்துரைக்கின்றன.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயர்ந்த தமிழ்ப் பண்பாடு கீழ்க்காண் பாடலில் மிளிர்கிறது.

*"மெல்ல வந்துஎன் நல்லடி பொருந்தி*
*'ஈ'–என இரக்குவ ராயின் சீருடை*
*முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்?*
*இன்னுயி ராயினும் கொடுக்குவென்; இந்நிலத்து*
*ஆற்றல் உடையோர் ஆற்றல் போற்றாதுஎன்*
*உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்*
*துஞ்சுபுலி இடறிய சிதடன் போல*
*உய்ந்தனன் பெயர்தலோ அரிதே; மைந்துடைக்*
*கழைதின் யானைக் காலகப் பட்ட*
*வன்திணி நீள்முளை போலச் சென்றவண்*
*வருந்தப் பொரேஎ னாயின், பொருந்திய*
*தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்*
*பல்லிருங் கூந்தல் மகளிர்*
*ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே"*

என்னும் அவனது பாடலில் இவ்வரிய கருத்துக்களைக் காணலாம்.

### சொல் நயம்

தன்னைச் சேர்ந்த பலருக்கும் நன்மையே செய்பவன் என்பதை 'நல்லடி' என்ற சொல்லால் விளக்கினான். பகைவர்கள் மெல்ல வந்து பணிந்தால் மட்டும் போதாது. 'ஈ' என்று இரந்து கேட்க வேண்டும். அப்போதுதான் நாடு கிடைக்கும் என்பதை 'இரக்குவராயின்' என்ற சொல் உணர்த்தி நின்றது.

*"ஈஎன இரத்தல் இழிந்தன்று அதனெதிர்*
*'ஈயேன்' என்றல் அதனினும் இழிந்தன்று"*

என்ற ஆன்றோர் மொழியை இதுநயம்பட உணர்த்தி நின்றது.

### உவமை நலம்

1. *"துஞ்சுபுலி இடறிய சிதடன் போல"*
2. *"மைந்துடைக் கழைதின் யானைக்*
   *காலகப்பட்ட வன்திணி நீள்முளை போல"*

என்னும் இரண்டு உவமைகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளன.

புலி வலிமை மிக்கது. மனிதனை அடித்து வீழ்த்தி உண்ணும் ஆற்றல் வாய்ந்தது. அது நலங்கிள்ளிக்கு உவமை.

தூங்கும் புலியைக் காலால் இடறுவது அதற்குக் கடுஞ்சினத்தை உண்டாக்கவல்லது. அவ்வாறு உண்டாக்கியவன் தப்பிச் செல்ல முடியாது. இங்கு துஞ்சு புலியை இடறிய சிதடன் நலங்கிள்ளியின் பகைவன்.

கண் இல்லாத காரணத்தால் புலியை இடறிய சிதடன் போல, அறிவெனும் கண் இல்லாத காரணத்தால் பகைவர் என்னுடன் போருக்கு வந்துள்ளனர் என்பது உவமை நயம்.

மூங்கிலைத் தின்னும் வழக்கமுடைய யானை அதன் முளையை மிதித்தால் அது கூழாகிச் சிதையும். அதுபோன்று பகைவரோடு பொருது வெற்றி கொள்ளும் வழக்கமுடைய என்னோடு, பொர வந்த பகைவன் யானையின் காலகப்பட்ட மூங்கில் குருத்துப் போல் அழிவான் என உலகியல் தோன்ற நின்றது.

## 6. சோழன் நல்லுருத்திரன்

எட்டுச் சுவடிகளில் 'நல்லுருத்திரன்' எனவும், 'சோழன் நல்லுருத்திரன்' எனவும் இவர் பெயர் காணப்படுகிறது. 'உருத்திரன்' என்ற பெயரமைப்பைக் கொண்டு இவன் காலத்தால் பிற்பட்டவன் என்பர்.[21]

[21] ஔவை சு. துரைசாமிப் பிள்ளை (உ.ர்) புறநானூறு உரை, பாகம் உ., ப. 411.

இக்கருத்து பெரும்பாலும் பொருந்தும் என்று கொள்ளலாம். ஆனால் சங்க காலத்தில் தொன்மையான புலவர்கள், மன்னர்கள் சிலரது பெயர்கள் வடசொல்லாக அமைந்திருப்பதும் சிந்தனைக்குரியது.

உக்கிரப் பெருவழுதி, மார்க்கண்டேயனார், உலோச்சனார், வால்மீகியார் போன்ற பெயர்களை நினைக.

இவன் அரசப் புலவன்; உலகியல் சிந்தனையாளன். புறநானூற்றில் 190–ஆம் பாடல் இவன் பாடியது. அப்பாடலைக்கொண்டு இவனது புலமை நலம் உணரக்கூடியதாக உள்ளது.

இவன் தன் பாடலில், எலி, புலி இரண்டையும் உவமையாக்கி அவற்றின் இயல்புகளைத் தெளிவாக விளக்கியுள்ளமை, இவனது உலக அனுபவ அறிவைக் காட்டுகிறது.

வயலில் உழவர்களால் விதைக்கப்பட்ட நெல் விளைந்து முற்றிக் கதிர்கள் சாய்ந்து கிடக்கும் போது, அவற்றிலுள்ள நெல் மணிகளைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொய்து கொண்டு போய் வளையில் சேர்த்து வைக்கும் இயல்புடையது எலி! அது சிறிய முயற்சி! களவை அடிப்படையாகக் கொண்டது.

புலி பேராண்மை உடையது. அதன் முயற்சி பெருந்தகையது. அது, பசி எடுத்ததும் வேட்டை மேற்கொண்டு எழுந்து மலைச்சாரலில் சென்று காட்டுப்பன்றியை அடித்து வீழ்த்தும். அவ்வாறு வீழ்த்தப்பட்ட பன்றி இடப்பக்கம் வீழுமாயின் அதனை அப்புலி உண்பதில்லை. அது தன் பேராண்மைக்குக் குறைந்ததென்பது அதன் கணிப்பு. அப்பன்றியை உண்ணாமல் விட்டுச் சென்று, பசியுடன் குகையில் படுத்திருந்து மறுநாள் வேகத்துடன் எழுந்து பெரிய ஆண் யானை ஒன்றை அடித்து, வலப்புறமாக வீழ்த்தி உண்ணும் இயல்பை உடையது புலி!

இது பெருந்தன்மையான முயற்சி. மக்களிலும் எலி போன்ற சிறு முயற்சியை – களவை அடிப்படையாகக் கொண்டவர் பலர் வாழ்கிறார்கள். அவர்களோடு நட்புக் கொள்வதை யான் தவிர்வேனாகுக! இவர்கள் உரமிலாளர்கள்!

புலி போன்ற பெருமையும், வலிய முயற்சியும் உடைய சிலர் வாழ்கின்றனர். அவரோடு நட்புச் செய்யும் பேறு எனக்கு உரியதாகுக!" என்று கூறுகின்றான் நல்லுருத்திறன்.

இவ்வரிய கருத்தை விளக்கும் அவனது பாடல்:

*"விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்*
*வல்சிகொண்டு அளை மல்க வைக்கும்*
*எலிமுயன் றனைய ராகி உள்ளதம்*
*வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு*
*இயைந்த கேண்மை இல்லா கியரோ!*
*கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென*
*அன்றவண் உண்ணா தாகி வழிநாள்*
*பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து*
*இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்*
*புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து*
*உரனுடை யாளர் கேண்மை யொடு*
*இயைந்த வைகல் உளவாகிய ரோ!"*[22]

என்பதாகும்.

**கற்பனை நயம்**

இப்பாடலில் புலவரின் கற்பனை மெருகேறி நிற்பதைக் காண்கிறோம். ஆடமைத் தோள் நல்லார்க்கு அணிகள் அழகு செய்வதைப் போல செய்யுளுக்கு அழகூட்டுபவை கற்பனைகள்.

இமயம் உயரமானது என்று எத்தனை தடவை கூறினாலும் அதன் சிறப்பைப் புலப்படுத்தியதாகாது. கற்பனையைப் பயன்படுத்தி ஒரே அடியில்

*"விண்ணை இடிக்கும் தலைஇமயம் – அதன்*
*வெற்பை அடிக்கும் திறனுடையார்"*[23]

என்று பாடும்போது இமயத்தின் உயர்நிலை படிப்பவர் மனதில் பதிகிறது.

இதுபற்றி டாக்டர் மு. வரதராசனார் கூறும் கற்பனை விளக்கம் இங்கு நினையத்தக்கது.

"உள்ளதை உள்ளவாறு அறிவிக்க முயல்வது அறிவியல் (Science), உள்ளதை உணர்ந்தவாறு உணர்த்துவது கலை (Arts). கருவிகளால் அளந்து வரையறுத்துக் கூறுவது அறிவியல். அளவைகளைப் பற்றிக் கவலைப்படாமல் உணர்ச்சியால் வாரி வழங்குவது கலை!

*"விண்ணை இடிக்கும் தலை இமயம்"*

என்பது கலை. விண் என்ற ஒன்று இல்லை என்றும், அது அந்த விண்ணைத் தாக்கி இடிப்பதும் இல்லை என்றும், இமயமலை கடல் மட்டத்திற்கு மேல்

---

[22] புறநானூறு; 190.

[23] பாரதியார் பாடல்கள்; செந்தமிழ்நாடு.

இருபத்தொன்பதாயிரத்து நூற்று நாற்பத்தோரடி உயரம் உடையது என்று அறிவது அறிவியல்."[24] என்று கூறுவது சிந்திக்கத்தக்கது.

இலக்கியங்கள் 'கலை' வகையைச் சேர்ந்தவை. கலைக்குக் கற்பனை தேவை. கற்பனை பொலிந்தால் கலை சிறக்கும்.

*"கலை உரைத்த கற்பனையே நிலை எனக்*
*கொண்டாடும் கண்மூடி வழக்கம்"*[25]

என்பர் இராமலிங்க அடிகள்.

கற்பனை என்பது உள்ளதை உள்ளவாறே உணர்த்துவது அல்ல. உள்ளது சிறப்பதற்காகச் சில புனைவுகளைக் கற்பித்துக் கூறுவதே கற்பனை.

"உள்ளதை உள்ளவாறே படைப்பதானால் அது கலையாவதில்லை. அதைப் படைத்திடக் கலைஞரும் முன்வருவதில்லை. உள்ளம் விரும்புமாறு படைக்கும் உணர்ச்சியே பாட்டு, ஓவியம் முதலிய கலைகளுக்கு அடிப்படையாகும்.

உள்ளதை உள்ளவாறே எடுத்துரைக்கும் ஆற்றலுக்கு இன்றியமையாதது பகுத்தறிவே. அத்தகைய பகுத்றிவு கொண்டு – காரணம் காணும் அறிவு கொண்டு கலைகளைப் படைத்தல் இயலாது என்கிறார் வின்செஸ்டர்[26].

ரிச்சர்ட்ஸ் என்ற ஆய்வறிஞர் கற்பனையை உணர்த்தும் ஆங்கிலச் சொல்லுக்கு (imagination) ஆறு வகையான பொருள் உண்டெனக் கூறுகிறார்.

1. மனக்கண்ணில் பொருள்களைக் காணுதல்.
2. உவமை, உருவகம் முதலியவற்றால் பொருள்களை உறவாக்கிக் காணுதல்.
3. மற்றவருடைய மனநிலையை – இன்ப துன்பங்களை உணர்தல்.
4. வெவ்வேறாக உள்ள பொருள்களை இயைத்துக் காணுதல்.
5. வாழ்க்கையின் அனுபவத்தை வெவ்வேறு வகையில் அமைத்துக் காணுதல்.
6. பொருள்களை உள்ளவாறே உணரும்போது அவற்றின் மாறுபட்ட பொருள்களை நிறுத்துக் காணுதல்.[27]

---

24 டாக்டர் மு. வரதராசனார், இலக்கியத்திறன், ப.17.
25 இராமலிங்க அடிகள், திருவருட்பா, திருக்கதவம் திறத்தல் – 9.
26 C.T. Winchester, Some Principles of Literary Criticism, p.123.
27 Richards, I.A., Goleridge on imagination, 1968.

மேல்நாட்டு அறிஞர்கள் ஆராய்ந்து கூறும் கற்பனைத் திறன்கள் சங்க இலக்கியப் பாடல்களில் அக்காலப் புலவர்களால் அமைத்துக் கூறப்பட்டுள்ளன என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

## நல்லுருத்திரன் பாடலில் கற்பனை

கற்பனை என்பது முற்றிலும் உண்மையானதன்று. அது கவிதையின் சுவையை மிகுவிப்பதற்காகக் கலை உரைத்த புனைவு என்பது முன்னரே சுட்டப்பட்டது.

எலியின் சிறுமையையும் புலியின் பெருவலிமையையும் சிறப்பித்துக் காட்ட விரும்புகிறார். புலியின் வலிமையில் கற்பனையை ஏற்றிக் கூறுகிறார்.

புலி தான் அடித்த உணவை உடனடியாகக் கிழித்து உண்ணும். அது இடப்பக்கம் வீழ்ந்ததா, வலப்பக்கம் வீழ்ந்ததா என்று பார்ப்பதில்லை. சுருங்கக்கூறினால் வலப்பக்கம் இன்னது, இடப்பக்கம் இன்னது என்பதே அதற்குத் தெரியாது.

இடப்பக்கம் வீழ்ந்த உணவு தரக்குறைவானது எனக்கருதி, அதனை உண்ணாமல் சென்று பட்டினியோடு குகையில் கிடந்து, மறுநாள் வலிமையோடு புறப்பட்டுச்சென்று யானையை அடித்து, வலப்புறமாக வீழ்த்தி உண்ணும் எனப் புனைந்திருப்பது அதீத கற்பனை.

*"கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென*
*அன்றவண் உண்ணா தாகி வழிநாள்*
*பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து*
*இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்*
*புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து*
*உரனுடை யாளர்"*

என்ற அடிகளில் இக்கற்பனை அமைந்து மெலிவிலாளரது உள்ளத்தின் உரனைப் புலப்படுத்துகின்றது.

## 7. ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன்

*கல்வி சிறந்த தமிழ்நாடு – புகழ்க்*
*கம்பன் பிறந்த தமிழ்நாடு! – நல்ல*
*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு!*

என்று தமிழின் மொழி மணத்தைப் பாராட்டினார் பாரதியார். பண்டை நாட்களில் தமிழின் மணம் வடநாட்டிலும் பிற நாட்டிலும் வீசத் தொடங்கியபோது பல வடநாட்டு அறிஞர்கள் தமிழ்நாடு வந்து தமிழ் பயின்று, தமிழ்ப் புலவர்களாக விளங்கினர்.

இவ்வகையில் மார்க்கண்டேயனார், வால்மீகியார் போன்றவர்களைக் குறிப்பிடலாம்.

அந்நாளில் தமிழ் பயில வேண்டும் என்று விரும்பிய வடநாட்டு மன்னருள் 'யாழ்ப் பிரமதத்தன்' என்பானும் ஒருவன். இவன் சங்க காலத்தில் வடநாட்டின் ஒரு பகுதியை ஆண்டவன். இவன் தமிழ்நாடு போந்து புலனழுக்கற்ற அந்தணரான கபிலரை அணுகித் தனக்குத் தமிழ் கற்பிக்குமாறு வேண்டினான். அவனுக்குத் தமிழின்திறத்தை தமிழின் தனித்தன்மையை உணர்த்துவதற்காகக் குறிஞ்சிப் பாட்டை இயற்றினார் கபிலர் என்பர்.[28]

"குறுந்தொகையைப் பாடிய புலவர்கள் வரிசையில் 'ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன்' என்பானொருவனும் இடம் பெற்றுள்ளான்.

'ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன்' என்ற இப்பெயரையும், கபிலரால் தமிழறிவு பெற்ற ஆரியவரசன் பெயராகிய 'ஆரியவரசன் பிரகத்தன்' என்ற பெயரையும் ஒன்றாக நிறுத்தி ஒப்புநோக்கியவழி இவ்விரு பெயராலும் குறிப்பிடப்படுவோர் இருவரல்லர்; ஒருவரே எனக் கொள்ளுதல் கூடும்"[29] என்பர் ஆய்வறிஞர் கா. கோவிந்தன்.

கபிலரிடம் தமிழ் பயின்று தமிழ்ப் புலவனாகித் தமிழ்க் கவிதைகளை இயற்றும் புலமை பெற்றான்பிரகத்தன். அரசப் புலவனாகிய இவன் பாடிய சங்கப் பாடல் குறுந்தொகையில் 184–ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது.

ஒரு தலைமகன் தன் உள்ளத்தை ஓர் அழகிய பருவமங்கையிடம் பறிகொடுத்தான். அவள் நினைவாக உள்ளம் கலங்கிக் காமம் மீதூர்ந்து வருந்தினான். அவன் செயல் கண்ட அவனது ஆருயிர் நண்பன் அவனைக் கடிந்துரைத்தான்.அவ்வாறு கடிந்துரைத்தவனுக்குப் பின்வருமாறு விடை கூறினான் தலைவன்.

"என் அருமை நண்பா! கடற்கரையில் நுண்ணிய வலைத்தொழில் வல்ல பரதவர் பெற்றெடுத்த ஒரு மடமகளை நான் கண்டேன். மயில் தோகையின் கண்களைப் போன்ற அழகிய தலைமுடியை அவள் பெற்றிருந்தாள். கொல்லிப் பாவை போன்ற அழகிய தோற்றம் அவளுக்கிருந்தது.

அங்கு சென்று அவளைக் கண்டால் அவள் கண்வலைப்படாமல் மீளுதல் அரிது. ஆண்டுச் சென்ற என்நெஞ்சம் அவள் வலையுள் அகப்பட்டுக்கொண்டது. அவ்வாறு அகப்பட்டுக் கொண்டு, 'இன்னதற்கு இன்னது' என்று ஆராயும் அறிவை இழந்துவிட்டது. அதனால், அது என்னோடு வராமல் அங்கேயே நின்றுவிட்டது. நடந்தது இதுதான்!

[28] உ.வே. சாமிநாதைய்யர் (ப.ர்), பாடினோர் வரலாறு, பத்துப்பாட்டு, ப.35.

[29] புலவர் கா. கோவிந்தன், காவல பாவலர்கள், ப.118.

தாம் கண்டறிந்த ஒன்றை மறைத்துப்பொய் கூறுதல் சான்றோர் இயல்பன்று. எனவே யான் கூறியது முற்றும் உண்மை! அதோ தோன்றும் கானலை அடுத்த சிற்றூர்க்குச் செல்வதை நீ விரும்பாதே! அங்கு சென்றால் நீயும் என்போல ஆகிவிடுவாய்; பின்பு என்னை இவ்வாறு இடித்துரைக்க மாட்டாய்."

இது தலைவன் கூறிய அகவுணர்வைச் சித்தரிக்கும் உரை. பொய்ம்மை கலவாதது. இதனை விளக்கும் பிரமதத்தனது பாடல்:

*"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை;*
*குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே;*
*இதற்கிது மாண்டது என்னாது அதற்பட்டு*
*ஆண்டொழிந் தன்றே மாண்தகை நெஞ்சம்;*
*மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை,*
*நுண்வலைப் பரதவர் மடமகள்*
*கண்வலைப் படூஉம் கான லானே"*[30]

என்பது. இப்பாடல் பொருள் நயம் சிறந்தது. வலையை உடைய பரதவர் மகள் ஆதலின் தலைவியின் கண்ணும் வலையாகவே உருவகம் செய்யப்பட்டுள்ளது ஓர் நயம். பரதவர் கடலில் மீன்பிடித்துத் தன்வயப்படுத்தல் போன்று தலைவியும் தன் கண்வலையை வீசி ஆடவரைத் தன்வயப்படுத்துவள் என்பது பெறப்பட்டது.

*"கடல்புக்கு உயிர்கொன்று வாழ்வர் நின்ஐயர்;*
*உடல்புக்கு உயிர்கொன்று வாழ்வை மன்நீயும்"*[31]

என்ற சிலப்பதிகார அடிகள் இங்கு நினையத் தக்கவை.

இச்சிறு பாடலே பிரகதத்தனது புலமையை உணர்த்தப் போதியதாக உள்ளது. வலைஞர்மட மகளின் கண்களை வலையாக உருவகப்படுத்திய தொடர்பும், "அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை" என சான்றோர் இயல்பு கூறிய புலமைத்திறமும் போற்றுதற்குரியவை.

'ஆரியர்' என்ற சொல் வடநாட்டில் குடியேறிய பார்ப்பனர்களை மட்டும் குறிப்பதன்று. தமிழகத்தில் வடக்கே உள்ள ஒருநாடு 'ஆரியநாடு' எனப் பெயர் பெற்றிருந்தது. அங்கிருந்து வந்து தமிழ்நாட்டில் கழைக்கூத்தாடியவர்களை 'ஆரியக் கழைக்கூத்தாடிகள்' எனத் தமிழிலக்கியங்கள் குறித்தன.

*"ஆரியர், கயிறாடு பறையில் கால்பொரக் கலங்கி*
*வாகை வெண்ணெற் றொலிக்கும்*
*வேய்பயில் அழுவம்"*[32]

---

30 குறுந்தொகை, 184.
31 சிலம்பு, கானல் வரி, 17.
32 குறுந்தொகை, 7: 3–6.

என்பது குறுந்தொகை. ஆரியக் கூத்தர் கழைக்கூத்தாடுவதோடு இனிமையாகவும் பாடுவர் என்பதை,

*"ஆடியல் பாணிக் கொக்கும்*
*ஆரியஅமிழ்தப் பாடல் கோடியர்"*[33]

என்ற கம்பநாடர் வாக்குப் புலப்படுத்தும். அத்தகைய ஆரியநாட்டை ஆண்ட அரசர்களில் ஒருவன் பிரகத்தன் என்பது அறியத்தக்கது.

## 8. அண்டர் மகன் குறுவழுதி

இவர் பாண்டிய மரபைச் சேர்ந்த அரசப்புலவர் என்பது ஒருசார் அறிஞர் கருத்து. அண்டர் என்ற பெயரைக் கொண்டு இவர் ஆயகுடியினராகலாம் என்று கருதுவர் புலவர் கா. கோவிந்தன்.

*"அண்டர் என்பது 'ஆயர்' என்ற பொருளுடையது.*

*"அண்டர்கயிறு அரிஎருது"* — *குறுந் 117.*

*"அண்டர் பல்லா பயந்த நெய்"* — *குறுந் 210.*

எனவரும் இடங்கள் காண்க. ஆதலின் இவர் ஆயர் குலத்தவராவர் என்றும் கொள்ளலாம்.

*"தென்னவன்*
*தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய*
*நல்லினத்து ஆயர்"* — *முல்லைக்கலி – 4.*

என்ற தொடர் பண்டு பாண்டியர் குடியும், ஆயர் குடியும் உறவு கொண்டிருந்தன என்பதை உணர்த்துவது காண்க."

என்ற இவரது கூற்றால் இப்புலவர் ஆயர் குலத்தவராதல் வேண்டும் என்பதே இவர் கருத்து என்பதை உணரலாம்.

குறுந்தொகையில் 345–ஆம் பாடலைப் பாடியவர் 'அண்டர் மகன் குறுவழுதி' எனவும், அகம்228–ஆம் பாடலைப் பாடியவர் 'அண்டர் மகன் குறுவழுதியார்' எனவும் காணப்படுகிறது. இருவரும் வேறல்லர்; ஒருவரே என்பது அறியத்தக்கது.

இவர் பாடியன மூன்று பாடல்கள்

குறுந் – 345

அகம் – 228

புறம் – 346

இரண்டு அகப்பாடல்கள், ஒன்று புறப்பாடல்.

---

33 கம்பராமாயணம், கார்கால, 33.

அகநானூற்றுப் பாடலில் குறிஞ்சி நிலக்காட்சியை இவர் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

**வருணனைத் திறம்**

"தேனீக்கள் ஒலித்தலால் 'கல்' என்ற ஓசை எழவும், அருவிகள் பாய்ந்தோடி வருகின்றன. அவற்றின் நீர் சந்தன மரங்களில் பாய்ந்து குளிர் விளைக்கின்றது.

மலைச்சாரலில் குவளை மலர்கள் சுனைகளில் பூத்து மணம் கமழ்கின்றன.

நிலவொளி பகல்போல் வீசுகின்றது. மலைச்சாரலில் பூத்து நிற்கும் வேங்கையின் மலர்கள் புலிகளின் உடலில் உள்ள புள்ளிபோல் தோன்றுவதைக் கண்டு பெண் யானைகள் அஞ்சி ஓடுகின்றன. இத்தகைய வளம் பொருந்தியது மலைநாடு." எனக் குறிஞ்சி நிலம் வருணிக்கப்படுகிறது. இதனை,

*"பிரசப் பல்கிளை ஆர்ப்பக் கல்லென*
*வரைஇழி அருவி ஆரம் தீண்டித்*
*தண்ணென நனைக்கும் நளிமலைச் சிலம்பில்*
*கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளைக்*
*கன்முகை நெடுஞ் சுனை . . . .*
*வான்கண் விரிந்த பகல்மருள் நிலவின்*
*சூரல் மிளைஇய சாரல் ஆராற்று*
*ஓங்கல் மிசைஇய வேங்கை ஒள்வீ*
*புலிப் பொறிகடுப்பத் தோன்றலின் கயவாய்*
*இரும்பிடி இரியும் சோலை"*[34]

என்ற பாடலில் காணலாம்.

இவர் பாடிய புறப்பாடல், 'மகட்பாற் காஞ்சி' என்றும் புறத்துறை பற்றியது.

'மகட்பாற் காஞ்சி' என்பது 'மகள் மறுத்து மொழிதல்' என்னும் அரசியல் வழக்குப் பற்றியது.

பண்டைக் காலத்தில் முடியுடை மூவேந்தர்கள், வேளிர் முதலிய உயர்ந்த குடியினரிடையே பெண் கொள்ளும் வழக்கம் இருந்தது.

கரிகால் சோழனின் மனைவி நாங்கூர் வேளின் மகள் (நாங்கூர் வேண்மாள்) என்பதும், சேரன் செங்குட்டுவனின் அரசமாதேவி இளங்கோவேள் மகள் என்பதும் அறியத்தக்கது.

*"வானவர் தோன்றல் வாய்வாட் கோதை*
*விளங்கு இலவந்தி வெள்ளி மாடத்து*
*இளங்கோ வேண்மாள் உடனிருந் தருளி"*[35]

என்னும் இளங்கோவடிகள் வாக்கு இதனைப் புலப்படுத்தும்.

---

[34] அகம்; 228.

[35] சிலம்பு, காட்சிக்; 3–5.

மறக்குடி மங்கையரை மணக்க மன்னர்கள்பெண் வேண்டும்போது எல்லா மறவர்களும் பெண் கொடுக்க இசைவதில்லை. மகட்கொடை மறுப்பதும் உண்டு. அதனால் போர் விளைவதும் உண்டு. இந்நிகழ்ச்சியை 'மகள் மறுத்து மொழிதல்' எனப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுகின்றது.

**மகள் மறுத்து மொழிதல்**

*"வெம் முரணான் மகள் வேண்ட*
*அம்மதிலோன் மறுத்துரைத் தன்று;"*
*"ஒள்வாண் மறவர் உருத்தெழுந்து உம்பர் நாட்*
*கள்வார் நறுங்கோதை காரணமாக் – கொள்வான்*
*மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடுஇக்*
*கருங்கண்ணி வெண்கட்டிற் கால்"*[36]

என்னும் பாடலில் இதனைக் காணலாம். அண்டர் மகன் குறுவழுதியார் பாடிய புறம் 346–ஆம் பாடல் 'மகட்பாற் காஞ்சி' என்ற துறையில் அமைந்துள்ளது. மகட்கொடை மறுத்தபோது போர் நிகழும். அதனால் அப்பெண்ணின் தமையன், தந்தை முதலியவர்களும், சுற்றத்தாரும் நண்பர்களும் அழிய நேரிடும், அவ்வழிவிற்கு இவள் அழகே காரணமாயிற்று என்பதை இவர் பாடல் கூறுகின்றது.

"நீ உண்பதற்குரிய பாலின் அளவை நீ அறிந்தாயல்லை; ஆதலின் இன்னும் சிறிது பால் உள்ளது, அதனையும் உண்பாயாக என வற்புறுத்தி ஊட்டும் அன்புடையவள் தாய். நிறையக் கற்றிருந்தும், 'யான்கற்ற கல்வி அத்துணைப் பெரிதன்று' என்று கூறும் அடக்கமுடையவன் உன் தமையன். அவன் வேலேந்திப் போரிடுவதில் வல்லவன். போர் நிகழ்ந்தால் இவர்கள் அனைவரும் அழிவர். பகைவரோடு போரிட்டு அழிவார் அழியவும், அழியாது உயிருடன் இருப்பவர், தம்மை வரவேற்றுப் பேணுநர் எவரையும் காணாமல், அழியவல்ல பெரிய கேட்டை விளைவிப்பது இவள் அழகுநலன்!" என்பது இவர் பாட்டின் பொருள். அப்பாடல்:

*"பிறங்கிலை; இனியுள பால்என மடுத்தலின்*
*ஈன்ற தாயோ வேண்டாள் அல்லள்;*
*'கல்விஎன்' என்னும் வல்லாண் சிறாஅன்*
*ஒல்வேள் அல்லன்; அதுவா யாகுதல்*
*அழிந்தோர் அழிய ஒழிந்தோர் ஒக்கல்*
*பேணுநர்ப் பெறாஅது விளியும்*
*புன்றலைப் பெரும்பாழ் செயுமிவள் நலனே"*[37]

என்பதாகும்.

---

[36] புறப்பொருள் வெண்பா மாலை, 94.
[37] புறம்; 346.

## 9. கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

பாண்டிய மன்னர்களில் குறிப்பிடத்தக்க பெருமையும், தமிழ் வளர்த்த அருமையும் உடையவன் உக்கிரப்பெருவழுதி.

முதல், இடை, கடை என்ற தமிழ்ச்சங்கங்கள் மூன்றனுள் கடைச்சங்கம் புரந்த பெருமை இவனுக்குரியது. எனவே, இவன் கடைச்சங்க காலத்து இறுதியில் வாழ்ந்தவனாவான்.

கடைச்சங்கப் புலவர் பாக்களில் பதின்மூன்றடிச் சிறுமையும், முப்பத்தோரடிப் பெருமையும் உடைய நானூறு பாக்களைத் தேர்ந்தெடுத்து அகநானூறு என்ற பெயரால் தொகுப்பித்தவன் இவனே. இந்த தொகுப்புப் பணியில் இவனுக்குத் துணை நின்றவர் மதுரை உப்பூரிகுடி கிழார் மகன் உருத்திர சன்மன் ஆவார்.

திருக்குறள் அரங்கேறியதும் இவன் அவைக் களத்திலேயே என்பர்.[38]

தமிழ்நூல் தொகுப்பித்த பணியோடு, தானும் ஒரு புலவனாகத் திகழ்ந்து தமிழ்ப்பாடல்களைப் பாடியவன் இவன்.

நற்றிணை 98–ஆம் பாடலும், அகம் 26–ஆம் பாடலும் இவன் பாடியவை.

'கானப் பேரெயில்' என்ற வலிமை மிக்க அரணை அழித்து, அதன் தலைவனான வேங்கை மார்பனை அடிமைப்படுத்தியதால் இவன் 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' எனப் பாராட்டப் பெற்றான். இதனை,

*"அருங்குறும்பு உடுத்த கானப் பேரெயில்*
*கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய*
*இரும்புஉண் நீரினும் மீட்டற்கு அரிதென*
*வேங்கை மார்பன் இரங்க, வைகலும்*
*ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்*
*பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே!"* *– புறம் – 21: 6–11*

என்று ஐயூர் மூலங்கிழார் பாடிய புறப்பாடல் இவனது வீரத்திற்குச் சான்றாக விளங்குகின்றது.

வீரப்பெருமகனாயினும் இவன் போர் பற்றிய புறப்பாடல் எதுவும் பாடவில்லை. நுண்மையான கருத்தமைந்த அகப்பாடலே பாடியுள்ளான்.

இவன் பாடிய அகநானூற்றுப் பாடல் தமிழக மகளிரின்பொறுமைப் பண்பைப் புலப்படுத்தும் சான்றாக விளங்குகின்றது.

அப்பாடல் ஒரு தலைவி கூற்றாக அமைந்தது. கணவன் செய்யும் எத்துணை தவறுகளையும் மன்னிக்கும் பெருமித மாண்பு உடையவர்கள் தமிழக மகளிர்.

---

[38] புலவர் கா. கோவிந்தன்; காவல பாவலர்கள், ப.102.

வள்ளுவர் காட்டும் தமிழ் மகள் ஒருத்தி மைதீட்டுங் காலத்து கோல் காணாத கண்ணைப் போன்று என் கணவர் பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த காலத்தும் அவர் செய்த குற்றத்தைக் காண்கிலேன் என்று கூறுகிறாள்.

*"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்*
*பழிகாணேன் கண்ட விடத்து"* — ***குறள் 1285.***

என்பது அவளது பெருமிதக் கூற்று.

இதனை அடியொற்றி உக்கிரப் பெருவழுதியாரின் பாடல் அமைகிறது.

தலைவன் ஒருவன் பரத்தை ஒழுக்கத்தை மேற்கொண்டு, அவள் வீட்டில் தங்கியிருந்து வீடு திரும்புகிறான். மற்றப் பெண்களாயிருப்பின் அவனை வெறுத்துத் தூற்றிக் கலகம் விளைத்திருப்பர். உக்கிரப் பெருவழுதியாரின் அகநானூற்றுத் தலைவி, தோழியை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறாள்:

"தோழி! நன்றாக உழப்பெற்று உலர்ந்து புழுதியான ஒரு நிலத்தில் பெருமழை பெய்த காலத்து அப்புழுதி கரைந்து குழைந்து போவதைப் போன்று என் உள்ளமும் தலைவனைக் கண்டவுடனே நெகிழ்ந்து அவனோடு கலந்துவிட்டது!

எனது புறத்தைத் தழுவி அணைத்து அன்பு காட்டும் அத்தலைவனை நான் புலத்தல் இயலுமோ?" என்று கூறுகிறாள்.

*"வளங் கேழ் ஊரனைப்*
*புலத்தல் கூடுமோ தோழி!...*
*'நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர்; இஃதோ*
*செல்வற்கு ஒத்தனம் யாம்' என மெல்லஎன்*
*மகன்வயின் பெயர்தந்தேனே, அதுகண்டு*
*'யாமும் காதலம் அவற்கு' எனச் சாஅய்*
*சிறுபுறம் கவையினனாக, உறு பெயல்*
*தண்துளிக்கு ஏற்ற பலஉழு செஞ்செய்*
*மண்போல் நெகிழ்ந்து அவற்கலுழ்ந்தே*
*நெஞ்சு அறைபோகிய அறிவி னேற்கே'*[39]

என்பது அவரது நயம்மிக்க பாடல்.

## உள்ளுறை

இப்பாடலில் தலைவியின் கூற்றில் உள்ளுறை அமைந்து நின்றது.

'பருவம் காரணமாகத் தாமே செடியினின்று கழன்று வீழ்கின்ற நீர் முள்ளியின் மலர்களை விளையாடல்புரியும் மகளிர் தமது விழாவிற்கு அழகு ஊட்டுவதற்காகப் பொறுக்கிச் சேர்ப்பர்' என்ற கருத்து, 'என் பருவம் காரணமாக என்பால் பற்று

---

[39] அகம்; 26.

தளர்ந்துள்ள தலைவனை அழகியரான பரத்தை மகளிர் கைக்கொண்டனர்' என உள்ளுறை தோன்ற நின்றது.

## கற்பனைத் திறன்

உக்கிரப் பெருவழுதியின் நற்றிணைப் பாடல் கற்பனை வளம் பெற்றுள்ளது.

களவொழுக்கம் மேற்கொண்டு ஒழுகும் தலைமகன் பகற்குறி, இரவுக்குறி இரண்டிலும் வந்து சென்றான். இரவுக்குறிக் கண்வந்து அவள் மனையுள் மெல்ல மறைந்து புகும்போது நிலவு வெளிப்படல், காவலர் கடுகுதல் போன்ற தடைகள் ஏற்பட்டன. இத்தடைகளுக்கஞ்சி, தலைவியின் இல்லத்துப் புகாது, மெல்லப் பின்வாங்கித் தன்னூர் சென்றான்.

இதனை உள்ளுறை வகையால் கற்பனை நயம் பொருந்தக் கூறுகின்றது பின்வரும் பாடல்:

*"சிறுகண் பன்றி*
*ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி*
*நூழை நுழையும்பொழுதில் தாழாது*
*பாங்கர்ப் பக்கத்துப் பல்லிபட் டெ௭*
*மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து தன்*
*கல் அளைப்பள்ளி வதியும் நாடன்"*[40]

பன்றிகள் குறிஞ்சி நிலத்தில் மேயும்போது, அவை ஒன்றோடொன்று தாக்கிப் போரிடுவதையும், வலிய கடாப் பன்றிக்கு அஞ்சி மற்றப் பன்றிகள் பின்வாங்குவதையும் புலவர் கண்டிருக்கிறார்.

அதனைத் தலைவன் களவொழுக்கச் செயலில் அமைத்து, பன்றிகள் மேலேற்றிக் கூறுகின்றார். பன்றிகள் தினைப்புனம் காப்போர் தினைக் கதிர்களை அழிக்கவரும் விலங்குகளைப் பிடிப்பதற்கென அமைத்திருக்கும் பொறிகளை நெருங்கும் போது, பல்லிகள் சொல்லும் ஒலிக்குறிப்பை அறிவது போலவும், அதன் மூலம் தனக்குத் தீங்கு வரும் என்பதை உணர்ந்து, மெல்ல மெல்லப் பின்வாங்கித் தன் அளைபுகும் எனவும் கூறிய கற்பனை சிறப்பாக அமைந்து நுண்மையான கருத்தைப் புலப்படுத்துகின்றது.

## உள்ளுறை

மற்றும் இக்கருத்தில், 'பன்றி நூழையுட் புகும்போது பல்லியின் ஒலிகேட்டுத் தீங்கினை உணர்ந்து, பின்வாங்கும் என்றது, காவல்மிக்க தலைவியின் மாளிகைக்குள்ளே நுழைய முயலும் தலைவன் நிலவு வெளிப்படல் முதலியவற்றால்

---

[40] நற்; 98.

தனக்குத் தீங்கு நேரலாம், இது சமயமன்று என உணர்ந்து திரும்பினான் என உள்ளுறை தோன்ற நின்றது.

## 10. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

பாண்டிய மன்னருள் இளமையும் பெரும் புலமையும் பெற்றவன் இவன். சிறு வயதுடையவன் எனினும் சிங்கக் குருளை போன்ற வீரமும் தீரமும் உடையவன் இவன் எனச் சங்கப் பாடல்கள் சாற்றுகின்றன.

இவனைப் பாராட்டிப் பாடிய சங்கப் புலவர்கள் பலர். பத்துப் பாட்டினுள் நெடுநல் வாடையும், மதுரைக் காஞ்சியும் இவன் மீது பாடப் பெற்றவை.

இவ்வாறு இவன் பாடல் பெறவும், புலவர்களால் பாராட்டப் பெறவும் காரணமாக இருந்தது, தலையாலங்கானம் என்னும் இடத்தில் ஏழுமன்னர்களை எதிர்த்து இவன் ஆற்றலுடன் போரிட்டுப் பெற்ற வெற்றியாகும்.

இவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்குங்காலத்து மிகவும் இளைஞனாக இருந்தான். பாண்டிய நாடு பல துறைகளிலும் முன்னேற்றம் பெற்றிருந்தது. செல்வ வளம் கொழித்திருந்தது. கொற்கைத் துறையில் விளைந்த முத்தும், பொதிகை மலை தந்த மலைபடு பொருள்களும் பகைவர் கண்களைக் கவர்ந்தன.

இவன் வயதில் இளையனாயிருக்கின்றான் என்று கருதி ஏழு மன்னர்கள் பாண்டிய நாட்டைக் கைப்பற்ற எண்ணிப் படை எடுத்து வந்தனர். சிறுவனாயினும் வீரம் மிக்கவனாகிய நெடுஞ்செழியன் கடுஞ்சினமுற்று அவர்களைத் தலையாலங்கானம் என்னுமிடத்தில் தாக்கிப் பெரும் போர்மலைந்தான். அப்போது அவன் கூறிய வஞ்சினப் பாடல் அவனது புலமைத் திறத்தை எடுத்துக் காட்டுகிறது.

"பாண்டியனோ இளம் வயதுடையவன், யாமோ படையமை மறவரும் களிறும் தேரும் உடையோம்; என்று பொருளற்ற புல்லிய சொற்களைக் கூறி, எனது மிகுந்த வலிமையை அறியாது என்னோடு பொர வந்த வேந்தரை அருஞ்சமத்தில் ஆரமர் அலறத் தாக்கிப் புறமுதுகு காண அடிப்பேன். அவர்கள் முரசமொடு தாக்கிக் கைப்பற்றுவேன். அவ்வாறு தாக்கி வெற்றி கொள்ளேனாயின்,

என் ஆட்சியில் வாழும் குடிமக்கள் தாங்கள் சென்று தங்கிப் பிழைப்பதற்கான நிழலை அறியாது கலங்கி நின்று, 'கொடியன் எம்இறை' என்று குடிபழி தூற்றும் கொடுங்கோலேன் ஆகுக!

ஓங்கிய சிறப்பையும் உயர்ந்த கல்வி கேள்விகளையும்உடைய மாங்குடி மருதன் முதலாய புலவர்கள் என் நாட்டையும் என்னையும்பாடாமல் நீங்குவாராக! என்னால் பாதுகாக்கப்பட வேண்டிய பாணர், புலவர் முதலானோர் துன்பம் அடைய, இரப்போர்க்கு ஒன்று ஈயமுடியாத கொடிய வறுமையை யான் அடைவேனாகுக!" என்று அவன் கூறிய வஞ்சின உரைகள் ஒரு பாடலாக வெளிப்பட்டன. அப்பாடல்,

*"நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்;*
*இளையன் இவன்என உளையக் கூறிப்*
*படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல்சினம் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்ககப் படேஎனாயின் பொருந்திய*
*என்னிழல் வாழ்நர் செல்நிழல் காணாது*
*கொடியன் எம்இறை எனக்கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவ னாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகஎன் நிலவரை;*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே"*[41]

என்பதாகும்.

வஞ்சினம் கூறும் இப்பாடலால் இவன் பகைவர் கூறும் பழிச்சொல் பொறாத தன்மானம் உடையவன் என்பதும், குடிபழி தூற்றும் கொடுங்கோலைப் பொறாத அறம் தங்கிய செங்கோல் உடையவன் என்பதும், மாங்குடி மருதனாரை உள்ளிட்ட புலவர்கள் பாடும் பாடலை விரும்பும் தமிழ் உள்ளம் உடையவன் என்பதும், இரப்போர்க்கு இல்லை என்னாது வழங்கும் ஈகைப் பண்பு உடையவன் என்பதும் பெறப்படுகின்றன.

## முடிவுரை

- சங்க இலக்கியங்களில் இடம் பெற்ற 135 பாடல்களைஅரசப் புலவர்கள் 31 பேர் பாடியுள்ளனர்.
- மற்ற சங்கப் புலவர்களது பாடல்களைப் போன்றே இவர்கள் பாடல்களும் சொற்சுவை, பொருட்சுவை மலிந்து கவிநயம் மிக்கு விளங்குகின்றன.

---

[41] புறம்; 72.

- இவர்களில் மிகுதியான பாடல்களைப் பாடியவர் சேரமான் பாலை பாடிய இளங்கடுங்கோ. கலித்தொகையில் மட்டும் பாலைக்கலி 35 பாடல்களை இவர் நயமுறப் பாடியுள்ளார்.
- அகம் – புறம் என்ற இருதுறையிலும் இவர்கள் பாடியுள்ளனர்.
- சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பெருமன்னனாயினும் சாதாரண சிறுகுடி கிழான் பண்ணனை உயிர் நண்பனாகக் கொண்டு 'யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய' என வாழ்த்தி அவனைப் பாடியுள்ளான்.
- கோப்பெருஞ் சோழன் – புலவர் பிசிராந்தையார் நட்பு புதுமையானது. புணர்வு இன்றியும் பழகுதல் இல்லாமலும் இருவரும் உயிர் நட்புப் பூண்டிருந்த செய்தியை இலக்கியங்கள் கூறுகின்றன.
- சோழன் நலங்கிள்ளி பாடிய வஞ்சினப் பாடல் அவனது வீரத்தையும் வரம்பு மாறாத நல்லொழுக்கத்தையும் எடுத்துரைக்கின்றது.
- தமிழ்நாட்டுமன்னரேயன்றி அயல்நாட்டு மன்னரும் பாடியுள்ளனர். ஆரிய அரசன் பிரமதத்தன் பாடிய பாடல் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளது.
- கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி வேங்கை மார்பனை வென்று கானப் பேரெயிலைக் கைக்கொண்ட வெற்றி மிகச் சிறப்பாகப் பாராட்டப் பெற்றுள்ளது.
- தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வயதில் இளையனாயினும் தன் மீது படை எடுத்து வந்த ஏழு மன்னர்களையும் வென்று புறங்கண்ட செய்தி பல புலவர்களால் பாராட்டப் பெற்றுள்ளது. இவன் கூறிய வஞ்சினப் பாடல் புறநானூற்றில் அணிபெறத் திகழ்கின்றது.

# இயல் – 3

# அரசப்புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்

## முன்னுரை

சமுதாயம் என்ற சொல் கூடிவாழும் மக்கள் இனத்தைக் குறிக்கத் தோன்றியது.

சமம் + தாயம் = சமதாயம் = சமுதாயம்.

நாட்டில் உள்ள உரிமைகளை மக்கள் அனைவரும் சமமாகப் பெற்று ஒற்றுமையுடன் கூடி வாழ்வதே சமுதாயம் என்பது இதனால் பெறப்பட்டது. 'தாயம்' என்ற சொல் உரிமை என்று பொருள்படும்.

*"உருகெழு தாயம் ஊழின் எய்தி"*[1]

என்ற பட்டினப்பாலை அடி நோக்குக.

மக்கள் சமுதாயத்தில் நலம் பல பெற்று நல்வாழ்வு வாழ வேண்டுமானால் சமுதாய நடைமுறைகள் ஒழுக்கமாக அமைய வேண்டும். அவ்வாறு அமைவதற்கு ஆன்றோர் கூறிய அறவுரைகள் அன்று முதல் இன்று வரை பற்றுக்கோடாக நின்று உதவி வருகின்றன.

சங்க காலத்தில் தங்கள் பாடல்கள் மூலம் அரிய கருத்துக்களை வழங்கிய அரசப் புலவர்களின் சமுதாயம் பற்றிய உரைகளை இவ்வியல் ஆராய்கின்றது.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க காலச் சமுதாயம் வேறு; இன்றுள்ள சமுதாயம் வேறு.

*"மக்களின் கூட்டம் சமுதாயம் அன்று;*
*பண்பட்ட மக்களின் கூட்டமே சமுதாயம்"*[2]

என்பர் ஆய்வறிஞர் அ.மு. பரமசிவானந்தம்.

எனவே சட்டத்திற்குக் கட்டுப்பட்ட ஒழுக்கமுள்ள மக்கள் கூட்டமே சமுதாயம் என்பது பெறப்படுகிறது.

## சமுதாயத்தில் மக்கள் கடமைகள்

ஒரு சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட கடமைகள் உள்ளன.

குழந்தையைப் பெற்றெடுத்தால் மட்டும் போதாது. அதைப் பேணி வளர்ப்பது தாயின் கடமை ஆகிறது. பிள்ளைகளை வளர்த்து விடுவது மட்டும் போதாது;

---

[1] பட்டினப் பாலை, அடி. 227.
[2] அ.மு. பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும்.

அவர்களை நல்லொழுக்கம் உடையவர்களாக, சமுதாயத்திற்குப் பயன்படும் சான்றோர்களாக வளர்ப்பது தந்தையின் கடமை ஆகிறது. இதனை,

*"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே"*[3]

என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன.

மகன் கடமையும் எளிதானதல்ல; தந்தைக்கு அவன் ஆற்ற வேண்டிய கடமை பெரிது. "இவன் தந்தை இவனைப் பெறுவதற்கு என்ன தவத்தைச் செய்தானோ" என்று ஊரார் பாராட்டும்படி நல்லொழுக்கம், நற்பண்பு உடையவனாக விளங்குதல் மகனது கடமை என வரையறுக்கின்றார் வள்ளுவர்.

*"மகன்தந்தைக்கு ஆற்றும் உதவிஇவன் தந்தை*
*என்னோற்றான் கொல்எனும் சொல்"*[4]

என்ற குறளில் இதனைக் காணலாம்.

'என்னோற்றான் கொல்' – என்னும் சொல்லை உண்டாக்குவது எளிதான காரியமன்று. கல்வியறிவு பெற்றவனாகவும், கற்றபடி நடப்பவனாகவும், ஒழுக்கம் உடையவனாகவும், நற்பண்புகள் பெற்றவனாகவும், தன்னலம் மட்டும் கருதாமல் பிறர் நலமும் நாடி உதவுபவனாகவும் வாழ்ந்தால்தான் 'என்னோற்றான் கொல்' என்னும் பாராட்டுரையைப் பெறமுடியும்.

## மன்னர்களின் சமுதாயக் கடமை

மக்கள் கடமையை விட மன்னர்களின் சமுதாயக் கடமைமிகப்பெரியது. மனிதன் கடமை ஒரு குடும்பத்தை மட்டும் பற்றியது. ஒரு மன்னனின் கடமையோ பல குடும்பங்கள், பல ஊர்கள், அடங்கிய பரந்த நாட்டின் நல்வாழ்வைப் பற்றியது.

ஒரு நாட்டை ஆளும் அரசன், தன்னாலும், தன் அரசாங்க அலுவலர்களாலும், பகைவர்களாலும், கள்வர்களாலும், கொடிய விலங்குகளாலும் நேரிடும் துன்பங்களிலிருந்து மக்களைக் காக்க வேண்டும் என்பதை,

*"மாநிலம்கா வலனாவான் மன்னுயிர் காக்குங்காலை*
*தானதனுக் கிடையூறு தன்னால், தன்பரிசனத்தால்*
*ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்*
*ஆனபயம் ஐந்தும் தீர்த்து அறங்காப்பான் அல்லனோ ?"*[5]

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

---

[3] புறநானூறு, 312; 1–2.
[4] திருக்குறள் 70.
[5] பெரிய புராணம், திருநகரச் சிறப்பு, 36.

## அரசப் புலவர் கூறும் மன்னன் கடமை

நாடாளும் அரசப் புலவர் கூறும் மன்னர்களின் அரிய கடமைகளை சங்கப் பாடல்கள் விரித்துரைக்கின்றன.

## தொண்டைமான் இளந்திரையன்

சங்ககால அரசப்புலவர்களில் புகழ்பெற்றவன் தொண்டைமான் இளந்திரையன். காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு அதைச் சூழ்ந்திருந்த நாடு 'அருவா நாடு' எனப் பெயர் பெற்றிருந்தது. அந்நாட்டில் வாழ்ந்த மக்கள் 'அருவாளர்' என வழங்கப் பெற்றனர். அருவாநாடு கரிகால் சோழன் காலத்திற்குப் பின்னர் 'தொண்டையர்' என்ற வமிசத்தாரது ஆளுகைக்கு உட்பட்டது. அது முதல் அந்தநாடு 'தொண்டை நாடு' என வழங்கலாயிற்று. அந்நாட்டை இளந்திரையன் என்ற மன்னன் 'பவத்திரி' என்ற நகரை உரிமையாகக் கொண்டு, வேங்கட மலையைச் சூழ இருந்த அத்தொண்டை நாட்டை ஆண்டுவந்தான்.

பத்துப்பாட்டில் 'பெரும்பாணாற்றுப்படை'யைக் கொண்டவன் இவன். இவனை,

*"இருநிலங் கடந்த திருமறுமார்பின்*
*முன்னீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்*
*திரைதரு மரபின் உரவோ னும்பல்"*[6]

என பெரும்பாணாற்றுப்படை சுட்டுகின்றது.

இப்பாடல் குறிப்பால் இவன் முன்னோர் திரைகடல் வழியாகப் போந்து, தொண்டை நாட்டிற்கு அரசர்களாகித் 'திரையர்' என அழைக்கப் பெற்றனர் எனத் தெரிகிறது.

'வென்வேற்கிள்ளி' என்ற சோழ மன்னனுக்கும் நாகநாட்டு மன்னன் மகள் 'பீலிவளை' என்பவளுக்கும் பிறந்து, கடலில் கலம் வழியாகத் தமிழகம் நோக்கி வருங்கால் கலம் உடைந்தழியக் குழந்தையாக இருந்த இவன் தொண்டைக் கொடியால் படகு அமைத்து, அதில் வைத்து விடப்பட்டான் என்றும், திரைவழியே மிதந்து கரையை அடைந்தான் என்றும், அக்காரணம் பற்றித் தொண்டைமான் இளந்திரையன் எனப் பெயர் பெற்றான் என்றும் வரலாறு வழங்குகின்றது.

புலவர் போற்றும் புரவலனாக விளங்கியதோடன்றிப் புலவனாகவும் இவன் திகழ்ந்தான்.

---
[6] பெரும்பாணாற்றுப்படை, 29–31.

இவன் பாடிய பாடல் புறநானூற்றில் 185–ஆம் பாடலாக அமைந்துள்ளது. பொருண்மொழிக் காஞ்சித்துறை பற்றியது. அப்பாடல் அரசியலை ஒரு வண்டியாக உருவகப்படுத்துகின்றது.

“ஒரு பார வண்டியின் கேடு அல்லது கேடின்மைக்கு அதன் திண்மை காரணமன்று. அதன் கேடும், கேடின்மையும் அவ்வண்டியை ஓட்டுபவனைப் பொறுத்துள்ளது. அவன் ஓட்டும் திறமை பெற்றிருப்பானாயின் வண்டி எந்த ஒரு குறைபாடுமின்றி விரைவாகச் சென்று குறிப்பிட்ட இடத்தை அடையும். ஓட்டுபவன் திறமை இல்லாதவனாயின் வண்டி பள்ளத்தில சிக்கிக் குடைகவிழும்.

இதைப் போன்றதுதான் அரசாட்சி. அரசன் திறமை உடையவனாயின் அரசாட்சி சிறப்புற்று விளங்கும். செல்வம் பெருகி மக்கள் நிம்மதியாக வாழ்வர். நாடு நாடாவளத்தது ஆகும்.

அரசன் திறமையற்றவனானால் நாடு பகைவர்களால் கைப்பற்றப்பட்டு அழிவுறும்.அவனால் ஆளப்படும் நாடு எத்துணைப் பலம் பொருந்தியதாயினும் அழிவது திண்ணம். இக்கருத்தைத் தொண்டைமான் இளந்திரையன் பாடிய,

*“கால்பார் கோத்து ஞாலத் தியங்கும்*
*காவற் சாகாடு உகைப்போன் மாணின்,*
*ஊறு இன்றாகி ஆறினிது படுமே;*
*உய்த்தல் தேற்றா னாயின் வைகலும்*
*பகைக் கூழ்அள்ளல் பட்டு*
*மிகப்பல தீநோய் தலைத்தலைத் தருமே”*

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

நற்றிணையில் இவன்பாடிய பாக்கள் மூன்று இடம் பெற்றுள்ளன (94, 99, 106)

தலைவன் வினைவயிற் பிரிந்து செல்கின்றான். அவன்குறித்த காலத்தில் வாராமை கண்டு தலைவி பிரிவாற்றாது வருந்துகின்றாள்.

*‘கார்முந்து முன்எனது தேர்முந்தும்’*

என்று கூறிச்சென்ற தலைவன் வாராவிடினும் கார்காலம் வந்துற்றது. கார் காலத்தில் மலரும் தன்மையை உடைய கொன்றை, காந்தள்பிடவம் முதலான மலர்கள் அணிபெற மலர்ந்தன.

இம்மலர்களைக் கண்டதும் ‘ஆ! கார்காலம் வந்துவிட்டது! தலைவன் வரவில்லை!’ என்று கூறி தலைவி வருந்தினாள். தோழி செய்வதறியாது அவளுக்கு ஆறுதல் கூறுவாளாய்,

“நம் தலைவர் பொய் கூறாதவர். இதனை நீ நன்கறிவாய். அவர் கார்காலத் தொடக்கத்தில் நில்லாமல் வருவார். நீண்டது உண்மையான கார்காலமன்று; இம்மலர்கள் காலமல்லாத காலத்தில் மலர்ந்திருக்கின்றன! மேகம் அறிவற்றது. அதனால் இது கார்காலம் என்று தவறாகக் கருதிக் கடல்நீரைக் குடித்து மழையைப் பெய்கிறது.

இம்மலர்கள் மடமை உடையவை; அதனால் பூக்கின்றன.இது கார்காலமன்று, நீவருந்தற்க! என்று தேற்றும் பாடல் நயம் மிக்கது.

*“வெஞ்சுரம் இறந்தோர்,*
*தாம்வரத் தெளித்த பருவம் காண்வர*
*இதுவோ என்றிசின் மடந்தை; மதியின்று*
*மறந்து கடல்முகந்த கமஞ்சூல் மாமழை*
*பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்*
*கார்என்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில*
*பிடவமும் கொன்றையும் கோடலும்*
*மடவ ஆகலின் மலர்ந்தன பலவே”*[7]

என்பது அவ்வழகிய பாடல்.

## மன்னரும் மக்களும்

தமிழ் மக்கள் தமது சமுதாய வாழ்வில் மன்னர்களை உயிர் என மதித்தனர். சமுதாய வாழ்வில் மக்கள் தொல்லை இன்றி நிம்மதியாக வாழ வேண்டுமானால் நாடாளும் மன்னர்கள் குடிகளின் நலத்தைப் பாதுகாப்பவர்களாக இருக்க வேண்டும். அரசியல் வேறு, சமுதாய இயல் வேறு என்றபோதிலும் இரண்டும் நெருங்கிய பிணைப்பு உடையது. உயிரும் உடலும் போன்றது.

சமுதாய வாழ்க்கை உடல் என்றால், அரசியல் அதன் உயிர் போன்றது.

*“நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்,*
*அதனால், யானுயிர் என்ப தறிகை*
*வேல்மிகு தானை வேந்தர்க்குக் கடனே”*[8]

என்ற சங்கப் பாடல் இதனை வலியுறுத்தும்.

மக்களிடமிருந்து தம்மை வேறுபடுத்திக் கொள்ளாத ஒருமைப்பாட்டைச் சங்க கால மன்னர்கள் பின்பற்றினர். சமூக வாழ்க்கையில் தாமும் பங்கு கொண்டனர். கலந்து பழகினர்.

“சீறூர் மன்னன் இனக்குழு மக்கள் தலைவன் ஆவான். அவன் மறவர் பெருமகன். கோவலர் வீரன். புன்புலத்து வேலோன் ஆக விளங்கினான். மன்னர்கள்

---

[7] நற்.99.
[8] புறம், 186.

மக்களிடமிருந்து தம்மைப் பிரித்துக் கொண்டவர்கள் அல்லர்; இனக்குழுத் தொடர்புடையவர்கள். மக்களைப் போலவே, கலைஞர்களையும் ஒன்றாக உடனமர்த்தி பகிர்ந்துண்டு மகிழ்வதைக் காணலாம். கடை எழு வள்ளல்களில் ஒருவனான நள்ளி, காட்டில் வேட்டையாடிய விலங்கைத் தானே சமைத்து, காட்டில் எதிர்ப்பட்ட கலைஞர்க்குக் கொடுத்து அவர் பசியைப் போக்கியதைச் சங்கப் பாடல் (புறம் 150) காட்டுகிறது. மக்களிடமிருந்து தம்மை வேறுபடுத்திக் கொள்ளாத நிலையை இச்செய்தி தெளிவுபடுத்துகின்றது"[9] என இத்தொடர்பை விளக்குவர் கா. சுப்பிரமணியன்.

அதியமான் நெடுமானஞ்சி அவ்வையாரை அவைக்களப் புலவராக அமர்த்திக் கொண்டதோடு உணவுண்ணுங்காலத்து அவரோடு கலந்து பழகியவன் என்பதை,

*"சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே,*
*பெரியகட் பெறினே,*
*யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே;*
*சிறுசோற்றானும் நனிபல கலத்தன் மன்னே;*
*பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே;*
*என்பொடு தடிபடு வழிஎலாம் எமக்கீயும் மன்னே;*
*அம்பொடு வேல்நுழை வழியெலாம் தான்நிற்கும் மன்னே;*
*நரந்தம் நாறும்தன் கையால்*
*புலவுநாறும் என்தலை தைவரும் மன்னே"*[10]

என்று அவ்வையார் பாடிய பாட்டால் அறியலாம்.

## கொடுங்கோல் அச்சம்

நாடாளும் மன்னர்கள் மக்களை ஆளும்போது கொடுங்கோல் செலுத்துவதற்கு அஞ்சினர்.

*"கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டின்*
*கடும்புலி வாழும்காடு நன்றே"*[11]

என மக்கள் கருதினர். இதனால் மக்களுக்கு இன்னல் தரும் கொடுங்கோல் விளைந்து விடுமோ ? செங்கோல் வளைந்து விடுமோ ? என மன்னர்கள் அஞ்சினர்.

வடநாட்டு மன்னரைக் கங்கைப் பேரியாற்றங்கரையில் பொருது வென்று, அவர்தம் தலையில் கண்ணகி படிவம் சமைப்பதற்கான கருங்கல்லை ஏற்றி வந்த வீரம், கொடுங்கோலுக்கு அஞ்சிய தன்மை அனையவற்றை, பெருவேந்தனான சேரன் செங்குட்டுவன் பாடல்வழி அறிய முடிகின்றது.

*"மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்!*
*பிழைஉயிர் எய்தில் பெரும்பே ரச்சம்!*

---

[9] கா. சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், பக்.50–51.
[10] புறம், 235, 1–9.
[11] வெற்றி வேற்கை, 63.

*குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி*
*மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்*
*துன்பம் அல்லது தொழுத கவில்"*[12]

சங்ககால அரசப் புலவர்கள் பாடிய பாடல்களிலிருந்து அவர்கள் கொடுங்கோலுக்கு எவ்வாறு அஞ்சி வாழ்ந்தனர் என்பது பெறப்படுகிறது.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் தான் கூறிய வஞ்சினப் பாடலொன்றில்,

"நீதி தவறாமல் நிலைபெற்ற அறங்கூறவையத்தில், நடுநிலை தவறிய அறமிலாளன் ஒருவனை நடுவராக நிறுத்திக் கொடுங்கோலுக்கு வழிவகுத்தவனாகுக!" என்று கூறும் மொழிகள் நினையத்தக்கவை.

*"அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறனில் ஒருவனை நாட்டி, முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தே னாகுக"*[13]

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், தான் கூறிய வஞ்சினப் பாடலில், "என்னொரு பொர வந்த ஏழு மன்னர்களையும் போர்க்களத்தில் எதிர்த்து நின்று வென்று ஆரமர் அலறத்தாக்கிப் பொருது முரசமொடு அகப்படுத்துவேன். அவ்வாறு அகப்படுத்தேனாயின், 'எனது குடை நிழலில் வாழும் மக்கள் தாங்கள் பிழைப்பதற்கான வழிவகைகளைக் காணாமல் கலங்கிநின்று, எம் மன்னன் கொடுங்கோலன் ஆயினான்' எனத்தூற்றும் இழிநிலையை அடைவேனாகுக!" என்று கூறுகின்றான். அவன் பாடிய,

*"சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்ககப் படேனாயின் பொருந்திய*
*எந்நிழல் வாழ்நர் சென்னிழற் காணாது*
*'கொடியன் எம்இறை' எனக் கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!"*[14]

என்ற பாடலில் இதனைக் காணலாம்.

நாடாளும் மன்னரின் இருவகை நிலையைச் சோழன் நலங்கிள்ளியின் பாடல் வகுத்துரைக்கின்றது. அரியணை ஏறுதல் எளிது. அது அரச உரிமை. தந்தை இறந்ததும் இளவரசனாகிய மைந்தன்அரியணை ஏறிவிடுகிறான். ஆனால் ஏற்றுக்கொண்ட அரச பாரத்தை மிகப் பொறுப்புடன் அவன் பாதுகாக்க வேண்டும்.

"தம் குடியின் முன்னோர் இறந்தாராக வாரிசு முறைப்படி வந்த அரச உரிமையை ஒருவன் பெறுவானாயின், இத்தகைய பேரரசைப் பெற்றுவிட்டோம் என்ற செருக்கினால்

---

[12] சிலம்பு, காட்சிக்காதை, 100–104.
[13] புறம், 71 : 7–9.
[14] புறம், 72 : 7–12.

ஆணவம் கொண்டு, தன் குடிகள் பால் இறைவேண்டி இரந்து நிற்பானாயின், அத்தன்மை உடையானுக்கு அவ்வரசபாரம் துன்பத்தைத் தரும்.

அவ்வரசுரிமையை வீரமும் தீரமும், குடிமக்கள் நலனைப் பாதுகாக்கும் நல்லுள்ளமும் கொண்ட விழுமியோன் ஒருவன் பெறுவானாயின், அது அவனுக்குக் கோடையில் உலர்ந்து வாடிக், காய்ந்து நிற்கும் நெட்டித் தக்கையைப் போன்று மிகமிக எளிதாகி நிற்கும். இக்கருத்து பின்வரும் நலங்கிள்ளி பாடலில் கூறப்படுகிறது.

*"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்*
*பால்தர வந்த பழவிறல் தாயம்*
*எய்தின மாயின் எய்தினம் சிறப்புஎனக்*
*குடிபுரவு இரக்கும் கூரில் ஆண்மைச்*
*சிறியோன் பெறின் அதுசிறந்தன்று மன்னே;*
*மண்டமர்ப் பரிக்கும் மதனுடை நோன்தாள்*
*விழுமியோன் பெறுகுவ னாயின், சூழ்நீர்*
*அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை*
*என்றூழ் வாடுவறல் போல, நன்றும்*
*நொய்தால் அம்ம தானே"* — *புறம் 75.*

என்ற பாடல் ஆளுவோரின் சிந்தனைக்குரியது.

சங்க காலத்து அரசப் புலவர்கள் பாடிய பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள் நிறைந்துள்ளன. அவற்றை,

1. பண்பாட்டுச் சிந்தனை
2. கல்விச் சிந்தனை
3. வாழ்வியல் மேம்பாட்டுச் சிந்தனை
4. பெண்ணியச் சிந்தனை
5. அறச்சிந்தனை
6. தன்மானச் சிந்தனை
7. வாழ்வியல் சிந்தனை

எனப்பகுத்துணரலாம். அரசப் புலவர்களின் சங்கப் பாடல்களில் இச்சிந்தனைகள் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதை இங்கு காண்போம்.

இன்றுள்ள சமுதாய நிலை வேறு; அன்றிருந்த சமுதாய நிலை வேறு. அறிவியல் முன்னேற்றம் – அயல் நாட்டுத் தாக்கம், கால மாற்றம் இவை காரணமாகச் சமுதாயம் அடியோடு மாறியுள்ளது.

அன்று, பெண்கள் படிதாண்டாப் பத்தினிகளாக – காதல் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்துக் கணவனே கண்கண்ட தெய்வம் என்று அவனைத் தொழுது வந்தனர்.

இன்று ?

பெண்கள் படித்துப் பட்டம் பெற்றுவிட்டனர்; சட்டம் தேர்ச்சிபெற்று நீதிமன்றங்களில் தீர்ப்பு வழங்குகின்றனர்; வானூர்தி ஓட்டுகின்றனர்; வையகம் ஆளுகின்றனர்; எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை காண் என்று கும்மியடிக்கின்றனர். இது கால வளர்ச்சியால் ஏற்பட்டுள்ள இன்றைய சமுதாய மாற்றம்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு இவற்றை எவரும் கனவில் கூடச் சிந்தித்திருக்கமாட்டார்கள். கால நிலை அந்த அளவுக்கு மாறிவிட்டது.

அப்பழைய காலத்துச் சிந்தனைகளை, சங்க காலச் சமுதாயச் சிந்தனைகளைச் அறிய அக்காலப் புலவர்கள் பாடித்தந்துள்ள பாடல்கள் துணை செய்கின்றன. அவற்றுள் அரசப் புலவர்கள் பாடியுள்ள பாடல்களில் அவர்களது சமுதாயச் சிந்தனைகள் எவ்வாறு படர்ந்துள்ளன என்பதை இங்கு ஆராயலாம்.

## 1. பண்பாட்டுச் சிந்தனை

பண்பாடு என்றால் என்ன ?

'பண்பாடு' என்ற சொல் சங்க நூல்களில் காணப்படவில்லை. அதே பொருளைக் குறிக்க 'பண்பு' என்ற சொல்தான் ஆட்சி பெற்றுள்ளது.

'பண்பு' என்பதற்கு, குணம், தகுதி எனப் பொருள் கூறுகிறது தமிழ்மொழி அகராதி.[15]

சங்க நூலான கலித்தொகை,

*"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்"*[16]

எனப் பொருள் விரித்துரைக்கின்றது. அதாவது, 'மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதல்' என்று பொருள் எழுதுகின்றார் நச்சினார்க்கினியர்.

'பண்பு' என்ற சொல்லைத் தமிழில் உயர்ந்தபொருளில் இறைமைத் தன்மைபோல் அமைத்துக் கையாண்டவர் திருவள்ளுவர்.

'பண்பு' உடையவர் உலகில் வாழ்வதால்தான் உலகம் அழியாமல் நிலைபெற்றுள்ளது. அது இன்றேல் உலகம் அழிந்து மண்ணோடு மண்ணாகியிருக்கும் என அவர் வலியுறுத்திக் கூறுகிறார்.

*"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்; அதுவின்றேல்*
*மண்புக்கு மாய்வது மன்"*[17]

என்பது வள்ளுவர் வாக்கு.

---

[15] நா. கதிரைவேல் பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.940.
[16] கலித்தொகை, 133 : 8.
[17] திருக்குறள், 996.

பண்புடையார் இன்றேல் உலகம் அழிந்துவிடும் எனக் கூறினாரேயன்றி அப்பண்பு என்றால் என்ன என்பதை வள்ளுவர் கூறவில்லை.

உலகம் நிலைபெறுவதற்குக் காரணமான சான்றோரிடம் அமைந்துள்ள பண்புகள் யாவை என்பதை அரசப் புலவரான கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பட்டியலிட்டுக் காட்டுகிறார்.

1. தேவர்கள் உண்பதற்கான அமுதம் தெய்வ வசத்தால் கிடைத்தாலும் அதைத் தான்மட்டும் தனித்து உண்ணாமை.
2. எவர்மீதும் வெறுப்புக் கொள்ளாமை.
3. சோம்பல் இல்லாமை.
4. பிறர் அஞ்சுகின்ற பழிபாவங்கட்குத் தாங்களும் அஞ்சுதல்.
5. புகழ் வருவதாயின் அதன் பொருட்டு உயிரையும் தருதல். பழிவருவதாயின் உலகம் முழுவதும் கிடைப்பதாயிருந்தாலும் ஏற்றுக்கொள்ளாமை.
6. மறதி இல்லாமை.
7. தனக்கென வாழாமல் பிறர்க்கென்றே வாழும் தன்மை.

இவ்வேழு தன்மைகளும் 'பண்பு' என்ற தன்மையில் அடங்கும். இவற்றைப் பெற்றுள்ளவர் உலகில் வாழ்வதால்தான் உலகம் நிலைபெற்றுள்ளது என இளம்பெருவழுதி கூறுகின்றார்.

*"உண்டா லம்மஇவ் வுலகம்; இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்*
*தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;*
*துஞ்சலும் இலர்;பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்*
*அன்னமாட்சி அனையராகித்*
*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மையானே"*[18]

என்பது அவர் பாடல்.

*"தனக்கென வாழாப் பிறர்க் குரியாளன்"*

என்ற அகநானூற்று அடியும்,

*"அஞ்சுவது அஞ்சாமை பேதைமை,அஞ்சுவது*
*அஞ்சல் அறிவார் தொழில்"*

என்ற குறட்கருத்தும், இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

---

[18] புறம், 182.

“திராவிட மக்கள் தமக்கே உரிய பல உயரிய பண்புகளையும் சிறப்பினையும் உடையராயிருந்தனர். ஆரிய மக்களின் பண்பாட்டு வளர்ச்சிக்கும் பெருமைக்கும் பலப்பல வழிகளில் துணைபுரிந்தனர். இவ்விரு கூட்டத்தார்க்கும் உரிய பண்புகள் யாவும் ஒருங்கு இயைந்தே ‘இந்து நாகரிகம்’ என்ற உயரிய பண்பு உருவானது”[19] என்பர் டாக்டர் சு. வித்தியானந்தன்.

இக்கருத்து அத்துணைப் பொருத்தமானது என்று கூறமுடியாது.

தமிழர் பண்பாடு வேறு; ஆரியர் பண்பாடு வேறு. இரண்டும் இணைந்து ‘இந்து நாகரிகம்’ என்ற பெயருடன் உயர்ந்த பண்பாக உருவாயிற்று என்று பேராசிரியர் கூறுகிறார்.

*“ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க*
*சான்றோர் பழிக்கும் வினை”*[20]

என்பது தமிழ்ப் பண்பாடு.

**கல்விச் சிந்தனை**

‘கல்வி’ என்பது குறித்து சிந்திக்கத் தொடங்கினால் பல உண்மைகளை நாம் கசப்போடு எதிர்கொள்ள வேண்டி வரும்.

இக்காலத்தில் – அதாவது இருபதாம் நூற்றாண்டில் உள்ள கல்வி நிலை வேறு, சங்க காலத்தில் நிலவிய கல்வி நிலை வேறு.

*“மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்*
*சொல்வதில் ஓர் மகிமை இல்லை”*

என்று அறிவுறுத்தினார் பாரதியார்.

இன்று உள்ளது போன்ற கல்விநிலையங்கள், பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் சங்க காலத்தில் இல்லை. வேற்றுமையின்றிப் பயிலுவதற்கான குருகுலங்கள் அன்று இருந்தன.

இந்த உண்மையை இலக்கியங்களைப் பயில்வோர் அறிவர்.

தொல்காப்பியர் ‘ஓதற்பிரிவு’ என்று ஒரு பிரிவைத் தலைவனுக்கு வகுத்துரைக்கிறார். திருமணமாக வேண்டிய பருவத்தில் குடும்ப வாழ்க்கையை நடத்த வேண்டிய தலைவன் ஓதலுக்காக, கல்வி கற்பதற்காகப் பிரிந்து செல்கின்றான்.

அக்காலத்தில் எங்கோ சில இடங்களில் குருகுலக் கல்விமுறை இருந்தது. ஒரு குறிப்பிட்ட ஆசிரியரிடம் அவர் இல்லத்தில் தங்கி அவருக்குப் பணிவிடைகள்

---

[19] டாக்டர் சு. வித்யானந்தன், தமிழர் சால்பு, (சங்க காலம்), ப.13.
[20] திருக்குறள் 656.

செய்துகொண்டு சிலர் கல்வி கற்று வந்தனர். அவ்வாறு கல்வி கற்ற நிலையில் கல்விப் பெருக்கம் ஏற்படடிருக்க இயலும்.

கண்ணபிரானும் குசேலரும் ஒரு முனிவரிடம் குருகுலக் கல்வி பயின்றவர்கள். துரோணரும், துருபதனும் குருகுலத்தில் சேர்ந்து பயின்றவர்கள். இப்படிக் கல்விப் பயிற்சி பற்றி அறிய முடிகிறது.

ஆங்கிலேயர்கள் இந்திய நாட்டிற்கு வந்து, அச்சுப்பொறி கண்டுபிடிக்கப்பட்ட பிறகுதான், ஜான் மெக்காலே கல்வி முறையை வகுத்தபிறகு தான் ஒழுங்கான கல்வி நம் நாட்டில் ஏற்பட்டது. தொடக்கப் பள்ளிகள் முதல் கல்லூரிக்கல்வி வரை கல்விக் கழகங்கள் நிறுவப்பட்டன என்பது வரலாறு கூறும் உண்மை.

கல்விக் கழகங்கள் இல்லாவிடினும், கல்வி பற்றிய சிந்தனை தமிழரிடையே இருந்தது. கல்வி பற்றிய சிந்தனைப் பெருக்கம் சங்கப் புலவர்களின் பாடல்களில் காணப்படவில்லை; ஆனால் அரசப்புலவனான ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனது பாடல் ஒன்றில் கல்விச் சிந்தனை கார்த்திகைப் பிறை போல் தட்டுப்படுகிறது.

அதுவும் குருகுலக் கல்விதான்; ஓராசிரியர் பள்ளி பற்றியதுதான்!

கல்வி என்பது வாழ்க்கையின் ஒரு கூற்றிற்குத் தேவையான மருந்து. உடல் நோயைத் தீர்ப்பன மருத்துவர் தரும் மருந்துகள். உளநோயாகிய அறியாமைப் பிணியை அகற்றும் மருந்து கல்வி.

*"இம்மை பயக்குமால், ஈயக் குறைவின்றால்*
*தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்;*
*எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்*
*மம்மர் அறுக்கும் மருந்து"*[21]

என்னும் பாடல் இதனைத் தெளிவிக்கும். பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் பாடல் கல்விச் சிந்தனையைத் தூண்டுகிறது. சமுதாயச் சிந்தனைகளில் கல்வி பற்றிய சிந்தனை சிறப்பானது.

"கல்வி கரையற்றது. கற்பவர்களின் நாட்களோ குறைவானவை. எல்லா நூல்களையும் கற்பதற்கு நாட்கள் போதா. எனவே வாழ்க்கைக்கு உறுதியைத் தரும் அறிவு நூல்களை ஆராய்ந்து எடுத்துக் கற்பதே அறிவுடைமை!"

என்பது கல்விச் சிந்தனையின் முதல் படியாக அமைகிறது. ஒரு சமுதாயத்தை எந்த அளவை வைத்துக் கணக்கிடுகின்றார்கள் என்பது சிந்திக்கத் தக்கது. ஒரு நாட்டிலுள்ள வானோங்கிய மலைகளையோ, வற்றாது வளம் கொழித்துப் பாயும் பேராறுகளையோ வைத்து அந்நாட்டின் பெருமை கணக்கிடப்படுவதில்லை. அந்த

---

[21] நாலடியார் 132.

நாட்டில் எந்த அளவு கல்விகற்ற அறிஞர்கள் வாழ்கின்றார்களோ அந்த அளவை வைத்தே அதன் பெருமை கணிக்கப்படுகிறது.

தான் நரைதிரை இல்லாமல், உடற்பிணி வாராமல், இளமைப் பொலிவு குன்றாமல் இருப்பதற்குக் காரணம்,

*"ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர்யான் வாழும் ஊரே"*[22]

என்று பிசிராந்தையார் கூறியது நினையத்தக்கது.

"சமுதாயம் எந்த அளவுக்குக் கல்வியறிவு பெற்றுள்ளது என்பதை அதன் வளர்ச்சியை வைத்துக் கணக்கிடுவர். சமுதாயத்தில் அதிக அளவு மக்கள் கல்வியறிவு பெற்றிருந்தால் தான் அச்சமுதாயம் பன்னோக்கு வளர்ச்சியைப் பெற முடியும்"[23] என்னும் பேராசிரியை வீ.உண்ணாமலை கூற்று இங்கு நினையத்தக்கது.

கல்வி பயிலுதல் பற்றிய வகையில் மாணவன் ஒருவன் ஆசிரியனிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை நெடுஞ்செழியன் அழுத்தமாக வலியுறுத்துகின்றான்.

ஒரு குறிப்பிட்ட ஆசிரியரிடம் குருகுலக் கல்வி பயிலும் போது,

1. ஆசிரியனுக்குப் பொருள் தட்டுப்பாடு நேர்ந்தபோதெல்லாம் பெரும்பொருள் தந்து உதவ வேண்டும்.
2. ஆசிரியனுக்கு வாழ்க்கையில் நேரிடும் துன்பங்களை அகற்றத் துணை நிற்றல் வேண்டும்.
3. ஆசிரியனுக்குத்தவறாமல் வழிபாடுகள் செய்து பணிபுரிதல் வேண்டும்.

இம்மூன்றையுமன்றிக் கல்வியின் வேறு சிறப்புகளையும் அவன் எடுத்துரைக்கின்றான்.

உறவுகள் எல்லாவற்றிலும் உயர்ந்தது தாய்மை. தாய் கடவுளுக்கு ஒப்பானவள். தான் எல்லா வீடுகளிலும் இருப்பது இயலாதென்று கருதித் தனக்குப் பதிலாக இறைவன் தாயைப் படைத்தான் என்பர்.

"தாயில் சிறந்ததொரு கோயிலும் இல்லை"[24] என்பது ஔவையின் அமுதவாக்கு.

தான் பெற்ற எல்லா மக்கள் மீதும் ஒரு தன்மையான அன்பைச் செலுத்துபவள் தாய். அத்தகைய தாயும் கல்வி கற்றுள்ள ஒரு மகனிடம் மற்ற மக்களைவிட ஒருபடி

---

[22] புறம் – 191 : 6–7.
[23] வீ. உண்ணாமலை, புதுக்கவிதைகளில் சமுதாயம் – கல்வி.
[24] கொன்றை வேந்தன், 38.

மேலான அன்பைச் செலுத்துவாள். தன் மகனைப் பிறர் 'சான்றோன்' எனக் கூறக் கேட்டதாய் தனிப்பட்ட மகிழ்ச்சியை அடைவாள் எனத் தமிழ் மறை கூறுகின்றது.

*"ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்"*[25]

இது கல்வியின் தனிச்சிறப்பு.

மற்றொரு பெருஞ்சிறப்பையும், தகுதியையும் கல்விக்குத் தருகின்றான் நெடுஞ்செழியன்.

நாடாளும் மன்னர்கள் பெரும் பொறுப்புடையவர்கள். அவர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் மக்கள் வாழ்வைப் பாதிக்கக் கூடியவை. எனவே, ஆன்றவிந் தடங்கிய சான்றோரின் துணை அரசியல் நெறியில் அவனுக்குத் தேவைப்படுகிறது.

ஒரு குடியில் பிறந்த பல மக்களில் வயதால் முதிர்ந்திருப்பினும் கல்லாமல் இருப்பவனை ஒதுக்கிவிட்டு,வயதால் இளையனாயினும் கல்வி கேள்விகளில் சிறந்த ஒருவனையே அரசனும் விரும்பி அழைத்து அவன் கூறும் ஆலோசனைப்படி அரசியலை நடத்துவான் என்கின்றான்.

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;*
*பிறப்போ ரன்னஉடன் வயிற் றுள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும்மனம் திரியும்;*
*ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்"*[26]

என்ற அவனதுபாடல் இதனை வகுத்துரைக்கின்றது.

*"ஒருகுடியில்*
*கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்*
*இளமை பாராட்டும் உலகு"*[27]

என்னும் விளம்பிநாகனார் பாடலும் இங்கு நினையத்தக்கது.

## சாதி வேற்றுமையை அகற்றும் கல்வி

கல்வியால் உண்டாகும் பயன்கள் அளவற்றவை. வாழ்க்கையில் எல்லாத் துன்பங்களையும் முறியடித்து நிம்மதியாக வாழ்வதற்குத் துணையாவது கல்விதான்.

கல்வி, அறம்,பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் தர உதவும்; வெளி உலகில் புகழைத் தரும்; மிக்க கவலை வந்தவிடத்து வந்தபொழுது அதை நீக்கும் என்று

---

[25] குறள் 69.
[26] புறம், 181 : 1–7.
[27] நான்மணிக்கடிகை, 66.

நீதிநெறி விளக்கப் பாடலொன்று[28] கூறுகிறது. இவை எல்லாவற்றுக்கும் மேலாக 'சாதி வேற்றுமை அகல உதவுவதுகல்வி' எனப் பாண்டியன் நெடுஞ்செழியன் பாடல் கூறுகிறது.

சாதி வேற்றுமை என்பது சமுதாயத்தை அழிக்கும்கொடிய நெருப்பு. மனித இனத்தின் வளத்தைக் கெடுக்கும் நஞ்சு.

அது ஒழிய வேண்டுமென்று தமிழ் இலக்கிய உலகில் திருவள்ளுவருக்கு அடுத்தபடியாக முதல் குரல் எழுப்பியவர் வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள்.

சாதி வேற்றுமை ஒழிய வேண்டுமென்று வள்ளுவர் வலியுறுத்திக் கூறவில்லை. 'மக்களாகப் பிறந்தவர்களிடையே பிறப்பால் எவ்வித வேற்றுமையும் இல்லை'[29] என்று அவர் கூறினாரேயன்றி வெளிப்படையாக சாதி வேற்றுமையைக் கடிந்துரைக்கவில்லை.

சாதி வேற்றுமை பாராட்டி ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு அலைவது பைத்தியக்காரச் செயல் என்று வன்மையாகச் சாடுகிறார் வள்ளலார்.

*"சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே*
*சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச் சண்டையிலே*
*ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்!*
*அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே!'*[30]

என்பது அவர் அறிவுரை.

தனக்குப் பாலைத்தர அஞ்சிய இடைக்குலச் சிறுவனுக்குப் புத்தர் பெருமான் கூறிய அறிவுரைகள் இங்கு குறிப்பிடத்தக்கவை:

*"ஓடும் உதிரத்தில் — வடிந்து*
*ஒழுகும் உதிரத்தில்*
*தேடிப் பார்த்தாலும் — சாதி*
*தெரிவதுண்டோ அப்பா!*
*எவர்உடம் பினிலும் — சிவப்பே*
*இரத்த நிறமப்பா!*
*எவர் விழிநீர்க்கும் — உவர்ப்பே*
*இயற்கைக்குணம்அப்பா!*
*பிறப்பி னால்எவர்க்கும் — உலகில்*
*பெருமை வாராதப்பா!*
*சிறப்பு வேண்டுமெனில் — நல்ல*
*செய்கை வேண்டுமப்பா!*

[28] நீதிநெறி விளக்கம் – 1.
[29] திருக்குறள், 972.
"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"
[30] திருவருட்பா 1473, புனிதகுலம் பெறுமாறு புகல்வர் – 1.

*நன்மை செய்பவரே – உலகம்*
*நாடும் மேற்குலத்தார்!*
*தின்மைசெய்பவரே – அண்டித்*
*தீண்ட வொண்ணாதார்!'*[31]

என்னும் அடிகள்,

*"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்'*[32]

என்ற குறளை வழிமொழிகின்றன.

'சாதி' என்பது சங்க காலந்தொட்டு இடத்தாலும் தொழிலாலும் நிலவி வந்தது.

சங்க நூல்களில் 'மேற்பால்' என்பது மேலான குறிஞ்சி நிலத்தையும் 'கீழ்ப்பால்' என்பது தாழ்வான பகுதியான நெய்தல் நிலத்தையும் குறித்தது.

சமுதாயத்தில் உயர்வு தாழ்வுகளைக் கல்வி கற்பதன் மூலம் போக்கிவிடலாம் என்பது ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் கருத்து.

பிறப்பினால் உயர்வு தாழ்வு என்னும் பேதமை உணர்வைச் சமுதாயத்தில் அகற்றுவதற்குக் கல்வி உதவும். நம்மிடையே காணும் உயர்வு தாழ்வுகளை கல்வி கற்றலின் மூலமே போக்கமுடியும் என்பது நெடுஞ்செழியனின் உறுதிக் கருத்தாகும்.

*"வேற்றுமை தெரிந்த நாற் பாலுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே'*[33]

என்று பாடுகிறான். இச்செய்யுளில் கீழ்ப்பால் என்பது நெய்தல் நிலத்தையும், மேற்பால் என்பது குறிஞ்சி நிலத்தையும் குறிக்கும் எனவும் கருதலாம்.

சங்க காலத்தில் சாதி வேற்றுமையே இல்லை; தொழில் அடிப்படையான பிரிவுகள் தான் இருந்தன. நெய்தல் நிலத்துக் கற்றவனிடம் குறிஞ்சி நிலத்தவன் வழியருமை கருதாது வந்து கற்றல் வேண்டும் என்ற பாண்டியன் கருத்து உவந்தேற்கத்தக்கது.

இடை நிலத்தில் வாழ்வோர் இடையர். குன்றத்து வாழ்வோர் குன்றவர். குன்றவர் எனும் சொல் குறவர் என்றாயிற்று. துணியை மண்ணுதல் / (கழுவுதற்) செய்யும் மண்ணார் வண்ணார் எனப் பெற்றனர். பரந்த கடலாகிய பரவையில் வாழ்வோர் பரதவர், பரவர் எனப் பெற்றார். பறையடித்து அரசச் செய்தி தெரிவிப்போர் பறையர். தச்சுத் தொழில் செய்வோர் தச்சர்.

---

[31] கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, ஆசிய ஜோதி, பக்.42–43.
[32] திருக்குறள் 972.
[33] புறம் 183 : 8–10.

வண்ணார், இடையர், குயவர், குறவர், தச்சர், பறையர், பரதவர், புலையர் போன்ற பலப்பல சாதியினர் தொழிலாலும் இடத்தாலும் பெயர்பெற்று இருந்தனர் என்பதைச் சங்க நூல்களால் அறியலாம்.

ஆரியர் வருகைக்கு முன் 'சாதி' வேற்றுமை இல்லை என்பதை ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். அவர்கள் வருகைக்குப் பின்னர் தமிழகம் ஆரிய மயமாயிற்று.

மத்திய ஆசியாவில் வசித்து வந்த ஆரியர்கள் இந்தியாவில்புகுந்தகாலம் சுமார் கி.மு.1500 என்பர் வரலாற்று ஆசிரியர்கள். [34]

அவர்கள் தமிழகத்தில் புகுந்த காலம் கி.மு. 500 என்பர்.[35, 36]

சங்க காலத்திற்கு முன் தமிழகத்தில் நுழைந்த ஆரியர்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகை வருண பேதங்களை நாட்டினர். அவற்றின் அடிப்படையில் சாதிகள் தழைத்துப்பெருகின.சங்க காலத்திலேயே தமிழகம் ஆரியமயமாகிவிட்டதென்பதை,

"தமிழகத்தில் சங்ககாலக் கடைப்பகுதியில் தமிழகம் ஆரியமயமாகத் தொடங்கிவிட்டது. மறத்தினையே பேசி, அதனையே விரும்பி வந்த தமிழினம் கடவுளர்களோடு பேரம் பேசத் தொடங்கியது. அறத்தைப் போற்றிய தமிழினம் புதிய தர்மத்தைப் பேச ஆரம்பித்தது." "யாயும் ஞாயும் யாராகியரோ, எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்" என்று காதல் வாழ்வு நடத்திய இனம் பார்ப்பான் மறைவழி காட்டத் தீ வலம் வந்தது! . . .

தமிழ் மன்னர்கள் ஆரியர்களின் கைப்பாவை ஆயினர். பண்பாட்டளவிலும், பழக்கவழக்க அளவிலும் வடநாட்டினின்றும் தென்னாடு போந்த ஆரியரால் தமிழகம் நிலை குலைக்கப்பட்டது."[37]

என்பார் கூற்று வலியுறுத்தும்.

கல்வியறிவு உயர்வு தாழ்வுகளை அகற்றும் என்பதுபோல நெடுஞ்செழியன் பாடல்அமைந்துள்ளது.

## சங்க இலக்கியத்தில் வாழ்வியல் மேம்பாட்டு இனக்குழுச் சிந்தனை

சங்க காலத்தில் இனக்குழு வாழ்க்கையே நிலவியதென்பதைச் சங்க இலக்கியப்பாடல்கள் அறிவிக்கின்றன.

---

[34] Chattarji. S.K., The Indian Synthesis and Social and Cultural Later Mixture in India, p.275.
[35] Pillai. Dr.K.K., "Aryan influence in Tamilagam during the Sangam Epoch, Tamil Culture", 1966.
[36] "A social History of the Tamils"
[37] டாக்டர் க.ப. அறவாணன், சைனரின் தமிழிலக்கண நன்கொடை, ப.50.

ஆதிச்சமுதாய அமைப்பாக (social institution) உலகமெங்கும் இனக்குழுக்கள் நிலவியதென்பர்.[38]

தமிழகத்தில் இனக்குழுக்கள் (Tribes) திணைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டிருந்தன. இப்பாகுபாடு மானிடவியல் விளக்கத்திற்குப் பொருந்தி வருவதை அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்."[39]

சங்க காலம் தமிழகத்தின் ஒரு மாறுதல் நிலையைக் குறிப்பதாகும். அது இனக்குழு வாழ்க்கை அழிந்து நிலவுடைமை வாழ்க்கையாக மலரும் காலகட்டடத்தைப் பெற்றிருந்தது எனலாம்.

எனவே சங்க காலத்திலும் சங்க காலத்திற்கு முன்பும் இனக்குழு வாழ்க்கை நிலவி வந்ததென அறியலாம்.

## இனக்குழு சமுதாய வாழ்க்கை

இனக்குழு மக்கள் கூட்டு வாழ்க்கை நடத்தினர்; கிடைத்ததைப் பகுத்துண்டனர். வேட்டையாடினர். வேட்டை, வேளாண்மை இவற்றை அடிப்படையாகக் கொண்டு இனக்குழு வாழ்க்கை நடைபெற்று வந்தது.

இனக்குழுத் தலைவன், 'சீறூர் மன்னன்', சிறுக்குடிக் கிழான் என்று பாராட்டப் பெற்றான். இவன் அரசனல்லன். இனக்குழுத் தலைவன் ஆனவன், போர்க்காலத் தலைவன்.

இத்தலைவன் மக்களிடமிருந்து தன்னைத் தனிமைப் படுத்திக் கொள்ளவில்லை. கலந்தே வாழ்ந்தான். நளிமலை நாடன் நள்ளி வேட்டையாடச் சென்றான். காட்டில் ஒரு கலைஞர் குழு உணவருந்தாமல் பசியோடிருப்பதைக் கண்டான். தான் வேட்டையாடி வீழ்த்திய ஒரு விலங்கைப் பக்குவப்படுத்தித் தானே சமைத்தான். கலைஞர்களுக்கும் உண்ணக் கொடுத்து மகிழ்ந்தான். புறம் 150–ஆம் பாடல் இச்செய்தியைக் கூறுகின்றது.

## கலப்பு மணம்

சங்ககால மக்கள் திருமணம் செய்து கொள்ளும்போது இனபேதம் பார்ப்பதில்லை.

*"யாதும் ஊரே; யாவரும் கேளிர்"*

என்ற கணியன் பூங்குன்றனாரின் கொள்கை எங்கும் நிலவி இருந்தது. சாதி வேற்றுமை முற்றிலும் இல்லை, தொழில் வேற்றுமை, நில வேற்றுமைகள் தான். ஒரு தொழில் செய்வோர் புற தொழில் செய்வோரின் குடும்பத்தில் கொள்வன – கொடுப்பன போன்ற

---

[38] கா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.5.
[39] P.T. Srinivasa Ayangar, History of Tamils to 600 A.D., pp.4-12.

மண உறவு கொண்டிருந்தனர். குறிஞ்சி நில மகளை மருதநிலத் தலைவன் மணந்தான். பரதவர் மட மகள் முல்லை நிலத் தலைவனுக்கு மாலையிட்டாள். இவ்வாறு திருமணங்கள் காதலர்களின் மன இசைவைப் பொறுத்தே நடந்து வந்தன.

தன் மனம் கவர்ந்த பெண் ஒருத்தியைப் பார்த்துத் தலைவன் ஒருவன் கூறுகின்றான்.

"உன்னைப் பெற்ற தாய் யாரோ? என்னை ஈன்ற அன்னை எவரோ? உன்தந்தையும் என் தந்தையும் எவ்வித உறவினரும் அல்லர்; நீயும் நானும் இதற்குமுன் சந்தித்ததே இல்லை; அவ்வாறிருந்தும், செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் அம்மண்ணின் நிறத்தைப் பெற்று, வேறுபாடின்றிக் கலந்ததைப் போல அன்பினால் ஒன்றுபட்ட நம் உள்ளங்கள் கலந்தன. பிறவற்றைப் பற்றி நாம் ஏன் கவலைப்படவேண்டும்? என்கின்றான். இதனை,

*"யாயும் ஞாயும் யாரா கியரோ?*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?*
*யானும் நீயும் எவ்வழி அறிதும்?*
*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே"*[40]

என்ற குறுந்தொகைப் பாடல் தெளிவுறுத்துகின்றது.

இது கொண்டு 'ஒருவனுக்கு ஒருத்தி' என்பது மணவாழ்க்கையாக அமைந்ததென்பதும் தொழில் கலப்பு, நிலத்திணைக் கலப்பு மணங்கள் நடைபெற்றன என்பதும் அறியப்படுகின்றன.

சங்க காலத்தில் மட்டுமன்றிப் பிற்காலத்திலும் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கொள்கையே தமிழ்ச் சமுதாயத்தில் நிலைத்திருந்தது.

கி.பி. 9–ஆம் நூற்றாண்டினரான மாணிக்கவாசகர்[41] தலைவன் – தலைவி இருவர் உயிரும் வெவ்வேறானதல்ல; ஒன்றே எனக் குறிப்பிடுகின்றார்.

*"காகத் திருகண்ணிற்கு ஒன்றே மணிகலந் தாங்கிருவர்*
*ஆகத்துள் ஓருயிர் கண்டனம்"*[42]

என்பது அவர் வாக்கு.

இம்மையில் மட்டுமல்ல; மறுமையிலும் நாம் இருவர்தான் தம்பதிகள். நீர்தான் என் கணவர்; நான்தான் உமது மனைவி என்கின்றாள் தமிழகத் தலைவி ஒருத்தி.

*"அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து*
*மணிக்கேழ அன்ன மாநீர்ச் சேர்ப்ப!*

---

[40] குறுந்தொகை, 40.
[41] மது.ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், ப.152
[42] திருக்கோவையார், 71.

*இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயா கியர்என் கணவனை;*
*யானாகியர் நின் நெஞ்சுநேர் பவளே'*[43]

என்பது அவள் கூற்று.

## பெண் உரிமை

மணமகனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை சங்க காலத்தில் பெண்களுக்கு வழங்கப்பட்டிருந்தது.

குடிப்பெருமையை எண்ணிப் பெற்றோர் ஆராய்ந்து மணமகனைத் தேர்ந்தெடுத்து திருமணத்தை முடிப்பதும், தலைமகள் தானே தனக்குரிய மணமகனைத் தேர்ந்தெடுத்து மணத்தை நிச்சயம் செய்யும் உரிமையும், குறிஞ்சிப் பாட்டில் பேசப்படுகின்றன. தாங்கள் சோலையில் மலர்கொய்து விளையாடிக் கொண்டிருந்த போது, ஆங்கு நடந்த நிகழ்ச்சிகளையும், தலைவன் செய்த உதவிகளையும், அவனை மணமகனாகத் தாங்கள் வரித்ததையும் தோழி, செவிலியிடம் கூறுகின்றாள்.

*"கொடுப்பின் நன்குடைமையும்*
*குடிநிரல் உடைமையும்*
*வண்ணமும் துணையும்*
*பொரீஇ எண்ணாது'*[44]

எனப் பெற்றோர் செய்யும் திருமணம் சுட்டப்பெறுகிறது.

*"மாதரும் மடனும் ஓராங்கு தணப்ப*
*நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி*
*இருவேம் ஆய்ந்த மன்றல்'*[45]

எனத் தானே நிச்சயிக்கும் களவுமணம் பேசப்படுகிறது.

## உடன் போக்கு

சங்ககாலப் பெண்ணினம் பெற்றிருந்த தனி உரிமைகளில் சிறந்ததாகக் கருதப்படுவது உடன்போக்கு.

### உடன்போக்கு என்றால் என்ன ?

உடன்போக்கு என்ற சொற்றொடர் உடன்போதல் என்று பொருள்படும். உடன்போவது யார் ?

பெற்றோர் இசைவு கிடைக்காவிட்டால், அயலார் திருமணம் பேச வந்துள்ள நெருக்கடி நிலைநேர்ந்தால், களவொழுக்கத்தில் ஈடுபட்டிருந்த தலைவனும் தலைவியும் யாரும் அறியாமல் நள்ளிரவில் தோழி உதவியோடு வெளியேறுவர். அவ்வாறு

---

[43] குறுந்தொகை, 49.
[44] குறிஞ்சிப்பாட்டு, அடி 30–31.
[45] குறிஞ்சிப்பாட்டு, அடி 19–21.

வெளியேறிச் செல்லுதலை 'உடன்போக்கு' என அகப்பொருள் இலக்கண நூல்கள் குறிக்கின்றன.

உடன்போக்கு அறத்தின்பாற்பட்டது என்பதைத் தொல்காப்பியர் ஏற்றுக் கொள்ளுகின்றார்.

*"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே*
*புணர்ந்து உடன் போகிய காலையான"*[46]

என்ற அவரது நூற்பா இதனை வலியுறுத்தும்.

இதனால் 'உடன்போக்கு' திருமணமாகவே கருதப்பட்டது என்பதை அறியலாம்.

முதுவர், பணியர், இருளர் ஆகிய மலைவாழ் மக்களிடம் இன்றும் உடன்போக்குத் திருமணம் நிலவுகிறது.

பெருங்கடுங்கோ பாடலில் உடன்போக்கு

அரசப் புலவராகிய பாலைபாடிய பெருங்கடுங்கோ உடன்போக்கு மணத்தை ஒப்புகின்றார் என்பது அவர் பாடலால் புலனாகின்றது.

தோழி கூற்றாக அவர் பாடிய குறுந்தொகைப் பாடல் இதனை எடுத்துரைக்கின்றது.

தோழி கூறுகிறாள்: "என் அன்புக்குரியாய்! ஊரில் நமது அலரொழுக்கம் பற்றி அலர் எழுந்துவிட்டது. சேரியினர் பேசும் பாதி மொழிகள் 'கல்'லென ஒலிக்கின்றன. அறனில்லாத அன்னையும் ஐயுற்று நம்மைச்சுடு சொல்லால் வருத்துகின்றாள். அவள் இங்கேயே இருக்கட்டும். நீ புறப்பட்டுத் தலைவனுடன் உடன்போக்கில் செல்வதே நலம் என்று துணிந்தேன் ?

இவ்வாறு தோழி கூறுவதை,

*"ஊஉர் அலரெழச் சேரி கல்லென*
*ஆனாது அலைக்கும் அறனில் அன்னை*
*தானே இருக்க தன்மனை யானே*
*நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க*
*உணல் ஆய்ந்திசினால் அவரொடு சேய்நாட்டு*
*விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅன்*
*கரும்பு நடு பாத்தி அன்ன*
*பெருங் களிற்று அடிவழி நிலைஇய நீரே"*[47]

என்ற பாடலில் காணலாம்.

அகப்பொருள் துறைகளில் இவ்வுடன்போக்கு காதல் சுவை கனிந்தது; அறிஞர்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. இதனை,

---

[46] தொல் – பொருள் – கற் – சூ.2
[47] பாலை பாடிய பெருங்கடுங்கோ, குறுந்தொகை 262.

"படிகடவா இளமங்கை, பிறந்த வீட்டைத் துறந்து, பெற்றோரை மறந்து, முன்பின் அறியா ஆடவனைக் காதல் கொழுநன் என நம்பிக் கரடுமுரடான வழியில் உடன்போக்குத் துணிந்தபோது அகவிலக்கியம் புதினம்போலும் சாயலையும், விறுவிறுப்பையும் பெறுகின்றது. கற்பவர்க்கும் உணர்ச்சிக் கூர்மையை விளைக்கின்றது."[48] என்பார் கூற்று புலப்படுத்துகின்றது.

### கற்பு

பாம்பிற்குச் சிறப்பளிப்பது நாகரத்தினம்; பருமலைகட்குப் பெருமை தருவது பனிமலைச்சிகரம்; பாவையர்க்குப் பெருமையும் சிறப்பும் புகழும் தருவது கற்பு.

பெண்ணின் பெருமையைப் பேசவந்த வள்ளுவர், பெண்களைவிட உயர்ந்த பொருள் உலகில் எதுவுமே இல்லை என வரையறுத்துப் பேசுகின்றார். ஆனால், அப்பெண் கற்பென்னும் அருங்குணம் உடையவளாக இருக்கவேண்டும் என்றும் வலியுறுத்துகின்றார்.

*"பெண்ணிற் பெருந்தக்க யாவுள ?கற் பென்னும்*
*திண்மை உண்டாகப் பெறின்"*[49]

தொல்காப்பியர் காலத்திலேயே இக்கற்புக் கோட்பாடு வலிமை பெற்றிருந்தது.

*"உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்*
*செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"*[50]

என்பது தொல்காப்பியம். ஆன்றோரும் சான்றோரும் கற்பித்த நன்னெறியில் நிற்பது கற்பு. இஃது இருபாலர்க்கும் பொது.

### கற்பின் மூவகை

கற்பு மூவகைப்படும் என்பது சமுதாய விதி. கணவன் இறந்தவுடன் அதனை ஆற்றாமல் உடனுயிர் துறத்தல் தலைக்கற்பு. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மாண்டான் என்பதை உணர்ந்த அவனது பெருந்தேவி அரியணையிலேயே உயிர் துறக்கின்றாள்.

*"கலக்கம் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்*
*மன்னவன் செல்வுழிச் செல்கயான் எனத்*
*தன்உயிர் கொண்டவன் உயிர்தேடினள் போல்*
*பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்"*[51]

என்று ஓவியப்படுத்துவர் இளங்கோவடிகள். இது தலைக்கற்பின் பாற்படும்.

---

[48] டாக்டர் வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.84.
[49] திருக்குறள், 54.
[50] தொல், பொருள், களவு, சூ.22.
[51] சிலப்பதி, காட்சிக், 83–86.

கணவன் இறந்தமை பொறாது தீக்குழியை மூட்டி அதில் வீழ்ந்து உயிர்துறப்பது இடைக்கற்பு. மணிமேகலைக் காப்பியத்தில் இடம் பெறும் ஆதிரை என்ற கற்பரசி தன் கணவன் சாதுவன் கருங்கடலிடையே பெருங்கலம் உடைந்து கடலில் மூழ்கினான் என்று அங்கிருந்து உயிர் தப்பி வந்த வணிகர் சிலர் சொல்லக் கேட்டுத் தீக்குழியை மூட்டி அதில் பாய்ந்தாள் எனப் புனைந்துரைப்பர் சாத்தனார்.

இதனை,

*"உடைகலப் பட்டாங்கு ஒழிந்தோர் தம்முடன்*
*சாதுவன் தானும் சாவுற்றான் என*
*ஆதிரை நல்லாள் ஆங்கது தான்கேட்டு,*
*ஊரீரேயோ ஒள்ளீழல் ஈமம்*
*தாரீ ரோஎனச் சாற்றினள் கழறிச்*
*சுடலைக்கானில் தொடுகுழிப் படுத்து*
*முடலை விறகின் முளிஎரி பொத்தி*
*மிக்களன் கணவன் வினைப்பயன் உய்ப்ப*
*புக்குழிப் புகுவேன் என்றவள் புகுதலும்'*[52]

என்னும் அடிகளில் காணலாம்.

## பூதப்பாண்டியன் தேவி கூறிய கடைக்கற்பு

'கடைக்கற்பு' என்பது தற்காலத்தில் விதவை மகளிர் மேற்கொண்டொழுகும் அவலநிலை. தலையை மொட்டையடித்தல், வெள்ளுடை உடுத்தல், மஞ்சள், குங்குமம், மலர், அணிகலன்களைத் தவிர்த்தல் போன்றவை இக்காலக் கைம்மை நோன்பாக வழக்கத்தில் உள்ளன.

சங்க காலத்தில் இடைக்கற்புடைய மகளிர் எவ்வாறு கடின வாழ்க்கை வாழநேரிட்டது என்பதை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் தேவியான பெருங்கோப்பெண்டு பாடிய பாடல் ஒன்றால் அறிகின்றோம்.

அவர்கள் எண்ணெய், நெய் போன்றவற்றைக் கையாலும் தீண்டுதல் கூடாது. நீர்ச்சோற்றை உணவாக உட்கொள்ளவேண்டும். வெண்மையான எள் அரைத்த துவையலை உணவின்போது பயன்படுத்த வேண்டும். புளி ஊற்றி வேகவைத்த வேளைக்கீரைதான் அவர்கட்குக் குழம்பு – இவை தவிர ஊட்டமான – சுவையான காய்கறி எவையும் அவர்கள் உண்ணுதல் கூடாது.

பருக்கைக் கற்கள் பரப்பப்பட்ட துணிப்படுக்கையின் மேல் பாய் எதுவும் விரித்துப் போடாமல் தான் படுக்க வேண்டும் – இத்தகைய கொடுமை வாழ்வு வாழும் இடைக்கற்பு வாழ்க்கையை உடைய மகளிரைப் போன்றவளல்ல யான்! எனக்குத் தீக்குழி அமைத்துத்

---

[52] மணிமேகலை, ஆதிரை பிச்சை இட்ட காதை, 20–28.

தாருங்கள். அதில் நான் பாய்ந்து உயிர் துறப்பேன். குளிர்ந்த நீர்த்தடாகமும் கனிந்த நெருப்புக் குழியும் எனக்கு ஒன்றுதான் என்று அவர் கூறுவது அவரது கற்பின் திண்மையைக் காட்டுகிறது.

*"பல்சான் றீரே! பல்சான் றீரே!*
*செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்*
*பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே!*
*அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட*
*காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது*
*அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்*
*வெள்எள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட*
*வேளை வெந்தை வல்சி யாகப்*
*பரல்பெய் பள்ளி பாயின்று வதியும்*
*உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ!*
*பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்*
*நுமக்கு அரிதாகுக தில்ல; எமக்கெம்*
*பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற*
*வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை*
*நள்ளிரும் பொய்கையும் தீயுமோரற்றே'*[53]

என்பது அவர் பாடல்.

*"கலந்தவனைக் கூற்றம் கரப்பக் கழியாது*
*அலந்தினையும்அவ்வளைத்தோளி – உலந்தவன்*
*தாரொடு பொங்கி நிலனைசஇத் தான் மிசையும்*
*காரடகின் மேல் வைத்தாள் கை'*[54]

என்னும் புறப்பொருள் வெண்பாமாலை பாடல் இங்கு நினையத் தக்கது.

இம்மூவகைப் பெண்டிரது கற்பு நிலையையும்,

*"காதலர் இறப்பின் கனைஎரி பொத்தி*
*ஊதுலைக் குருகின் உயிர்த்து அகத்தடங்காது*
*இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்*
*நன்னீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்;*
*நளிஎரி புகாஅ ராயின் அன்பரோடு*
*உடனுறை வாழ்கைக்கு நோற்றுடம் படுவர்*
*பத்தினிப் பெண்டிர்'*[55]

என மணிமேகலை முறைப்படுத்திக் கூறுவது மனங்கொள்ளத்தக்கது.

**மனையற மாண்பு**

அரசப்புலவர் பலர் பாடிய அகப்பாடல்கள் மனையற மாண்பை விரித்துரைக்கின்றன. காதல் ஒருவனைக் கைப்பிடித்து, அவன் காரியம் யாவினும்

---

[53] புறம், 246.
[54] புறப்பொருள் வெண்பாமாலை, 257.
[55] மணிமேகலை, 2 : 42–48.

கைகொடுத்து அவனைத் தெய்வம் போல் கருதிப் பணிவுடன் உபசரிப்பதே மனையற மாண்பு என்று கருதப்பட்டது.

தோழி தலைவனை இயற்பழித்துரைப்பாள், தலைவி அதை மறுத்து இயற்பட மொழிவாள். இவ்விரண்டும் மறுதலைத் துறைகள். சங்கப் புலவர் பாடல்களில் இத்துறைப் பாடல்கள் நிறையக் காணப்படும். இவற்றைக் கொண்டு பண்டைக்கால மகளிரின் மனையற மாண்பை உணரலாம்.

பூக்கள் தோறும் சென்று புதுப்புது தேனை உண்டு மகிழ விரும்புவது ஆடவர்க்கியல்பு என்ற கோட்பாட்டிற்கு இலக்கியமாக வாய்த்தவன் சங்க காலத் தலைவன். தன் இல்லத்தரசி மீது அளவற்ற அன்பு உடையவனாயினும்அவன் பல்பொருள் விரும்பும் பரத்தையரை நாடிச்செல்லும் இயல்புடையவன் என்பதைப் பல பாடல்கள் கூறுகின்றன. அத்தவறினை வழிவழி வந்த மாண்புடை மனையற மாண்புடையவளான தலைமகள் பாராட்டுவதில்லை.

"கணவன் செய்யும் எத்துணைப் பெரிய தவறினையும் மன்னிக்கும் மாண்புடையவள் தமிழ்மகள். வள்ளுவர் வழிவந்த ஒரு தமிழ்மகள்,

*"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்*
*பழிகாணேன் கண்ட விடத்து"* – *குறள் 1285*

எனக் கூறுவது இங்கு நினையத்தக்கது[56].

கானப்பெரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியார் இத்தகைய குலமகள் ஒருத்தியைத் தனது பாடலில் அறிமுகப்படுத்துகின்றார்.

தலைமகன் ஒருவன் பரத்தை ஒழுக்கத்தில் ஈடுபட்டுச் சில நாட்கள் கழித்துத் தன் வீடு திரும்பினான். அவனை வாயில் மறுத்து வசைமொழிகளை வீசித் திரும்பிப் போகுமாறு அனுப்புவதற்குப் பதிலாகப் பின் வருமாறு தோழியிடம் கூறுகிறாள் அவனது மனையற மடந்தை.

"தோழி! பரத்தையர் மையலில் சிக்கி உறவு பூண்டு அவர்களுடன் தங்கிச் சில நாள் கழித்துத் தலைவன் நம் வீடு நோக்கி வந்திருக்கின்றான். அவன் தவறைச் சுட்டிக் காண்பித்து, அன்பிலை கொடியை என்று வன்மொழி பேசி நான் கடிந்துரைத்திருக்க வேண்டும். மாறாக, நன்கு உழப்பெற்று உலர்ந்து புழுதியான ஒரு நிலத்தில் பெருமழை பெய்தால் அப்புழுதி எவ்வாறு கரைந்து குழையுமோ அதைப் போன்று என் உள்ளம் தலைவனைக் கண்டதும் கரைந்து குழைகின்றது! நெகிழ்ந்து அவனோடு அது

---

[56] புலவர் கா.கோவிந்தன், காவல் பாவலர்கள், ப.103.

கலந்துவிட்டது! நான் எப்படி அவனை வெறுத்து தூற்றுவது?" என்று மொழிகின்றாள். இதனை,

> *"வளங்கேழ் ஊரனைப்*
> *புலத்தல் கூடுமோ தோழி!...*
> *சிறுபுறம் கவையினனாக உறுபெயல்*
> *தண்துளிக் கேற்ற பலவுழு செஞ்செய்*
> *மண்போல் நெகிழ்ந்து அவற் கலுழ்ந்தே*
> *நெஞ்சு அறைபோகிய அறிவி னேற்கே'*[57]

என்ற உக்கிரப் பெருவழுதியின் பாடல் எடுத்துரைக்கின்றது.

**மனைவியிடம் பேரன்பு**

கணவன்பால் மனைவி பேரன்பு உடையளாக வாழ்ந்ததைப் போன்றே மனைவியிடம் மாறாத காதலும், குறையாத உழுவலன்பும் உடையராய் வாழ்ந்தனர் ஆண்மக்கள் என்பதை சங்கப் பாடல்கள் அறிவிக்கின்றன.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை ஒரு அரசப்புலவர். அவர் பாடிய அகத்துறைப் பாடல் ஒன்று (அகம்–168), மற்றொன்று புறப்பாடல். அது தலைவன் தன் மனைவியை ஈம நள்ளழல் எரிப்பது கண்டு மனம் வருந்தி பாடியது (புறம்–245). மனைவி மாட்டு இவர் கொண்டிருந்த அளவற்ற காதலை இப்பாடல் புலப்படுத்துகின்றது.

மாக்கோதையின் மனைவியார் இறந்து போனபோது அவரை நினைந்து இப்பாடல் பாடப்பட்டதாகக் கருதவும் இடமுண்டு.

இறந்தவளின் உடலை ஈமத்தீயிலிட்டுக் கொளுத்தினர். எரிகின்றது அவர் உடல்! அதனைக் கண்டு நிற்கும் தலைமகனது உள்ளம் கடந்த கால மனையற மாண்பையும், அதில் நிலவிய காதல் வாழ்வையும் எண்ணி மயங்குகின்றது.

உன்னைப் பிரியேன்; பிரிந்தால் உயிர் தறியேன் என்று கூறிய வார்த்தைகள் அவன்மனக்கண்ணின் முன் நிழலாடுகின்றன.

காதல்; காதலின்றேல் சாதல்! என்று கூறிக் கூடி வாழ்ந்த வாழ்வை அவன் எண்ணுகின்றான். ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து வாழமுடியுமா? என்று வாழ்ந்த அக்கால வாழ்க்கை என்னவாயிற்று?

இதோ இன்று அவள் இறந்துவிட்டாள்! அவள் உடல் இன்று என் கண் முன்னே பற்றி எரிகிறது. அதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனினும் என் உயிர் போகவில்லை! வாழ்ந்து கொண்டிருக்கிறது! இந்நிலை என்னைப் பெரிதும் வருத்துகிறது. அவள் இறந்ததால் நான் பெற்றுள்ள துன்பம்அத்துணைப் பெரிதன்று

---

[57] அகம், 26 : 4 . . . 25.

போலும். அத்துன்பம் உண்மையில் மிகவும் பெரிதாக இருந்தால், அது என் உயிரையும் அல்லவா கொண்டு போயிருக்க வேண்டும்! ஆனால் அத்துன்பம் அப்படிச் செய்யவில்லையே. உயிரைக் கொண்டு போகும் ஆற்றல் அத்துயருக்கு இல்லை. என்னே இவ்வுலகியல்! என்னே இவ்வியற்கையின் திருவிளையாடல்!" என்று கலங்கிப் பாடுகிறான். புறம் 245–ஆம் பாடல் இதனை எடுத்துரைக்கின்றது.

## மகண் மறுத்து மொழிதல்

புறப்பொருள் இலக்கண நூலார் 'மகட்பாற் காஞ்சி' என்றும் 'மகண் மறுத்து மொழிதல்' என்றும் இரண்டு துறைகளை வகுத்துக் கூறுகின்றனர். இத்துறைகள் நொச்சித்திணைக்கு உரியனவாக அமைந்துள்ளன.

இவை பண்டைக்காலத்தில் சமுதாயத்தில் மன்னர் குலத்திற்கும் மறவர் குலத்திற்கும் நிகழ்ந்த உண்மையான மணவுறவு பற்றிய செய்திகளை அடிப்டையாகக் கொண்டவை எனக் கருதல்.

கரிகால் சோழன் நாங்கூர்வேள் ஒருவரின் மகளை மணந்து அரசமாதேவி ஆக்கினான். சேரன் செங்குட்டுவன் இளங்கோவேள் மகளை மணந்தான். இவற்றிலிருந்து முடியுடை மூவேந்தர் குடியினர் தமிழகத்தில் வாழ்ந்த மறக்குடியினரான வேளிர்,மறவர், ஆயர் போன்ற குடியில் மகட்கொடை நேர்வது வழக்கம் என்பதை அறிய முடிகிறது.

அவ்வாறு அரசர்கள் மகட்கொடை நேரும்போது மறவர் குடியினர் உடனே இணங்கி விடுவதில்லை. மன்னர்களாயிற்றே என்பதற்காகப் பெண் கொடுக்க இசைந்து விடுவதில்லை. வேந்தர்கள் விருப்பத்தை மறுத்து அவர்களை எதிர்த்து நிற்பர். இது மறக்குடியின் இயல்பு.

*"ஏந்திழையாள் தருக என்றும்*
*வேந்தனொடு வேறுநின் றன்று"*
*"அளிய கழல்வேந்தர் அம்மா வரிவை*
*எளியள்என்று எள்ளிஉரைப்பின் – குளியாவோ*
*பண்போற் கிளவி இப்பல்வளையாள் வாண்முகத்த*
*கண்போற் பகழிகடிது'*[58]

என்பன போன்ற பாடல்களில் இவ்வழக்காற்றைக் காணலாம்.

அண்டர் மகன் குறுவழுதியார் என்ற அரசப் புலவரது பாடல் ஒன்று இவ்வழக்குப் பற்றி எடுத்துரைக்கின்றது.

---

[58] புறப்பொருள் வெண்பாமாலை, மகட்பாற் காஞ்சி, 84.

சீறூர் மன்னன் ஒருவனிடத்தில் அழகில் சிறந்த மகள் ஒருத்தி இருந்தாள். மறக்குடியில் பிறந்த அம்மங்கையைப் பொர் கொள்வதற்கு அரசர்கள் பலர் விரும்பினர். தூதுவரை அனுப்பி மகட்கொடை நேர்ந்தனர். ஆனால் அப்பெண்ணின் தந்தையும் தமையனும் அரசர்களுக்கு அப்பெண்ணை மணம்செய்துதர மறுத்தனர். அரசர் எவரும் அவளுக்கு எற்றவராகார் என்பது அவர்கள் கருத்து. எனவே, மகட்கொடை மறுத்தனர்.

தகவிலார்க்குத் தம்மகளைக் கொடுக்க மறுப்பது தமிழ்நாகரிகமாக இருந்தது. இதனைச் சமுதாயத்தில் வாழ்வியல் முறையை வகுத்த சான்றோர்களும் ஏற்றனர். இலக்கணப் புலவர்கள் 'மகட்பாற் காஞ்சி' என்ற பெயருடன் துறை அமைத்து இலக்கணம் வகுத்தனர்.

எனினும் இதன் விளைவாக ஊரில் போர் ஏற்பட்டது. மகட்கொடை மறுத்ததால் சினங்கொண்ட மன்னர்கள் படையுடன் வந்து மணப்பெண்ணின் உறவினரைத் தாக்கினர். தந்தையும் தமையனும் உறவினரும் வீரத்தோடு எதிர்த்து நின்று போரிட்டனர். இதனால் ஏற்படும் அழிவுநிலை கண்டு அண்டர் மகன் குறுவழுதியார் மனம் வருந்தினார். அவ்வருத்தம் ஒரு பாடலாக வெளிப்பட்டது.

"இப்பெண் மிகுந்த அழகுடையவள்; இவளது அழகே அழிவிற்குக் காரணமாயிற்று. இவளுடைய தாய் இவள்மாட்டுப் பேரன்புடையவள்.

'நீ உண்பதற்குரிய பாலின் அளவை அறியும் அறிவு நிரம்பினாயல்லை; இன்னும்சிறிது பால் உளது; அதையும் அருந்து, என உண்பிக்கும் அன்புடையவள் அவள்.

கல்வியறிவுடையவனாயினும் பணிவுடைமை குறைந்தவனாகிய தமையனும், தந்தையும் இவள்பால் பேரன்புடையர். அவ்வாறிருந்தும் இவளது அழகுநலன் இவ்வூர் அழிதற்குக் காரணமாக அமைந்துவிட்டதே' என்று வருந்தி அவர் பாடுகின்றார்.

*"பிறங்கிலை இனியுள பால்என மடுத்தலின்*
*ஈன்ற தாயோ வேண்டா ளல்லள்;*
*கல்வியென் என்னும் வல்லாண் சிறாஅன்*
*ஒள்வேல் நல்லன் அதுவா யாகுதல்*
*அழிந்தோர் அழிய, ஒழிந்தோர் ஒக்கல்*
*பேணுநர்ப் பெறாஅது விளியும்*
*புன்றலைப் பெரும்பாழ் செயும் இவள்நலனே'*[59]

என்பது அவர் பாடல்.

---

[59] புறம் 346.

## சமுதாயத்தில் பரத்தமை

'பரத்தமை' என்ற சொல் விலைமகளிரோடு கலந்துஒழுகும் ஒழுக்கத்தைக் குறிக்கும். சமுதாயத்தில் இது பரவலாக வளர்ச்சி பெற்றுள்ளதால் இலக்கியங்களின் பாடு பொருளாயிற்று.

தொல்காப்பியர் காலம் மிக மிகத் தொன்மையானது. இவரது காலம் பற்றி அறிஞரிடையே கருத்து வேற்றுமை உள்ளது. ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனப் பனம்பாரனார் கூறியதால் இவர் வடமொழிப் பாணினிக்கும் முற்பட்டவராதல் வேண்டும் எனக் கருதப்படுகிறது என்பர் டாக்டர் ஆறு. அழகப்பன்.[60]

தொல்காப்பியர் வாழ்ந்த காலம் கி.மு. 3500–க்கு முன் என்பர் மறைமலை அடிகள்.[61]

கி.பி. 2–ஆம் நூற்றாண்டு என்பர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.[62]

இவற்றை நோக்கும்போது தொல்காப்பியர் காலம் மிகத்தொன்மையானது என்பதை அறியமுடிகிறது.

தொல்காப்பியர் காலத்தில் தமிழகச் சமுதாயத்தில் பரத்தமை வெறுக்கப்படவில்லை. வாழ்வியலின் ஒரு கூறாகவே அது கருதப்பட்டு வந்துள்ளது.

தமிழகத்தில் பரத்தமை இருந்தது. அதன் வழிப்பட்டு ஒழுகும் ஆடவரும் இருந்தனர். அவர்கள் செயலைப் பொறுத்து நடக்கும் மனைவியரும் இருந்தனர்.

"பண்டைச் சமுதாயத்தில் கணிகை மடந்தையர் இயல்பாகப் பெற்றிருந்த நிலையானசெல்வாக்கை நாம் மறைப்பதற்கில்லை. பாணன், கூத்தன், விறலி, பரத்தை, யாணர் சான்ற அறிவர் கண்டோர் என்று தொல்காப்பியத்தில் கற்பினில் கூற்றுக்கு உரியவளாகப் பரத்தை எண்ணப்படுவாள்.

*"எண்ணரும் சிப்பிற் கிழவோன் மேன" – தொல்.1091.*

*"கண்ணிய காமக் கிழத்தியர் மேன" – தொல். 1096.*

தலைவன் கூற்று, தலைவி கூற்று, தோழி கூற்று என்ற நிகர்வரிசையில் பரத்தை கூற்றும் ஒரு தனி நூற்பாவாக இடம்பெற்றிருத்தலை நினைக."[63] என்பார் கூற்று பரத்தமையின் செல்வாக்கைப் புலப்படுத்த வல்லது.

---

[60] டாக்டர் ஆறு.அழகப்பன், தமிழ்ப்பேழை, ப.54.
[61] மறைமலைஅடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், ப.595.
[62] தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, ப.28.
[63] டாக்டர் வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.290.

கோவலன் கண்ணகியைத் துறந்து கணிகை மாதவியைச் சென்றடைந்ததை எவரும் தடைசெய்யவில்லை. இதிலிருந்து பரத்தமை சமுதாய இசைவு பெற்றிருந்தது என்பதை உணர முடிகிறது.

“சிலப்பதிகாரத்தில் காவல் கணிகையர், பூவிலை மடந்தையர், ஆடல் கூத்தியர், கடைகழி மகளிர், வம்பப் பரத்தையர், எண்ணெண் கலையோர், தாசியர், நாடக மகளிர் எனப் பல்வேறு வகையான பொதுமகளிர்கூறப்படுகின்றனர். அறுபத்து நான்கு கலைகளில் வல்லவர்களாக விளங்கியதால் அவர்கள் ‘எண்ணெண் கலையோர்’ எனப் போற்றப்பட்டனர்.

கணிகையர் குலத்தில் பிறந்த மாதவி அறுபத்து நான்கு கலைகளில் வல்லவளாக இருந்தாள். கணிகையர்களில் பெண்மக்கள், தாம் விரும்பும் ஆடவர்களைத் திருமணம் செய்துகொண்டு அவர்களுடைய ஆசைக்கிழத்தியர்களாக வாழ்வார்கள். இவர்களைக் காதல் பரத்தையர், காமக்கிழத்தியர் என நம்பி அகப்பொருள் கூறுகின்றது”[64] எனப் பரத்தையர் பற்றிக் கூறும் டாக்டர் அழகு கிருஷ்ணனின் விளக்கம் நினையத்தக்கது.

சான்றோர்கள் பரத்தமையைக் கடிந்துரைக்கின்றனர். திருக்குறள் பரத்தமைக்கென ஒரு தனி அதிகாரம் வகுத்து,

*“பொருட்பெண்டிர் பொய்ம்மமை முயக்கம் இருட்டறையுள்*
*ஏதல்பிணம் தழீஇ யற்று”* — ***குறள் 913.***

எனவும்,

*“இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்*
*திருநீக்கப் பட்டார் தொடர்பு”* — ***குறள் 920.***

எனவும் பரத்தமையைக் கடிந்துரைக்கின்றது.

இவ்வளவையும் கடந்து இன்றளவும் பரத்தமை தன் செல்வாக்கைப் பரப்பி வருகின்றது. தமிழ்நாட்டில் மட்டுமல்ல, உலக நாடுகள் முழுவதும் இதே நிலைமைதான்!

‘நாகரிகத்தின் உயர்நிலை பெற்ற நாடுகள் என வரலாற்றாசிரியர்களால் வருணிக்கப்படும் உரோம், கிரீஸ் முதலிய நாடுகளில் பரத்தமை ஒரு தொழிலாகவே பல நூற்றாண்டுகளாகப் பரவி நின்றமை அறியப்படுகிறது.

கி.மு. முதல் நூற்றாண்டில் மிகப்பெரிய எண்ணிக்கையில் கிரேக்கக் கணிகைகள் உரோம் நகரில் காணப்பட்டதாகவும், செல்வம்படைத்த இளைஞர்கள் இவர்களைச் சுற்றி அலைந்ததாகவும், சமுதாயத்தில் உயர்நிலையில் உள்ள நாட்டார்

---

[64] டாக்டர் பொ. அழகுகிருஷ்ணன், சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும், சமுதாய வரலாறும், ப.54.

ஒருவரின் மகள் காவல் நிலையத்தில் தன்னை ஒரு விலைமகளாகப் பதிவு செய்துகொண்டதாகவும் அறிஞர் ஜார்ஜ்லக் குறிப்பிடுகின்றார்.[65]

## அரசப் புலவர் பாடல்களில் பரத்தமை

சமுதாயத்தில் பரத்தமை இடம் பெற்றிருந்தாலும் நாடாளும் மன்னர்கள் பரத்தமையை ஏற்கவில்லை. மக்களின் கடமை வேறு; மன்னர்களின் கடமைகள் வேறு என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர்.

சங்க காலத்தில் பூம்புகாரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டவன் சோழன் நலங்கிள்ளி. இவன் மாபெரும் வீரனாக மட்டுமன்றி சமுதாயம் கூறும் ஒழுக்கங்களில் சிறந்த புலவனாகவும் விளங்கியவன்.

இவனது தாயத்தானாகிய நெடுங்கிள்ளி இவனோடு பகைத்து இவன் நாட்டைக் கைப்பற்றக் கருதி அடிக்கடிக் கலகம் விளைத்து வந்தான். அவன் செயல்களைக் கண்டு சினந்த நலங்கிள்ளி, "என் ஆற்றலை உணராது என்னை எதிர்க்கும் நெடுங்கிள்ளியைப் போரில் தோற்கடித்துப் புறமுதுகு காண்பேன்; அவ்வாறு காணேனாயின், அன்பின் விழையாமல் பொருள் விழையும் கணிகை மகளிருடன் தொடர்பு கொண்ட பழியை யான் அடைவேனாக!" என்று வஞ்சினம் கூறுகின்றான்.

*"வருந்தப் பொறேஎ னாயின் பொருந்திய*
*தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்*
*பல்லிருங் கூந்தல் மகளிர்*
*ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே'*[66]

என்ற அவனது பாடலில் இதைக் காண முடிகிறது.

இதுகொண்டு மன்னர்கள் பரத்தமையை வெறுத்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

திருவள்ளுவர் காலத்தில் சமண சமயச் செல்வாக்கு தமிழகத்தில் உயர்ச்சி பெற்றிருந்தது. சமணர்கள் பொதுவாகப் பெண்களை குறிப்பாகப் பரத்தையர்களைப் பெரிதும் வெறுப்பவர்கள். அதன் காரணமாகத் திருக்குறளில் பரத்தமை கடிந்துரைக்கப்பட்டிருக்கலாம். சமணச் செல்வாக்கு குறைந்தபின் பரத்தையர் நிலை உயர்ந்தது. சைவ சமய குரவர்களில் ஒருவரான சுந்தரர் பரத்தை குல மகளான பரவையைத்திருமணம் செய்து கொண்டமை கருதத்தக்கது.

---

[65] George Luck, The Latin Love Elegy, p.23.
[66] புறம், 73 : 11–14.

## அறச்சிந்தனை

வாழ்க்கையில் மக்கள் அடைய வேண்டிய உறுதிப் பொருள்கள் நான்கு என்பர் அறநூலார்.

*“அறம்பொருள் இன்பம்வீடு அடைதல் நூற்பயனே”*[67]

என்பது நன்னூல்.

தொல்காப்பியர் காலத்திலிருந்தே தமிழ் மக்கள் அறத்தைக் கடவுளாகக் கொண்டு ஒழுகினர் எனலாம்.

“அறத்தினைத் தெய்வமாக உருவகப்படுத்திக் கூறுவது உலகின் பல்வேறு நாடுகளில் இருந்து வரும் வழக்கமாகும். பண்டைத் தமிழரும் இம்மரபினைப் போற்றியுள்ளனர். இதனை அறக்கடவுள் என்னும் பொருளில் அறம் என்னும் சொல்லை அவர்கள் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தியுள்ளமையால் நாம் அறிய முடிகின்றது. அத்தெய்வம் நல்வினை செய்தோர்க்கு நன்மைகளையும், தீவினை செய்தோர்க்குத் துன்பங்களையும் தருவதாக நம்பினர். இவ்வகையில் அது ஊழ்வினைத் தெய்வமாகக் கருதப்பட்டது.”[68] என்பார் கூற்று இக்கருத்தைப் புலப்படுத்தும்.

*“அரசியல் பிழைத்தார்க்கு அறம்கூற்று ஆவதூஉம்”*[69]

என்ற சிலப்பதிகாரத் தொடர் இதனை வலியுறுத்தும்.

## அறத்தின் இலக்கணம்

அறம் என்ற சொல் மிகவும் நெகிழ்ச்சியான பொருளை உடையது. அறம் என்றால் என்ன என்பதற்கு விடை கூறுதல் எளிதானதன்று. அது காலப்போக்கில் பல்வேறு பொருள்களை உணர்த்தும் சொல்லாக சிறப்புற்றுள்ளது. அறம் என்பதற்கு,

*“மனத்துக்கண் மாசு இலனாதல் அறம்” – 34.*

*“அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்றது அறம்” – 35*

என்று பொருள் கூறுவர் வள்ளுவர்.

இவற்றைத் தவிர்த்து அறம் என்பதற்கு ‘ஒழுக்கம்’ என்ற ஒரு பொருளும் சிறப்பாகக் கூறப்படுகிறது. திருக்குறளுக்கு உரைவகுத்த பரிமேலழகர் அறத்தை ஒழுக்கம் என்றே வள்ளுவர் கருதியதாகக் குறிப்பிடுகின்றார்.

---

[67] நன்னூல் – பாயிரம்.
[68] க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.38.
[69] சிலம்பு, பதிகம், 55.

"இவற்றுள் வழக்குந் தண்டமும் உலகநெறி பயத்தவாவ தல்லது ஒழுக்கம் போல மக்களுயிர்க்கு உறுதிபயத்தற் சிறப்பிலவாகலானும், அவைதாம் நூலானே யன்றி உணர்வு மிகுதியானும் தேவியற்கையானும் அறியப்படுதலானும் அவற்றை ஒழித்து, ஈண்டு தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது"[70] என்னும் அவர் உரையால் இதனை அறியலாம்.

இவற்றை எல்லாம் மொத்தமாகத் தொகுத்து கணித்து நோக்குமிடத்து அறத்தை,

மன்னர் அறம்

மக்கள் அறம்

என இருவகையாகப் பிரிக்கலாம் எனத் தோன்றுகிறது.

## மக்கள் அறம்

மக்கள், தம் வாழ்க்கையில் போற்ற வேண்டிய ஒழுக்கங்கள், ஒருவருக்கொருவர் ஆற்றவேண்டிய கடமைகள் ஆகியவற்றை மக்கள்அறம் எனக் கூறலாம். இல்லறம், துறவறம் இவ்விரண்டிலும் பாதுகாக்கவேண்டிய கொல்லாமை, பொய்யாமை, கல்லாமை, வெகுளாமை, பிறர்மனை விரும்பான்மை, இன்னா செய்யாமை, அழுக்காறாமை, அவாவின்மை போன்றவைகளும், வறியவர்க்கு ஈயும் பொருட்கொடையும் (தருமம்) 'அறம்' எனப்பட்டன.

"ஈதல் அறம், தீவினைவிட்டு ஈட்டல் பொருள்" என்ற ஆன்றோர் வாக்கு இங்கு கருதத்தக்கது.

## மன்னர் அறம்

அரசாட்சியில் ஒரு மன்னன் பாதுகாக்க வேண்டிய அறங்கள் பல எனினும் 'நடுநிலைமை தவறாத நீதியே அவர்களின் முதன்மை அறமாகக் கருதப்பட்டது.

நீதிதவறாத – அறம் பிழறாத மன்னனது ஆட்சியே செங்கோல் எனப்பட்டது. மன்னரது ஆட்சியில் அமைந்த நீதிமன்றங்கள் அறங்கூரவையம் என்றே வழங்கப் பெற்றன.

*"அறன்இழுக்காறு அல்லவைநீக்கி மறன் இழுக்கா*
*மானம் உடைய தரசு"*[71]

என்ற வள்ளுவர் வாக்கு இதனைத் தெளிவுறுத்தும்.

மன்னர்கள் நடுநிலை தவறாத செங்கோலையே அறம்எனக்கொண்டனர் என்பதைப் பின்வரும் பாடலடிகள் புலப்படுத்தும்.

---

[70] திருக்குறள், உரைப்பாயிரம்.
[71] திருக்குறள், 384.

*"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" – புறம் 55.*

*"அறம் துஞ்சு செங்கோ லையே" – புறம் 20.*

*"அறம் புரி செங்கோல் மன்னனின்" – ஐங்குறு 290.*

*"அறம் கடைப்பிடித்த செங்கோலுடன்" – அகம் 338.*

*"அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்" – பத்துப் பொருந 230.*

*"அரசியல் பிழையாது அறநெறி காட்டி" – பத்துப் மதுரைக் 192*

*"அறனறி செங்கோல்" – சிலப்பதி – 23:5.*

*"அறக்கோல் வேந்தன் – மணிமே" – 15:47.*

*"அறம் கெழு நல்லவை உறந்தை" – அகம் 93.*

*"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறம்கெட அறியா தாங்கு" – நற் 400.*

*"அறம்புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து" – புறம் 35.*

## பாண்டியன் பாடலில் அறம்

இவ்வாறு 'அறம்' என்ற சொல் இடம்பெறும் இடங்கள் மன்னரது நீதிதவறாத செங்கோல் மாண்பையே உணர்த்துவதைக் காணலாம்.

அரசப் புலவர்களில் ஒருவரான ஒல்லையூர் தந்தபூதப் பாண்டியன் 'அறம்' என்பதை 'நீதி, நடுநிலைமை' என்ற பொருளிலேயே வைத்துப் பாடுகின்றான்.

*"அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறன்இல் ஒருவனை நாட்டி, முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தே னாகுக"*[72]

என்னும் அம்மன்னனின் பாடற்கருத்து எண்ணத்தக்கது.

அக்கால நீதிமன்றங்கள் அரசவையிலேயே அமைந்திருந்தன. அவை 'அறங்கூரவையம்' என வழங்கப் பெற்றன.

## முடிவுரை

- சமுதாயம் என்பது பிற்காலத்தில் தமிழில் தோன்றிய உலக வழக்குச் சொல். சமம் + தாயம் = சமதாயம் = சமுதாயம் என்று ஆகியது.
- 'தாயம்' என்ற சொல் 'உரிமை' எனப் பொருள்படும். எனவே, சமுதாயம் என்பது நாட்டில் உள்ள உரிமைகளை மக்கள் அனைவரும் சமமாகப் பெற்று ஒற்றுமையுடன் கூடிவாழும் இனக்குழுவேயாகும் என்பது பெறப்படுகிறது.

---

72 புறம் 71.

- சங்க காலத்தில் நாடாளும் அரசர்கள் பலர் புலமை பெற்று, பல தமிழ்ப் பாடல்களைப் பல சூழல்களில் பாடியுள்ளனர். அவற்றில் மக்கள் நல்வாழ்வுக்கான சமுதாயச் சிந்தனைகள் பல நிறைந்துள்ளன.
- இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட மக்கள் சமுதாயம் வேறு; இன்றுள்ள சமுதாயம் வேறு. மன உணர்விலும், வாழ்க்கை முறைகளிலும் அவை வேறுபட்டுள்ளன.
- அக்கால சமுதாயத்தில் பண்பாடு நிலைத்திருந்தது. இன்று அத்தகையப் பண்பாட்டினைக் காண முடியவில்லை. மன்னர் கடமைகள் மற்றும் மக்கள் கடமைகள் ஆகியவற்றைச் சங்ககால அரசப் புலவர்களின் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.
- ஒரு சகடத்தை வழியறிந்து செலுத்தும் ஓட்டியைப் போல மன்னன், 'ஆட்சி' என்னும் சகடத்தை முறையறிந்து செலுத்த வேண்டும் என்பதைத் தொண்டைமான் இளந்திரையன் பாடல் எடுத்துரைக்கின்றது.
- சங்க காலத்தில் மன்னன், மக்களாகிய உடல் தொறும் உலவும் உயிர் போன்றவன் என்ற கருத்து நிலவியிருந்தது. மக்களிடமிருந்து தம்மை வேறுபடுத்திக் கொள்ளாத ஒருமைப்பாட்டைச் சங்க கால மன்னர்கள் பின்பற்றினர். பண்டைக்கால மன்னர்கள் கொடுங்கோலுக்கு அஞ்சி ஆட்சி நடத்தினர்; செங்கோல் வளையாமல் ஆண்டு வந்தனர். பண்டைக் காலத்தில் கல்வி பற்றிய சிந்தனை இருந்தது. ஆனால் கல்வியைக் கற்பிக்கும் கல்வி நிலையங்கள் அதிகமில்லை.
- தமிழர் சமுதாயத்தில் 'அறம்' பெரும்பங்கு வகித்தது. மன்னர்கள் 'அறம்' – நீதி என்பதை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்தனர். மக்கள் 'அறம்' ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்தனர்.

# இயல் – 4

# அரசப்புலவர்களும் பிற புலவர்களும்

## முன்னுரை

சான்றோர்கள் வாழ்வதால் உலகம் நிலைபெற்றுள்ளது என்பது புறநானூற்றுப் பொன்மொழி. புலவர்கள் வாழ்வதால் தமிழ் நிலைபெற்றுள்ளது என்பது புதுமொழி.

புலவர்கள் என்று எடுத்துக் கொண்டால் இக்காலப் புலவர்கள் வேறு; பண்டைக்கால்ச் சங்ககாலப் புலவர்கள் வேறு. பொருள் விழைவு காரணமாக இச்சகம் பேசிக் கொச்சை வாழ்வு நடாத்தும் புலவர்கள் சங்க காலத்தில் இல்லை.

*"பீடில் மன்னர்புகழ்ச்சி வேண்டிச்*
*செய்யா கூறிக் கிளத்தல்*
*எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே"*[1]

என்று கூறும் துணிவு நிமிர்வு சங்ககாலப் புலவரிடம் இருந்தது.

கொடைக் குணமும் மக்களை அரவணைத்துக் காக்கும் அருள் உள்ளமும் கொண்ட மன்னர்களையே புலவர்கள் பாடினர்; பொன்னுக்கும் பொருளுக்கும் பாடினர்; தவிர்க்க முடியாத சமயங்களில் கூழுக்கும் பாடினர்.

புலவர்களும் புரவலர்களும் ஒருவரை ஒருவர் சார்ந்தே வாழ்ந்தனர். புலவர்கள் வெறும் புகழ் பாடகர்களாக மட்டுமன்றி அரசியலில் மன்னனுக்கு ஆலோசனை கூறும் சான்றோராகவும் திகழ்ந்தனர். இத்தகைய புலவர்களுக்கும் அரசனாகப் புலவராக விளங்கிய மன்னர்களுக்கும் இடையிலான தொடர்பை இவ்வியல் ஆராய்கின்றது.

### 1. பிசிராந்தையார் – அறிவுடை நம்பி

மன்னர்களோடு தொடர்பு கொண்ட பெரும் புலவர்களில் குறிப்பிடத்தக்கவர் பிசிராந்தையார். இவர் பாண்டிய நாட்டின் தென்கோடியில் இருந்த பிசிர் என்னும் ஊரினர். 'ஆந்தை' என்ற இயற்பெயரை உடையவர். அதன் காரணமாகப் 'பிசிராந்தையார்' என அழைக்கப்பட்டார். இவர் காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தவன் பாண்டியன் அறிவுடைநம்பி.

பாண்டியன் அறிவுடைநம்பியோடு பிசிராந்தையார் தொடர்பு கொண்டிருந்தார். பிசிராந்தையாரின் உலகியல் அறிவையும், புலமை நலத்தையும் உணர்ந்த அறிவுடைநம்பி அவரை அழைத்து அரசியல் ஆலோசனைகள் பெற்று ஆட்சி புரிந்து வந்தான்.

---

[1] புறம், 148 : 5–7.

அறிவுடைநம்பி ஒருமுறை பிசிராந்தையாரை அழைத்து ஆலோசனை கேட்டான். நம்பி புலவனாகத் திகழ்ந்ததோடன்றிப் புரவலனாகவும் விளங்கியமையின் அவனது ஆலோசனை அரசியல் தொடர்பு உடையதாகவே இருந்தது. புலவரும் அரசியல் தொடர்பான அரிய கருத்துக்களை அவனுக்கு எடுத்துரைத்தார்.

"ஒரு நிலத்தின் அளவு 'மா' என்ற அளவுக்குக் குறைந்ததாக இருப்பினும் அதை முறையாகப் பண்படுத்தி, நீர்கால் யாத்து, உழுது பயிரிட்டால் அதில் விளையும் நெல் ஒரு யானைக்குப் பல நாள் உண்பதற்குப் போதியதாக உதவும். நூறு மா அளவுள்ள வயலாயினும் அதில் விளைந்த நெல்லை சரிவரப் பாதுகாவாமல் யானையைத் தனியாக விடுத்து அவ்வயலில் தின்னுமாறு செய்தால் அதன் வாயில்புகும் நெல்லைவிடக் காலால் மிதிபட்டுஅழியும் நெல்லே அதிகமாகும்.

அதைப் போன்றே ஒரு நாடாளும் மன்னன் குடிகளிடமிருந்து வாங்கும் இறைப் பொருளை அளவறிந்து அவர்கள் கொடுக்கக்கூடிய ஆற்றலின் அளவறிந்து வாங்குவானாயின், அதாவது ஆறிலொரு கடமை என்பதைப் போல முறையான ஒரு ஒழுங்கு முறையைப் பின்பற்றி வாங்குவானாயின், அவன் நாடு வறுமையின்றி வளம் பெற்று சிறக்கும். குடிகளும் வறுமையின்றி நல்வாழ்வு வாழ்வர். அரசனும் வாழ்வான்.

அவ்வாறன்றி, அரசன் குடிகளிடத்து அன்பில்லாதவனாய், மக்களை துன்புறுத்தி ஆட்சி நடத்துவானாயின், அரசன் அவ்வரசாட்சியில் நெடுநாள் நீடிக்க இயலாது. விரைவில் அழிவான். குடிமக்களும் வரிச்சுமை தாங்காது வருந்தி நைந்து அழிவர்." என்பது அவர் கூறிய அறிவுரை. இதனை,

*"காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே*
*மாநிறை வில்லதும் பன்னாட் காகும்;*
*நூறுசெறு வாயினும் தமித்துப் புக்குணினே*
*வாய்புகுவ தனினும் கால்பெரிது கெடுக்கும்;*
*அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே*
*கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;*
*மெல்லியன் கிழவனாகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*
*பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்*
*யானை புக்க புலம் போலத்*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே"*[2]

என்ற அவரது பாடல் அறிவுறுத்துகின்றது.

---

[2] புறம், 184

## பிசிராந்தையார் x கோப்பெருஞ்சோழன் நட்பு

பிசிராந்தையார் வாழ்ந்த காலத்தில் சோழ நாட்டை ஆண்டு வந்தவன் கோப்பெருஞ்சோழன். இவன் தலைநகரம் உறையூர். உறையூருக்கும் பிசிர் ஊருக்கும் இடைவெளி பன்னெடுங்காதம் எனினும், சோழனுக்கும் பிசிராந்தையாருக்கும் ஒரு அரிய நட்புரிமை படர்ந்து வளர்ந்தது. பிசிராந்தையார் கருத்திற்கேற்ற அரசப் பண்புகள் கோப்பெருஞ்சோழனிடம் அமைந்திருந்தன. அவனதுகுடியோம்பும் அருட்பண்பையும், நாட்டு மக்களைப் பகைவரிடமிருந்து பாதுகாக்கும் கடமை உணர்வையும், வீரச்செயல்களையும் கேள்வியுற்ற பிசிராந்தையார் அவனை நேரில் காணாமலும் கண்டு பழகாமலும் அவனிடம் நட்புப் பூண்டார். பிசிராந்தையாரின் அரிய குணநலன்களைக் கேள்வியுற்ற கோப்பெருஞ்சோழனும் அவரிடம் உயிர் நட்புப் பூண்டான்.

சோழனும் புலவன்; பிசிராந்தையாரும் புலவர். அத்தமிழ்ப்புலமையே இருவரிடையே நட்புத் தோன்ற முதற்காரணமாக அமைந்திருக்கலாம்.

*"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்*
*நட்பாங் கிழமை தரும்"* *– குறள் 785.*

என்ற குறளுக்கு இலக்கணமாக விளங்கினார்.

"புணர்ச்சி–பழகுதல். ஒரு தேயத்தராதல் பழகுதல் – பலகாற் கண்டும் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையாருக்கும் போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும்" எனப் பரிமேலழகரால் பாராட்டப்படும் அளவுக்கு இவர்கள் நட்பு வளர்ந்திருந்தது.

## கோப்பெருஞ்சோழன் x பிசிராந்தையார் ஒப்பீடு

சங்க கால அரசப் புலவர்களுக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும் இருந்த தொடர்பைவிடக் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் இருவரும்கொண்டிருந்த தொடர்பும் நட்பும் புதுமையானவை.

1. பிற மன்னர்களும் – புலவர்களும் அவ்வப்போது கண்டு பாடிப் பரிசில் பெற்றுச் செல்லும் பழக்கம் கொண்டிருந்தனரேயன்றி, ஒருவர் மடியும்போது மற்றவரும் தம் உயிரைவிடும் அளவுக்கு நட்புறவு பூண்டதில்லை.

கோப்பெருஞ்சோழன் இறந்ததும் அவனது கல்லறையின் அருகே வந்து வடக்கிருந்து பிசிராந்தையாரும் உடன் நீத்தார்.

2. பிசிராந்தையார் சிறந்த தமிழ்ப்புலவர்; கோப்பெருஞ்சோழனும் புலவன்.

3. கோப்பெருஞ்சோழன் தன் பாடலில்,

*"தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்*
*பிசிரோன் என்பஎன்உயி ரோம்புநனே"*[3]

என்று புலவருக்கும் தனக்கும் உள்ள நட்புரிமையைப் பாடினான். அதே முறையைப் பிசிராந்தையாரும் கையாண்டுள்ளார்.

தனக்கும் கோப்பெருஞ்சோழனுக்கும் உள்ள நட்புரிமையைத் தான்பாடிய அன்னம் விடுதூதுப் பாடலில்,

*"அன்னச் சேவல் . . . அன்னச் சேவல் . . .*
*குமரியம் பெருந்துறைஅயிரை மாந்தி*
*வடமலைப் பெயர்குவை யாயின் இடையது*
*சோழநன் னாட்டுப் படினே கோழி*
*உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ*
*வாயில் விடாது கோயில் புக்குளம்*
*பெருங்கோக் கிள்ளி கேட்க இரும்பிசிர்*
*ஆந்தை அடியுறை எனினே, மாண்டநின்*
*இன்புறு பேடை அணியத் தன்*
*நன்புறு நன்கலன் நல்குவன் நினக்கே!"*[4]

எனத் தம் இருவரிடையே நிலவிய நட்புறவைப் பாடுகிறார்.

நட்புறவைப் பாடலின் வழி வெளிப்படுத்தியது இருவரிடையே உள்ள ஒற்றுமைப் பண்பைப் புலப்படுத்துகிறது.

## அறிவுடை நம்பி x பிசிராந்தையார் ஒப்பீடு

1. இருவரும் புலவர்கள்.

2. அறிவுடை நம்பி அரசனாக இருந்தும் அரசியல் பற்றிப் பாடாமல் சமுதாய இயல் பற்றி, மக்கள் வாழ்க்கையில் குழந்தைகளைப் பெற்றவர் அடையும் இன்பம் பற்றிப் பாடினான்.

பிசிராந்தையார் குடிமக்களின் நல்வாழ்வுக்காக அரசன் என்ன செய்ய வேண்டும் என்று அவனது வரிவாங்கும் கடமை பற்றிப் பாடினார்.

3. பிசிராந்தையார் தன்நாட்டு மன்னனிடம் நெருங்கிய நட்புறவு கொள்ளவில்லை. ஆனால், அவனது செங்கோல் சிறப்பையும்,

[3] புறம், 215 : 6–7.
[4] புறம், 67 : 6–14

குடிமக்களின் நலம் கருதும் அருள் உள்ளத்தையும் பாராட்டி, "வேந்தனும், அல்லவை செய்யான் காக்கும்"[5] எனப் பாடினார்.

அறிவுடை நம்பியும், பிசிராந்தையாரை மதித்து அவரது ஆலோசனைகளைக் கேட்டு அவற்றின்படி ஒழுகினான்.

## தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் x மாங்குடி மருதனார்

பண்டைக் கால சமுதாய நிலையை அறிவதற்குக் கருவியாக உள்ளவை சங்க நூல்கள். அந்நூல்களில் ஈரமும் வீரமும் மிக்க மன்னர்களையும், நலந்தரு கருத்துகளை அஞ்சாமல் துணிவுடன் அரசருக்கு முன்நின்று கூறும் செந்நாப் புலவர்களைப் பற்றிய செய்திகளையும் காணலாம். கற்பன கற்று முற்றத்துறை போகிய புலவர்கள் மன்னர்களோடு நெருங்கிய நட்புறவு பூண்டிராவிடினும் அடிக்கடி அவர்களோடு பழகி அறவுரை –அறிவுரைகளைக் கூறிவந்தனர் என்பதை அறிய முடிகிறது.

பாண்டிய மன்னர்கள் சங்கம் வைத்துத் தமிழ்மொழியை ஆராய்ந்தனர்; வளர்த்தனர்.

*"பாண்டிய! நின் நாடுடைத்து நல்லதமிழ்"*[6]

எனப் புலவர்கள் போற்றும் அளவுக்கு அவர்களின் தமிழ்ப் பணி சிறந்திருந்தது.

செந்தமிழ் நாடு எது ? என்ற வினா தோன்றியபோது,

*"செந்தமிழ் நாடே . . . .*
*சங்கப் புலவரும் தழைத் தினிதிருந்த*
*மங்கலப் பாண்டி வளநாடென்ப"*

என்ற விடை கிடைத்தது.

49 புலவர்களையும், அப்புலவர்களின் தலைவராக நக்கீரரையும்கொண்ட தமிழ்ச்சங்கம், 'கடைச்சங்கம்' என்ற பெயரில் மதுரையில் அமைந்து தமிழ் ஆராய்ந்ததாக இறையனார் களவியல் உரை கூறுகின்றது.

## மதுரையும் தமிழ்ச்சங்கமும்

முடியுடை மூவேந்தர்களுள் பாண்டியர்களின் தலைநகரமான மதுரை தமிழோடும் தமிழ்ப் புலவரோடும் மிகுதியான தொடர்புடையது என்பது சங்க நூல்களால் அறியப்படுகிறது.

---

[5] புறம், 191 : 4–5.

[6] திருமுருகாற்றுப்படை, நச் – உரை மேற்கோள்.

மூன்று சங்கங்கள் இருந்ததில்லை; கடைச்சங்கம் ஒன்றே இருந்தது என்று கூறுபவர்களும் உளர். அவர்கள் மதுரையையும் அம்மதுரையில் புலவர் பலர் கூடி சங்கம் நிறுவித் தமிழ் ஆராய்ந்ததையும் ஒப்புக் கொள்ளுகின்றனர்.

*"தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்*
*மகிழ்நனை மறுகின் மதுரை"*[7]

எனச் சிறுபாணாற்றுப் படையும்,

*"தொல்லாணை நல்லாசிரியர்*
*புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்*
*நிலந்தருதிருவின் நெடியோன்"*[8]

என மதுரைக் காஞ்சியும்,

*"மதிமொழியிடல் மாலை வினைவர்போல் வல்லவர்*
*செதுமொழிசீத்த செவிசெறுவாக*
*முதுமொழிநீராப் புலனாவுழவர்*
*புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர்"*[9]

என கலித்தொகையும் கூறுமாற்றான், மதுரையில் தொடர்ந்து பல தமிழ்ச்சங்கங்கள் இருந்து தமிழாய்ந்தமை உறுதியாகிறது.

## தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் x மாங்குடி மருதனார்

சங்க காலப் பாண்டியர்களில் புலவர் பாடும் பெருமை மிக்கோனாகத் திகழ்ந்தவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். இளமையிலேயே வீரம் மிக்கவனாக விளங்கித் தன் மீது படையெடுத்து வந்த சேர, சோழர் உள்ளிட்ட ஏழு மன்னர்களைத் தலையாலங்கானப் போரில் வென்றான் என்பது முன்னரே கூறப்பட்டது.

தன் நாட்டினுள் புகுந்து தன் மீது போர் தொடுத்த எழுவரை வென்ற நெடுஞ்செழியன், பின்னர் பகைவர் நாடுகளுள் தானே படையுடன் புகுந்து பல போர்களை உடற்றினான்.

கொங்கு நாட்டின் மீது படை எடுத்துக் கொங்கரை வென்றான். சேர நாடு சென்று சேரனது யானைப் படையை அழித்து, செல்வ வளம் கொழித்த முசிறியைக் கைப்பற்றினான்.

தன் நாட்டின் அண்மையில் இருந்த நீடூர் என்னும் ஊரினை ஆண்ட 'எவ்வி' என்பவனை வென்று அவனுக்குரிய மிழலைக் கூற்றத்தையும், வேளிர் குல

---

[7] சிறுபாணாற்றுப்படை, 66–67.
[8] மதுரைக்காஞ்சி, 761–763.
[9] கலித்தொகை, 66.

மன்னர்கட்குரிய முத்தூர்க் கூற்றத்தையும் வென்று தன்னாட்சிக்கு உட்படுத்தினான். இவனது வீரத்தையும் தீரத்தையும் நக்கீரர் 'நெடுநல்வாடையில்' பலவாறு புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

"போர்ப்புண் பெற்ற வீரர்கள் பாசறையில் உள்ளனர். அவர்களைக் கண்டு ஆறுதல் கூறவிரும்புகின்றான் நெடுஞ்செழியன். பகற்காலம் போர் நிகழ்ச்சிகளில் கழிந்து விடுகிறது. ஆகவே, இரவில் செல்கிறான். இரவின் நடு யாமத்தில் குளிர்மிக்க வாடைக் காற்று வன்மையாக வீசிக் கொண்டிருக்கவும், மழைத்துளிகள் இடைவிடாது வீழ்ந்துகொண்டிருக்கவும் காலத்தின் கடுமை பாராமல் புறப்படுகிறான்.

வாடைக்காற்று வீசுவதால் பெரிய பாண்டில் விளக்குகள் தெற்கே சாயும் அழல்களை வீசுகின்றன. அவற்றை ஏந்திய மறவர்கள் முன்னே செல்கின்றனர். மழைத்துளிகள் மன்னன் மீது விழாதவாறு வெண்கொற்றக்குடை பிடித்து ஒருவன் அருகில் செல்கின்றான்.

காற்றால் அலைப்புண்டு கீழே விழும் மேலாடையை இடக்கையால் பற்றிக் கொண்டு, வழியில் வரிசையாக நிற்கும் குதிரைகள் உதறிய மழைநீரை வலக்கையால் துடைத்துக் கொண்டு சேறு நிறைந்தபாசறைத் தெருவில் நடந்து செல்கின்றான்.

தலையில் வேப்பந்தாரும், கையில் நெடிய வேலையும் தாங்கிய படைத்தலைவன், புண்பட்ட வீரர்களையும், அவர்கள் நிலையையும் விளக்கிக்கொண்டே முன்னால் செல்லுகின்றான். பின்னால், அன்பின் வடிவான நெடுஞ்செழியன் அவ்வீரர்களுக்கு அன்புரையும் ஆதரவு மொழிகளும் வழங்கியவாறு செல்கின்றான்.

## மாங்குடி மருதனார்

பாண்டியன் நெடுஞ்செழியன் பல புலவர்களையும் ஆதரித்துப் போற்றியவன். மாங்குடி மருதனார் அவன் காலத்தில் வாழ்ந்தவர். நக்கீரர் போன்ற பெரும்புலமை நலம் மிக்கவர். இவரைப் புலவராக மட்டுமன்றி ஆன்றவிந்தடங்கிய சான்றோர் தலைவர் என மதித்து, மருதனாரைத் தலைவராகக் கொண்ட தமிழ்ச்சங்கம் ஒன்றை நிறுவினான் நெடுஞ்செழியன். அவரைத் தன் உயிரினும் சிறந்தவராக மதித்து நட்புக் கொண்டான். அவர் தன்னைப் பாடுவதை பெரும்பேறாகவும் எண்ணினான். இதனை,

*"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவனாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகஎன் நிலவரை"*[10]

என நெடுஞ்செழியன் கூறிய வஞ்சின மொழியால் அறியலாம். அவ்வஞ்சின மொழியில்,

---
[10] புறம், 72 : 13–16.

*"இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே"*

என்று செழியன் கூறுவதால் தன்பால் வந்து இரந்த இரவலர்கட்கும் புலவர்கட்கும் பாணர் முதலியோர்க்கும் வரையாது வழங்கும் வள்ளலாகப் பாண்டிய நெடுஞ்செழியன் வாழ்ந்தான் என்பது தெரிய வருகின்றது.

நெடுஞ்செழியனைப் பாடிய புலவர் பலருள்ளும் மாங்குடி மருதனாரே நெருங்கிய நண்பராய் விளங்கினார் என்பதையும், செழியனைப் பற்றி மிகுதியாகச் சிறப்பித்தவர் மாங்குடி மருதனாரே என்பதையும் சங்க நூல்கள் அறிவிக்கின்றன. இவனைப் பற்றிப் பத்துப் பாட்டில் மதுரைக் காஞ்சியைப் பாடியவர் இவர். அப்பாடலில் நெடுஞ்செழியனது பலவகைப் பண்புகளையும் பலவாறு பாராட்டியுள்ளார்.

நெடுஞ்செழியன் தன்னிடம் நண்பராக இருந்து அன்பு பாராட்டுவாரது குடி உயரத்துணை செய்வான்; தன்னைப் பகைத்தவரது குடியைப் பாழாக்குவான் என்பதை மாங்குடி மருதனார்,

*"நட்டவர் குடி உயர்க்குவை;*
*செற்றவர் அரசு பெயர்க்குவை"*[11]

என்ற இரு அடிகளில் புலப்படுத்தியுள்ளார்.

பெறுவதற்கு அரிய பொருள்களை எல்லாம் பகைவரை வென்று எளிதில் பெறுவான். அவ்வாறு பெற்ற பொருள்களை எல்லாம் தனக்கெனப் போற்றி வைத்துக் கொள்ளாமல் புலவர்க்கும், பாணர்க்கும் வழங்குவான் என்பதை,

*"அரிய யெல்லாம் எளிதினிற் கொண்டு*
*உரிய வெல்லாம் ஓம்பாது வீசி"*[12]

என்ற அடிகளில் கூறுகின்றார்.

*"தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மையானே"*[13]

என்ற கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின் பாடிலடி நினையத்தக்கது.

மற்றும் மாங்குடி மருதனார் இவனை "ஒரு பொய் கூறுவதால் உலகம் முழுவதையும்,. தேவர்கள் உண்பதற்குரிய அமிழ்தத்தையும் கொடுத்தாலும் அவன் வாங்க மாட்டான். பொய் கூறுவதால் மறந்துமெய்மையையே விரும்புவன்" என்பதை

*"உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்*
*பொய்சேண் நீங்கிய வாய்நட்பினையே"*[14]

என்ற அடிகளில் புலப்படுத்துகின்றார். இங்கு,

---

[11] மதுரைக்காஞ்சி, அடி 131–132.
[12] மதுரைக்காஞ்சி, அடி 146–147.
[13] புறம், 182 : 8–9.
[14] மதுரைக்காஞ்சி, 197–198.

*"புகழ்எனின் உயிரும்கொடுக்குவர், பழிஎனின்
உலகுஉடன் பெறினும் கொள்ளலர்"*[15]

என்ற புறப்பாடல் அடிகள் நினைக்கத்தக்கவை.

மற்றும், நெடுஞ்செழியன் பொருளாசை அற்றவன்.தனக்கோ நாட்டிற்கோ, குடிமக்கள் பொருட்டோ எத்துணைத்தட்டுப்பாடு நேர்ந்துபொருள்பெற வேண்டிய நிலை ஏற்பட்டாலும் பழியொடு வரும்பொருளை அவன் ஏற்கான் என்பதை,

*"தென்புலம் மருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழிநமக்கு எழுக என்னாய்"*[16]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

நெடுஞ்செழியனைப் பாராட்டிப் பாடிய புலவர்களின் பாடல் துணை கொண்டு நெடுஞ்செழியனைப் பற்றி நாம் அறிவதை விட அவனே பாடிய பாடல்களின் துணை கொண்டு அவனைப் பற்றி அறியும் செய்திகள் சிறப்பானவை என்பது உணரத்தக்கது.

## ஒப்புமைப் பகுதிகள்

அரசப் புலவர்கள் பாடிய பாடல்களில் அரிய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. அகம் – புறம் இரண்டிலும் அவர்கள் பாடிய பாடல்கள் வாழ்வியலுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளன. அவர்கள் பாடியுள்ள பாடல் கருத்துக்கள் பல மற்றைய புலவர்கள் பாடிய பாடல் கருத்துக்களோடு ஒப்புமை பெறுகின்றன. அவற்றுள் சில இங்கு எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

### 1. மன்னர் கடமை

மன்னர்கள் பாடிய பாடல்களில் மன்னர்கள் ஆட்சி முறை, செங்கோல் செலுத்த வேண்டிய நடுநிலைமை, குடிகளைப் பாதுகாக்க வேண்டிய கடமை ஆகியவை கூறப்பட்டிருப்பதில் வியப்பில்லை.

தொண்டைமான் இளந்திரையன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆண்ட சங்க காலத்து மன்னன்; சோழர் மரபில் வந்தவன்; புலமை நலம் பெற்றவன்; புலவரைப் போற்றிய புரவலன்; எனவே ஒரு மன்னன் எவ்வாறு நாட்டை ஆளவேண்டுமென்பதை அவன் பாடிய பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது.

மக்களை ஏற்றிச் செல்லும் வண்டி ஒன்றைப் போன்றதுதான் அரசியலும். உருளையையும் பாரையும் கோத்து நன்முறையில் மாடுகளைப் பூட்டி எச்சரிக்கையோடு

---

[15] புறம், 182 : 5–6.
[16] மதுரைக்காஞ்சி, அடி 203–205.

ஓட்டப்படும் வண்டி எவ்வாறு பாதுகாக்கப்பட வேண்டுமோ அத்துணைப் பாதுகாப்பு அரசியலுக்கும் தேவை.

ஆட்சி வண்டியை ஓட்டும் அரசன்! வண்டியை ஓட்டுவோன் போன்றவன் பார வண்டியை ஓட்டுவோன் திறமை பெற்றவனாக இருப்பின் வண்டி மேடு பள்ளங்களில் சாயாமல், குடைகவிழாமல் குறிப்பிட்ட இடத்தைப் பாதுகாவலாகச் சென்றடையும். ஆனால், அவன் வண்டியோட்டும் திறமை இல்லாதவனாயின் வண்டி பள்ளத்தில் வீழ்ந்து மிகுந்த துன்பத்தை உண்டாக்கி விடும்.

அரசாட்சி என்னும் வண்டியைச் செலுத்தும் மன்னனும் வண்டியோட்டியைப் போன்றவன்தான்! ஆட்சிச் சகடத்தை அவன் எச்சரிக்கையாகச் செலுத்த வேண்டும். குடிமக்களிடம் முறையறிந்து திறை வாங்கவேண்டும். காலமறிந்து அவர்களைப் பாதுகாக்கவேண்டும். இல்லாவிடில் ஆட்சி பகைவர் கையில் சிக்கி அல்லல் விளைவித்துவிடும்.

இக்கருத்தை,

*"கால்பார் கோத்து ஞாலத்தியக்கும்*
*காவல் சாகாடு உகைப்போன் மாணின்*
*ஊறுஇன் றாகி யாறுஇனிது படுமே;*
*உய்த்தல் தேற்றானாயின் வைகலும்*
*பகைக் கூழ் அள்ளல் பட்டு*
*மிகப் பல் தீநோய் தலைத்தலைத் தருமே"*[17]

என்ற பாடலில் தொண்டைமான் இளந்திரையன் எடுத்துக் கூறியுள்ளான்.

இவ்வாறே மன்னனின் கடமைகளைப் பல புலவர்கள் இவ்வாறே எடுத்துக் கூறியுள்ளனர். மன்னன் மக்களிடம் வரிவாங்க வேண்டிய முறை பற்றியும், அவர்களைக் காக்க வேண்டிய கடமை பற்றியும் பலப்பல கோணங்களில் அறிவுறுத்தியுள்ளனர்.

உலகில் மக்கள் வாழ்வதற்கு ஆதாரமான நெல்லும் அவர்கள் உயிர் அன்று; நீரும் அத்தகையதன்று. உலகம் மன்னனையே உயிராக உடையது. ஆதலால் 'தான் உயிர்' என்பதை உணர்ந்து ஆவன செய்தல் அரசனது கடமையாகும் என்கின்றார் மோசிகீரனார். இதனை,

*"நெல்லும் உயிரன்றே நீரம்உயிரன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;*
*அதனால், யானுயிர் என்ப தறிகை*
*வேன்மிகுதானை வேந்தற்குக் கடனே!"*[18]

என்ற அவரது பாடல் வலியுறுத்துகின்றது.

---

[17] புறம், 185.
[18] புறம் 186.

பாண்டிய நாட்டுப் பெரும்புலவரான பிசிராந்தையார் மன்னன் குடிமக்களிடம் வரிவாங்கும் முறைக்கு யானைபுக்க புலத்தை உவமை கூறுகின்றார்.

"குறைந்த நிலையில் 'மா' அளவுள்ள நிலமாயினும் அதில் விளைந்த நெல்லை அறுத்து, முறையாக அடித்துப் பதப்படுத்தி சிறிதுசிறிதாக யானைக்கு உணவாகத் தந்தால் அது பல நாட்களுக்கு உணவாக வரும். நூறு மா அளவுள்ள அகன்ற வயலாயினும் அதில் விளைந்த நெல்லை அறுவடை செய்யாமல் யானையே உண்ணும்படி விட்டுவிட்டால் அதன் வாயில்புகும் நெல்லை விட காலில் மிதிபட்டுச் சிதையும் நெல் அதிகமாகும்.". அரசன் குடிமக்களிடம் வரிவாங்குவதும் அதைப் போன்றதுதான் என்கின்றார் பிசிராந்தையார்.

அரசன் முறை அறிந்து மக்களிடம் ஆறிலொரு கடமை திறைப்பொருள் பெற்று ஆட்சியை நடத்தினால் அவ்வாட்சி வளம்பெற்று விளங்கும். வன்கண்மையை மேற்கொண்டு வரிசை அறியாத தன் அரசியல் அலுவலர்களை விடுத்து மக்களைக் கொடுமைப்படுத்தி வரி வாங்குவானாயின் யானைபுக்க புலம் போன்று அவன் ஆட்சி சிதையும் என்பதை,

*"காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே*
*மாநிரை வில்லதும் பன்னாட் காகும்*
*நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குணினே*
*வாய்புகுவ தனினும் கால்பெரிது கெடுக்கும்*
*அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே*
*கோடி யாத்து நாடு பெரிது நந்தும்;*
*மெல்லியன் கிழவனாகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*
*பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்*
*யானை புக்க புலம் போலத்*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே!"*[19]

என்ற அவரது பாடல் அறிவுறுத்துகின்றது.

'மன்னனின் கடமை' என்பது பற்றிய கருத்தில் அரசனும் புலவரும் ஒற்றுமை பெறுதல் அறியத்தக்கது.

## தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

பாண்டிய மன்னர்களில் பெரும்புகழ் பெற்றவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்பதும், அவன் ஒரு அரசப் புலவன் என்பதும் முன்னரே கூறப்பட்டது.

[19] புறம் 184.

ஒரு நாட்டு மன்னனுடைய கடமை குடிகளின் குறைகளைத் தீர்ப்பதே என்பதையும், அறங்கூற வையத்தில் நடுநிலையோடு வழக்கினைக் கேட்டறிந்து குறைதீர்க்க வேண்டுமென்பதையும் அவன் தனது வஞ்சினத்தில் கூறுகிறான்.

*அல்லற்பட்டாற்றாது அழுத கண்ணீர்அன்றே*
*செல்வத்தைத் தேய்க்கும் படை* — *குறள்–555*

என்பதை உணர்ந்து ஆட்சி செய்தான் என்பதை இவன் பாடல் உணர்த்துகிறது.

*"அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய*
*என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது*
*'கொடியன் எம்இறை' எனக்கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக.'*[20]

என்ற அடிகளில் இதனைக் காணலாம்.

இக்கருத்தையே வெள்ளைக்குடி நாகனார் என்ற புலவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம் எடுத்துக் கூறுதல் அறியத்தக்கது.

"அரசே! முரசு முழங்குதானை மூவருள்ளும் 'அரசு' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது உன்னுடைய அரசேயாகும்.

அறக்கடவுளே வந்து பொருந்தி ஆராய்ச்சி செய்வதைப் போன்ற செங்கோல் சிறந்து விளங்கும் நின் ஆட்சியில் நீதியை வேண்டியவர்கள் தாம் விரும்பிய பொழுது மழையைப் பெற்றவரைப் போன்றவராவர்.

கண்ணுக்கு அழகாக விளங்கும் நின் வெண்கொற்றக் குடை வெயிலை மறைப்பதற்காகக் கொண்டதுஅன்று. குடிமக்களை வெம்மை படாமல் மறைப்பதற்கு பிடிக்கப்பட்டதே யாகும். இதனை நீ உணர்ந்து செயல்படவேண்டும் என்று எடுத்துரைத்தார். இதனை,

*"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து*
*முறைவேண்டு பொழுதில் பதன் எளியோர் ஈண்டு*
*உறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே;*
*ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ*
*மாக விசும்பின் நடுவுநின் றாங்கு*
*கண்பொர விளங்கும்நின் விண்பொரு வியன்குடை*
*வெயின்மறைக் கொண்டன் றோவன்றே; வருந்திய*
*குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ!'*[21]

என்ற பாடலடிகளில் காணலாம்.

---

[20] புறம், 72 : 8–12.
[21] புறம், 35 : 14–21.

## தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்

“வாழு; வாழவிடு” என்பதுதான் வாழ்க்கைத் தத்துவம். தான் மட்டும் வாழ்வது வாழ்க்கையின் குறிக்கோள் அன்று.

தானும் வாழவேண்டும்; தன்னால் இயன்ற அளவு பிறர்க்கு உதவி செய்தும் வாழவேண்டும். இதனையே ‘ஒப்புரவு’ என்ற சொல்லால் ஆன்றோர் குறித்தனர். அந்த ஒப்புரவு எல்லோர்க்கும் கிட்டுவதன்று; தன்னலம் கருதாது மன்பதைக்கே உழைக்கும் தியாகிகட்கு மட்டுமே கிட்டக்கூடியது. இது தன்னை விற்றாயினும் கொள்ளத்தக்க பெருமையை உடையது என வள்ளுவர் கூறுவர்.

*“ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்*
*விற்றுக்கோள் தக்கது டைத்து”*[22]

சங்க காலத்தில் வாழ்ந்த பண்ணன், நள்ளி போன்ற வள்ளல்களின் வாழ்க்கை இவ்வகையில் அமைந்திருந்தது.இவர்களைத்

*“தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்”*[23]

எனப் புலவர்கள் போற்றினர்.

சங்க இலக்கியங்களில் முதன்முதலில் அகநானூற்றில் இத்தொடர் காணப்படுகிறது. மாங்குடி கிழார் மகனார் கொற்றங்கொற்றனார் என்ற புலவர் இத்தொடரைக் கையாண்டு, சிறுகுடிகிழான் பண்ணனை,

*“மனைமனைப் படரும் நனைநகு மாலை*
*தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்*
*பண்ணன் சிறுகுடிப் படப்பை”*[24]

என்ற பாடலடிகளில் பாராட்டுகின்றார்.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால் பாராட்டப் பட்டவன் பண்ணன் என்பதையும் அற்றார் அழிபசி தீர்க்கும் பெருவள்ளலாக இவன் வாழ்ந்தான் என்பதையும் புறநானூறு[25] கூறுகின்றது.

மக்கட் பண்பு யாதென விளக்கவந்த அரசப் புலவனான கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருந்தகைமையை அப்பண்பாகச் சுட்டுகின்றான். உலகம் நிலை பெற்று வாழ்வதற்குக் காரணம் ‘பண்பாடு’ நிறைந்த உள்ளத்தை உடைய பெருமக்கள் வாழ்வதுதான் என்பர் வள்ளுவர்.

---

[22] திருக்குறள் 220.
[23] அகம், 54.
[24] அகம், 54 : 12–14.
[25] புறம், 183.

*"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்*
*மண்புக்கு மாய்வது மன்" – குறள் 996*

தனக்கென வாழாப் பண்பு எல்லாவற்றினும் சிறந்த உயிரோட்டமாகத் திகழ்வது. இதனை,

*தமக்கென முயலா நோன்றாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மையானே'*[26]

என்ற இளம்பெருவழுதியின் பாடலடிகள் நெறிப்படுத்துகின்றன.

இவ்வாறு, தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பண்பைப் போற்றும் வகையில் கடலுள் மாய்ந்தஇளம் பெருவழுதியும், மாங்குடிகிழார் மகனார் கொற்றங் கொத்தனாரும் ஒப்புமை பெறுகின்றனர்.

**நட்பின் சிகரம்**

நட்புக்கு விளக்கம் கூறும்போது புதிய இலக்கணம் ஒன்றை வகுத்துக் கூறினார் வள்ளுவர்.

ஒன்று உடனுறைதல் காரணமாக நட்பு உண்டாகலாம். அல்லது நன்முறையில் மனங்கலந்து பழகுதல் காரணமாக நட்பு உண்டாகலாம். இது உலக இயல்பு. உலக நடைமுறைக்கு மாறாக பழகுதலோ, உடனுறைதலோ வேண்டாமல் ஒருவரை ஒருவர் காணாத நிலையிலும் உணர்ச்சி ஒத்திருப்பதால் நட்பு உண்டாகும் எனப் புதுவது புகுத்தினார்.

கோப்பெருஞ் சோழன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை ஆண்டவன். சங்ககால அரசர்களில் புலவனாகத் திகழ்ந்தவன். பொத்தியார், புல்லாற்றூர் எயிற்றியனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் என்னும் புலவர்களால் பாடப்பெற்றவன். பாண்டிய நாட்டுப் புலவரான பிசிராந்தையாரிடம் பெருநட்புப் பூண்டவன்.

இவ்விருவரும் ஒருவரை ஒருவர் காணாமலேயே உயிர் நண்பர்களாக வாழ்ந்தனர் என்பதை வரலாறு கூறுகின்றது. கோப்பெருஞ்சோழனோடு தான் கொண்டிருந்த பெருநட்பை 'அன்னச் சேவல் அன்னச் சேவல்' என்று தொடங்கும் பாடலில் பிசிராந்தையார் புலப்படுத்துகிறார்.

"அன்னச் சேவலே! நீ குமரியம் பெருந்துறையில் அயிரை மீன்களை அயின்று உன் அன்புறு பெடையோடு வடதிசை நோக்கிச் செல்வாயாயின் உறையூரில் வானளாவிய மாடத்தையுடைய என் நண்பன் கோப்பெருஞ்சோழனது அரண்மனையில்

[26] புறம், 182 : 8–9.

தங்கி, உரிமையோடு உள்ளே புகுந்து அவனைக் கண்டு, நான் பிசிராந்தையின் அடியுறை (அடிக்கீழ் வாழ்பவன்) என்று கூறுவாயானால், அவன் மகிழ்ச்சியோடு உன்னை வரவேற்று உன் அன்புறு பேடை அணிய நல்ல பொன்னரி மாலையை அளிப்பான்.'' என்று நட்புரிமையைப் பாடுகின்றது இவர் பாடல்.

*“அன்னச் சேவல்! அன்னச் சேவல்!...*
*குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி*
*வடமலைப் பெயர்குவை யாயின் இடையது*
*சோழநன் னாட்டுப் படினே கோழி*
*உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ*
*வாயில் விடாது கோயில் புக்குஎம்*
*பெருங்கோக்கிள்ளி கேட்க இரும்பிசிர்*
*ஆந்தை அடியுறை எனினே மாண்டநின்*
*இன்புறு பேடை அணியத் தன்*
*அன்புறு நன்கலம்நல்குவன் நினக்கே”* *– புறம் 67*

என்ற பாடலில் சோழனது உயிர் நட்பைப் பாராட்டிப் பாடுகின்றார்.

இதே ஒருமை உணர்வைச் சோழன் பாடிய பாடலிலும் காண முடிகிறது.

பிசிராந்தையோடு தனக்குள்ள உளங்கலந்த நட்பை, “ஆன்றமைந்த அறிவுடைய புலவர்களே! ஐயம் கொள்ளாதீர்கள். பிசிராந்தை எனது இனிய நண்பன்; இகழ்வில்லாதவன், இனிய பண்புகளை உடையவன், பிரிக்க முடியாத நட்புரிமையை உடையவன்.

‘உன்னுடைய பெயர்என்ன ?’ என்று அவனை நோக்கி யாராவது கேட்டால், ‘என் பெயர் கோப்பெருஞ்சோழன்’ என்று கூறுவான். தன் சொந்தப் பெயரைக் கூறாது என் பெயரையே தன் பெயராகக் கூறும் அளவுக்கு நட்புரிமை உடையவன் அவன்'' என்று கூறுகிறான்.

*“ஐயங் கொள்ளன்மின் ஆரறி வாளீர்!*
*இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்*
*புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே;*
*தன்பெயர்கிளக்குங் காலை என்பெயர்*
*பேதைச் சோழன் என்னும் சிறந்த*
*காதல் கிழமையும் உடையன்”*[27]

என்ற அவனது பாடலில் இதனைக் காணலாம். நட்பின் உரிமையைப் பேசுவதில் இருவரும் ஒப்புமை பெறுகின்றனர்.

---

[27] புறம், 216 : 5–10.

## அறநெறி முதற்றே அரசின் கொற்றம்

பண்டைக் கால மன்னர்கள் அறத்தை அடிப்படையாகக் கொண்டே ஆட்சிசெய்து வந்தனர். தமது ஆட்சியில் ஆன்றமைந்தடங்கிய சான்றவர்களைக் கொண்ட அறங்கூரவையம் நிறுவி நடுநிலை தவறாது வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கி வந்தனர். அறநெறி தவறிய மன்னனை அறக்கடவுளே கூற்றாக நின்று அழித்துவிடும் என நம்பினர்.

சிலப்பதிகாரத்தின் மூன்று பாவிகங்களுள் ஒன்று,

*"அல்லவை பிழைத்தார்க்கு அறங்கூற்று ஆவதூஉம்"*

என்பது நினையத்தக்கது. முடியுடை மூவேந்தர்களின் நீதிமன்றத்தில் அறமே தலைசிறந்து நின்றதென்பதை,

*"அறம் துஞ்சு உறந்தை"* – *புறம் 58.*

*"அறங்கெழு நல்லவை உறந்தை"* – *அகம் 93.*

*"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறங்கெட அறியாதாங்கு"* –*நற்றிணை 400.*

*"அறன்இழுக்காது அல்லவை நீக்கிமறன் இழுக்கா*
*மானம் உடைய தரசு"* – *குறள் 384.*

என வரும் பாடல் பகுதிகள் இனிதுணர்த்தும்.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் பெரும்வேந்தன் – பல போர்களைக் கண்டவன், புலவர் பலரை ஆதரித்தவன். அன்பினால் மக்களைத் தழுவி அரசாண்டவன்; அறநிலை தவறாத செங்கோல் வேந்தன்!

சேர சோழ மன்னர்கள் இவனோடு பகைத்துப் போருக்கு வந்தனர். அவர்களை எதிர்த்துப் படையோடு புறப்பட்டான் பூதப்பாண்டியன். அப்போது அவன் கூறிய வஞ்சின மொழி சிறப்பானது.

இம்மன்னர்களைப் போர்க்களத்தில் ஆரமர் அலறத் தாக்கிப் புறமுதுகு காண அடிப்பேன். அவ்வாறு வெல்லேனாயின், எனது அறம் தவறாத நீதிமன்றத்தில் நடுநிலைப் பண்பு இல்லாத ஒருவனை நடுவராக நியமித்து மெலிகோல் செய்தவன் ஆகுக! என்று கூறினான். இவ்வஞ்சினம் இவனது அறம் தவறாத செங்கோல் மாண்பைப் புலப்படுத்துகிறது.

*"ஆரமர் அலறத் தாக்கித் தேரோடு
அவர்ப்புறம்காணே னாயின் சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக;
அறநிலை திரியாஅன்பின்அவையத்து
திறன்இல் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக"*[28]

என்பது அவனது வஞ்சினப் பாடல். இப்பாடலில்

"அரசநெறி அறத்தை அடிப்படையாகக் கொண்டது" என்ற கோட்பாடு அமைந்திருத்தலைக் காணலாம். சங்கப் புலவர் பாடிய பல பாடல்களில் அரசுக்கு அறமே அடிப்படை என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

மதுரை மருதனிள நாகனார் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் பாடுமிடத்து "யானை, குதிரை, தேர், காலாள் என்ற நால்வகைப் படையின் ஆற்றலைப் பெற்று எத்துணை வலிமையைப் பெற்றிருந்தாலும், ஒரு அரசின் வெற்றியானது அதுமேற்கொள்ளும் அறத்தை அடிப்படையாகக் கொண்டதேயாகும்" என்று பாடுகிறார்.

*"வேந்து மேம்பட்ட பூந்தார் மாற!
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும்என
நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"*[29]

என்பது அவர் பாடல்.

"அரசின் வெற்றி அறத்தை அடிப்படையாகக் கொண்டது" என்பதைக் கூறுவதில் இருவரும் ஒற்றுமைப்படுகின்றனர்.

## மக்கட் செல்வம்

வாழ்க்கையில் மனிதன் பெறக்கூடிய செல்வங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது மக்கள் பேறாகிய செல்வந்தான். அவன் பெறவேண்டிய பொருளே மக்கள்தான்.

*"தம்பொருள் என்பதம் மக்கள்"*[30]

என்பர் வள்ளுவர்.

மக்களிலும் அறிவுடைய மக்களைப் பெறுதல் தவத்தின் பயன். அறிவறிந்த மக்களைப் பெறுதலைக் காட்டிலும் ஒருவன் பெறத்தக்க பேறு வேறு எதுவும் இல்லை என்பது வள்ளுவம்.

---

[28] புறம், 71 : 4–9.
[29] புறம், 55 : 6–10.
[30] திருக்குறள், 63 : 1.

*"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த*
*மக்கட் பேறுஅல்ல பிற"*[31]

என்ற குறள் இதனை உணர்த்துகிறது.

பாண்டியன் அறிவுடை நம்பி முதலில் மக்கட்பேறில்லாமல் வருந்தி, பின்னர் நன்மக்களைப் பெற்று இன்புற்றான். அக்குழந்தை இன்பத்தை அவன் பெரிதும் பாராட்டினான். மக்கட்பேறே பெறும்பேறு என்பதையும், மக்களைப் பெறாதோர்க்கு வாழ்க்கையில் பெறவேண்டிய பயன் இல்லை என்பதையும் வலியுறுத்தி ஒரு பாடலாகப் பாடினான். அவன் ஒரு அரசப் புலவனாதலின் அப்பாடல் உலகியல் நடையை உணர்த்திக் கவிநயத்தோடு வெளிப்பட்டது.

*"படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்*
*உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்*
*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லை தாம்வாழும் நாளே"*[32]

என்பது அவனது பிள்ளைக் கனியமுதப் பாடல். மேலும்,

*"பொன்உடைய ரேனும் பொருள்உடைய ரேனும்மற்று*
*என்உடைய ரேனும் உடையரோ ? – இன்னழகில்*
*புக்களையும் தாமரைக்கை பூநாறும் செய்யவாய்*
*மக்களைஇங் கில்லா தவர்"*[33]

என்னும் புகழேந்தியார் பாடலும் நினையத்தக்கது.

இதே கருத்தை வலியுறுத்தி செல்லூர்க் கோசிகன் கண்ணனார் என்ற புலவர் அகநானூற்றில் பாடியுள்ள பாடல் ஒன்று இங்கு நினையத்தக்கது. அப்பாடல் தோழி தலைவிக்குக் கூறுவதாக அமைந்தது. அதன்கண், "பகைவரும் விரும்புகின்ற – குற்றந் தீர்ந்த அழகினை உடைய புதல்வரைப் பெற்ற தலைமை உடையோர் இவ்வுலகத்தே புகழோடும் விளங்கி மறுமை உலக வாழ்வையும் குற்றமின்றி எய்துவர்" என்ற கருத்து இடம்பெறுகிறது.

*"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறுஇன்று எய்துப,*
*செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்*
*பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்*
*வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி"*[34]

---

[31] திருக்குறள், 61.
[32] புறம், 188.
[33] நளவெண்பா, 68.

என்பது அப்பாடல் பகுதி. புதல்வர்ப் பேற்றைப் போற்றும் வகையில் அரசப் புலவனாகிய அறிவுடை நம்பியும், புலவர் செல்லூர்க் கோசிகன் கண்ணனாரும் கருத்தொற்றுமைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## கோவூர்கிழார் x நலங்கிள்ளி

சங்ககாலச் சோணாடு இரு பெரும் பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. பூம்புகாரைத் தலைநகராகக் கொண்டு அமைந்த சோழநாட்டுப் பகுதியை நலங்கிள்ளி என்ற பெருமன்னன் ஆண்டுவந்தான். அவன் தாயாதியான நெடுங்கிள்ளி உறையூரைத் தலைநகராகக் கொண்ட சோழநாட்டை ஆண்டு வந்தான்.

இவ்விருவரில் புலவர் பாடும்பெரும் புகழ்பெற்ற வீரன் நலங்கிள்ளி. கொடைமடம்படுதல் அல்லது படைமடம்படாதவன். இவனிடம் தொடர்பு பூண்டு நட்புரிமையோடு பழகியவர் கோவூர்கிழார்.

நலங்கிள்ளியின் கொற்றத்தையும் நெடுங்கிள்ளியோடு அவன் நிகழ்த்திய போரையும் பற்றிக் கோவூர்கிழார் சிறப்பாகப் பாடியுள்ளார். இதனை,

*சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்*
*அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல*
*இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை*
*உருகெழு மதியின் நிவந்து சேண்விளங்க*
*நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்*
*பாசறை யல்லது நீ ஒல்லாயே; . . .*
*வெண்டலைப் புணரியின் மான்குளம் பலைப்ப*
*வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து*
*நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்*
*துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே'*[35]

என்ற பாடலில் காணலாம். இவனை ஆலத்தூர் கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கோவூர்கிழார் என்ற முப்பெரும் புலவர்கள் பாடியுள்ளனர்.

கோவூர் கிழார், "சேர பாண்டிய மன்னர்களின் இரு வெண்கொற்றக் குடைகளும் பின்னே நிற்கத் தன் குடை மட்டும் உயர்ந்து முன்னே விளங்க வேண்டும் என்ற ஆர்வமுடையவன் நலங்கிள்ளி.

பகைவரைத் தாக்கிப் போர் செய்தலை விரும்புபவன்; பாசறைக்கண் தங்கியிருப்பவன்; மனையினுள் மாழ்கியிருத்தலை விரும்பாதவன். அவன் படையைச் சேர்ந்த யானைகள் பகைவர் மதில்களைத் தாக்கி அழித்தலை விரும்புவதல்லது அமைதியை விரும்பான். அவன் படை மறவர், போர் என்றவுடன் தயங்காமல்

---

[34] அகம், 66 : 1–6.
[35] புறம், 31.

பூரித்தெழும் வீரம் உடையவர். இதனால் நலங்கிள்ளி எப்போது படை எடுத்து வருவானோ என்றஞ்சி வடநாட்டரசர்கள் கண் உறங்க மாட்டார்கள்.

சேரர்க்குரிய வஞ்சியையும், பாண்டியர்க்குரிய மதுரையையும் கைப்பற்றிப் பாணர்கட்குப் பரிசளிக்கும் பேராற்றலை உடையவன்" எனப் பாராட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## நலங்கிள்ளியின் வஞ்சின மொழிகள்

நலங்கிள்ளியின் தாயாதியான நெடுங்கிள்ளி அவனைப் பகைத்து அடிக்கடி தொந்தரவு கொடுத்து வந்தான். ஆனால், அவன் நலங்கிள்ளியைப் போன்ற பெருவீரம் உடையவனல்லன். எனவே அவனது போர்முறை நேரிடையான தாக்குதலாக இல்லாமல் மறைமுகமான சிறுசிறு போர்களை நிகழ்த்தும் முறையில் அமைந்திருந்தது. இது நலங்கிள்ளிக்கு பெரும் சினத்தை உண்டாக்கிற்று.

ஒருமுறை தன் சிறு படையுடன் நெடுங்கிள்ளி நலங்கிள்ளியைத் தாக்குதற்கு முனைந்தான். அப்போது நலங்கிள்ளி பின்வரும் வஞ்சின மொழிகளைக் கூறினான்.

"என் அரசைப் பெற வேண்டி என்மீது படையெடுத்து வந்துள்ள என் பகைவன் மெல்ல வந்து, என் நல்லடிகளை வணங்கி, 'எனக்கு உன் அரசைத் தருக' என்று இரந்து வேண்டுவானாயின் இவ்வரசை மட்டுமல்ல, எனது உயிரை வேண்டினாலும் நான் தருவேன். அதைவிடுத்து என்மீது படையெடுத்து வந்துள்ள பகைவன் 'தூங்கும் புலியைக் காலால் இடறிய குருடனை'ப் போன்று இனி இவ்விடம் விட்டு உயிர்பிழைத்துச் செல்லல் அரிது. அத்தீயவன் யானையின் காலில் சிக்கி மிதியுண்ட மூங்கில் முளையைப் போல என்னால் அழிக்கப்படுவான். அவ்வாறு அவன் அழியுமாறு யான் பொரேனாயின் உண்மையான அன்பில்லாத கொடிய உள்ளத்யைுடைய பரத்தையர் மார்பிடை முயங்கி என்தார் குழைவதாகுக" என்பது அவன் கூறிய வஞ்சினம். வஞ்சினம் கூறியபடியே அவன் நெடுங்கிள்ளியைப் போரில் புறமுதுகிட்டு ஓட அடித்துத் துரத்தினான். அஞ்சி ஓடிய நெடுங்கிள்ளி உறையூர் கோட்டைக்குள் புகுந்து மதில் கதவுகளை அடைத்துக் கொண்டு பதுங்கினான். ஆவூரில் நடந்த போர் அவனுக்குப் பெரும் அழிவாக முடிந்தது.

## உறையூர் முற்றுகை

ஆவூரினின்றும் புறமுதுகிட்டோடி உறையூர் புகுந்து கோட்டைக்குள் பதுங்கியவனை இனி விட்டு வைப்பது தவறு, அவனைக் கைப்பற்றி அழித்து விடுவதே நல்லது என்று எண்ணிய நலங்கிள்ளி உறையூரைப் பெரும்படையுடன் முற்றுகையிட்டான். அதுகண்ட நெடுங்கிள்ளி தான்வெளியே வந்து போரிட்டால் அழிக்கப்படுவோம் என்பதை உணர்ந்து கோட்டைக்குள்ளேயே தங்கியிருந்தான்.

இதனால் நகர மக்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். இச்செய்தி நாடெங்கும் பரவியது. பெரும்புலவராகிய கோவூர்கிழார் இதனைக் கேள்வியுற்று உறையூர் சென்றடைந்தார். அரண்மனையை அடைந்து காரியாற்றுத் துஞ்சிய கிள்ளிவளவன் எனப் போற்றப் பெற்ற நெடுங்கிள்ளியைக் கண்டார். பின்வரும் அறிவுரையைக் கூறினார். நாடு அடைந்துள்ள அவதியையும், அபாயநிலையையும் அவன் மனத்தில் படுமாறு எடுத்துரைத்தார்.

"வலிமை மிக்க குதிரையை உடைய அரசே! உனது செய்கையால் நகரம் அடைந்துள்ள அவலநிலையை எண்ணிப்பார்!

உனது யானைகள் தடாகத்தில் சென்று படிந்து உடலைக் கழுவாமலும், நெய்யுணவாகிய கவளத்தைப் பெறாமலும், கட்டுத்தறியை உழக்கி வருந்தி வருந்தி மண்மேல் புரண்டு கொண்டிருக்கின்றன. அவற்றின் துன்பக் குரல் இடியென ஒலிக்கின்றது.

போதுமான பால் கிடைக்காததால் பச்சிளங்குழந்தைகள் பசியால் அலறுகின்றன. மகளிர் கூந்தலில் அணிவதற்கு மலர்கள் கிடைக்காமல் வறுந்தலையைக் கோதி முடிக்கின்றனர். நீர் இல்லாமையால் வீடுகள் தோறும் மக்கள் எழுப்பும் துன்பக்குரல் எங்கும் எழுந்துள்ளது.

இந்த நிலையை எண்ணிப் பார்க்காமல் நீ மதிலினுள்ளே அடங்கியிருப்பது நாணத்தக்கது. மக்களைக் காப்பது மன்னன் கடமை என்பதை எண்ணிப்பார். அதுவே அரசு நெறி!

நீ அறம் உடையவனானால் 'இது உன்னுடையது' என்று நலங்கிள்ளியிடம் கூறிவிட்டு கோட்டைக் கதவைத் திறந்து விடுவாயாக!

மறத்தை (வீரம்) உடையவனானால் படையோடு வெளிப்பட்டு வந்து அவனோடு போர் புரிக. நீ அறவையும் அல்லாமல், மறவையும் அல்லாமல் மதிலினுள் ஒடுங்கிக் கிடத்தல் நாணத்தக்கது!" என்று இடித்துரைத்தார். இதனை,

*"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா*
*நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅது*
*இருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி*
*நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்து*
*அலமரல் யானை உருமென முழங்கவும்,*
*பாலில் குழவி அலறவும், மகளிர்*
*பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்*
*வினைபுனை நல்லில் இனைகூக் கேட்பவும்*
*இன்னா தம்ம ஈங்கினி திருத்தல்*
*துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்!*

*அறவை யாயின் நினதெனத் திறத்தல்;*
*மறவை யாயின் போரொடு திறத்தல்*
*அறவையும் மறவையும் அல்லை யாகத்*
*திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்*
*நீண்மதில் ஒரு சிறை ஒடுங்குதல்*
*நாணுத் தகவுடைத்து இதுகாணுங் காலே'*[36]

என்னும் பாடல் புலப்படுத்துகின்றது.

கோவூர்க்கிழார் கூறிய சொற்களை நெடுங்கிள்ளி ஏற்றுக் கொண்டான். ஆனால் கோட்டை மதிலைத் திறக்க அஞ்சினான். திறந்து போரிட்டால் நிலை என்னவாகும் என்பது அவனுக்குப் புரிந்திருந்தது. எவ்வளவு கூறினாலும் அவன் மதில் கதவைத் திறக்க மாட்டான் என்பது தெளிவாகப் புரிந்தது. நிலைமையைச் சமாளித்தாக வேண்டும் என்ன செய்யலாம் என்று அவர் சிந்தித்தார்.

சங்க காலத்தில் மன்னர்களிடையே போர் நிகழுங்காலத்து அவற்றைத் தடுக்க சான்றோரும் புலவரும் அறிஞரும் முயன்றனர். சமாதானத்தூது சென்று மன்னர்களுக்கு நல்லுரை கூறிப் போரைத் தவிர்த்தனர். மக்கள் வாழ்வில் இது ஒரு இடர் நீக்கும் கட்டமாக இருந்தது.

மதுரை வேளாசான் என்ற அந்தணப் புலவர் பாடிய பாடலொன்றில் இரு பெருவேந்தரிடையே நிகழவிருந்த பெரும்போர் தவிர்க்கப்பட்ட செய்தி கூறப்படுகிறது.

இரு பெரு மன்னர்கள் போர் புரிவதற்காகத் தங்கள் படைகளை அணிவகுத்து நிறுத்தினர். நாட்டில் போர்ப்பறை முழங்கிற்று. மதிலைக் கைப்பற்றக் கருதி உழிஞை வீரரிடையே ஏணிகளும், மதிலைக் காத்தற் பொருட்டு நொச்சி வீரரிடையே சீப்புகளும் அமைக்கப்பட்டிருந்தன. போர் யானைகள் அணிவகுத்து நின்றன.

அந்நிலையில் சமாதானத் தூதுவனாகச் சென்ற பார்ப்பனன் ஒருவன் அரசனை நேரில் கண்டு போரின் கொடுமைகளை எடுத்துக் கூறினான். போர் நிறுத்தத்தால் அவன் பெறும் நலங்களையும் உளங்கொள்ளுமாறு எடுத்துக் கூறினான். அவனது அறிவுரையைக் கேட்ட மன்னன் போரை நிறுத்தினான். பேரழிவு தவிர்க்கப்பட்டது. இச்செய்தியை,

*"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்*
*உயவல் ஊர்தி பயலைப் பார்ப்பான்*
*எல்லி வந்து நில்லாது புக்குச்*
*சொல்லிய சொல்லோ சிலவே; அதற்கே*
*ஏணியும் சீப்பும் மாற்றி*
*மாண்வினை யானையும் மணிகளைந் தனவே'*[37]

[36] புறம், 44.

என்ற பாடல் தெளிவாகக் கூறுகின்றது.

கோவூர்கிழார் உலகியல் அனுபவம் பெற்றவர். அரசியல் நூல்களைப் பழுதறக் கற்றவர். இந்நேரத்தில் என்ன செய்ய வேண்டும் என்ற செயல் திட்டம் அவர் உள்ளத்தில் உருவாயிற்று.

பெருவீரனும், வெற்றிபெறும் நிலையில் உள்ளவனுமான நலங்கிள்ளியிடம் சென்று சந்து செய்வித்தலே தக்கது என்று துணிந்தார். நேரே அவனிடம் சென்றார். புலவர் உரைகளைப் பொன்போல் மதித்துப் போற்றும் மாண்புடைய நலங்கிள்ளி கோவூர் கிழாரை அன்புடன் வரவேற்றான். அவர் கூறினார்

சோழப் பேரரசே! நீ உன் படையுடன் நெடுங்கிள்ளியோடு போரிட வந்திருக்கிறாய். நீ வெற்றி பெறுவது திண்ணம். ஆயினும்யான் கூறும் நல்லுரைகளைச் சற்று கேள்!

உன்னுடைய பகைவன் பனை மாலையை அணிந்த சேரனுமல்லன்; வேப்ப மாலையைத்தரித்த பாண்டியனும் அல்லன். அவன் அணிந்திருப்பது ஆத்தி மாலை. அதே ஆத்தி மாலையைத்தான் நீயும் அணிந்திருக்கின்றாய். எனவே, நீயும் சோழன்; அவனும் சோழன்; இருவரும் ஒரே குடியைச் சேர்ந்தவர்கள். இருவருள் யார் தோற்பினும்சோழர்குடி தோற்றது என்றுதான் உலகம் கூறும். இந்த வசைமொழி சோழர்குடிக்கு ஏற்படுவதை நீ ஒத்துக் கொள்கிறாயா?

அது மட்டுமன்று. சோழர் குடியில் பிறந்த நீவிர் இருவரும் ஒற்றுமை இன்றிப் பகைமை பூண்டு போரிடுவது மற்ற சேர, பாண்டிய நாட்டு அரசர்கட்கு உடல் பூரிப்பதற்குக் காரணமான மகிழ்ச்சியை உண்டாக்கும்! சிந்தித்துப் பார்! இதனை,

*"இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்;*
*கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;*
*நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே; நின்னொடு*
*பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே;*
*ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே*
*இருவீர்வேறல் இயற்கையும் அன்றே; அதனால்*
*குடிப்பொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்*
*நும்மோ ரன்ன வேந்தர்க்கு*
*மெய்ம்மலி உவகை செய்யும் இவ்விகலே'*[38]

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

இவ்வறிவுரை கேட்ட நலங்கிள்ளி போரைத் தவிர்த்துப் படையுடன் பூம்புகார் திரும்பினான். சோழநாட்டுப் பேரழிவு புலவரால் தவிர்க்கப்பட்டது.

---

[37] புறம், 305.
[38] புறம், 45.

### கிள்ளி வளவனும் கோவூர் கிழாரும்

சங்க காலச் சோழர்களில் பெரும் வீரனாகத் திகழ்ந்தவன் கிள்ளி வளவன். இவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என வரலாற்றில் குறிக்கப்படுகின்றான். இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த நெடுங்கிள்ளியின் மகனாக இருக்கக் கூடும் என்பர் ஆய்வறிஞர்.

சில அறிஞர்கள் கிள்ளி வளவன் புகாரிலிருந்து ஆட்சி செய்வதன் என்றும், நலங்கிள்ளியின் உடன் பிறந்தவன் என்றும் கருதுவர். இக்கருத்து பொருந்துவதன்று. கிள்ளிவளவன் உறையூரிலிருந்து ஆட்சி புரிந்தவன் என்பதற்கு வேண்டிய குறிப்பு புறநானூறு 39–ஆம் செய்யுளில் காணப்படுகிறது.

கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடும்போது,

*"ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறல்*
*தூங்கெயில் எறிந்தநின் ஊங்கணோர் நினைப்பின்*
*அடுதல்நின் புகழும் அன்றே, கெடுவின்று*
*மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறம்நின்று நிலையிற் றாகலின் அதனால்*
*முறைமைநின் புகழும் அன்றே'*[39]

என்று அவனது உறந்தை அறங்கூர வையத்தைச் சுட்டுகிறார். அதனால் இவனது தலைநகர் உறந்தை என்பதுபெறப்படுகின்றது. இவன் பேராண்மை மிக்கவன். தமிழகம் முழுவதிலும் இவனது செங்கோல் தழைத்திருந்தது. சங்க காலச் சோழர்களில் இவன் ஈழத்தையும் வென்றெடுத்தான் என்று தெரிகிறது. இதனை,

*"கச்சி ஒருகால் மிதியா ஒருகாலால்*
*தத்துநீர்த் தண்தஞ்சைதான்மிதியாப் பிற்றையும்*
*ஈழம் ஒருகால் மிதியா வருமே,நம்*
*கோழியர் கோக் கிள்ளி களிறு'*[40]

என்ற முத்தொள்ளாயிரப் பாடலால் அறியலாம்.

இப்பாடலால் இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன் என்பதும், ஈழ நாட்டை வெற்றி கொண்டவன் என்பதும் அறியப்படுகின்றன.

கோழியர்கோ என்பது உறையூர் மக்களுக்குத் தலைவன் என்னும் பொருள் தரும்.

### மலையமான் திருமுடிக்காரி மக்கள்

ஒரு முறை கிள்ளி வளவன் மலையமான் திருமுடிக்காரியின் மீது படையெடுத்துச் சென்றான். அவ்வாறு சென்றமைக்குக் காரணம் காரி, சோழ நாட்டில் கலகம் விளைத்த

---

[39] புறம், 39 : 5–10.
[40] முத்தொள்ளாயிரம், 49.

ஒன்பது மன்னர்களுக்குத் துணையாக இருந்தான் என்பதேயாகும் என்பர் வரலாற்று ஆய்வாளர். கிள்ளி வளவனோடு நடந்த போரில் மலையமான் திருமுடிக்காரி தோற்று ஓடி மறைந்தான். அவனது மக்கள் இளம் சிறார் இருவரைக் கைப்பிடித்து உறையூருக்குக் கொண்டு வந்தான் கிள்ளி வளவன்.

மலையமான் மீதுள்ள தாங்க முடியாத சினம் அவன் மக்கள் மேல் சென்றது. சினம் அறிவை மறைத்தது. இளம் சிறுவர் என்றும் பாராமல் அவர்களைத் தனது பட்டத்து யானையின் காலால் இடறச் செய்து கொலை செய்யும்படி கட்டளையிட்டான். இளம் சிறார்கள் யானையின் முன் நிறுத்தப்பட்டனர்.

இச்செய்தி கோவூர் கிழாருக்கு எட்டியது. அவர் பதறினார். துடிதுடித்து ஓடோடி வந்தார். யானைப் பாகனைச் சற்று பொறுத்திருக்குமாறு கூறிவிட்டு கிள்ளி வளவன் முன் வந்து நின்றார். கிள்ளி வளவனைநோக்கி, "வீரம் மிக்க வேந்தே! நீ மரபால் மிகவும் உயர்ந்தவன். தன்னை அடைக்கலமாகப் புகுந்த புறவு ஒன்றினுக்காகத் தன் உடம்பையே அரிந்து துலாக்கோலில் இட்ட சிபியின் மரபில் வந்தவன். அருள் உள்ளம் கொண்டவன்; புலவர் பலரும் பாடும் புகழ் பெற்றவன்.

இச்சிறுவர்களோ குற்றமற்றவர்கள். புலன் உழுதுண்ணும் சொல்லேர் உழவர்களான புலவர்களின் வறுமைத் துன்பத்தைக் கண்டு வருந்தித் தன்பால் உள்ளதைக் கரவாது தந்து பகுத்துண்ணும் வள்ளல் மலையமானின் மக்கள். அன்றியும் பால் மணம் மாறாத பச்சிளஞ் சிறுவர்கள். தம்மைக் கொல்வதற்கு வந்த யானையைப் பார்த்ததும் முன்பு அழுததை நிறுத்திவிட்டு வேடிக்கை பார்த்து மகிழ்கின்றனர்.

இப்புதிய இடத்தை மருண்டு பார்த்து மயங்குகின்றனர். நீ இவர்களைக் கொல்லத் துணிமாட்டாய் என்று நம்புகிறேன். என்சொற்களை ஆராய்ந்து பார்த்து பிறகு உன் விருப்பம்போல் செய்வாயாக!" என்று கூறினார். மன்னனும் மனம் மாறினான். இதனை,

*"நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்*
*இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;*
*இவரே, புலன் உழுதுண்மார் புன்கண் அஞ்சித்*
*தமது பகுத்துண்ணும் தண்ணிழல் வாழ்நர்;*
*களிறுகண்டு அழூஉம் அழாஅல் மறந்த*
*புன்றலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி*
*விருந்திற் புன்கண் நோவுடையர்*
*கேட்டனை யாயின்நீ வேட்டது செய்ம்மே"*[41]

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

---

[41] புறம், 46.

## முடிவுரை

- சங்க காலப் புலவர்கள் பாடிய பாடல்கள் சமுதாயச் சிந்தனைகள் நிறைந்திருப்பதோடு அரசியல் நீதிகள், மன்னர்களின் மாண்புகள், கடமைகள், போன்றவற்றைச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. அரசப் புலவர்களாக விளங்கியவர்கள் பாடிய பாடல்களும் சங்கப் புலவர்கள் சிலரின் கருத்தோடு ஒப்புமை பெறுகின்றன. சங்ககாலப் புலவர்களும் புரவலர்களும் ஒருவரை ஒருவர் சார்ந்தே இருந்தனர். புலவர்களுக்குத் தமிழரசர்களிடம் நெருங்கிய செல்வாக்கு இருந்தது.
- மன்னர்கள் தம்மை அறியாது தவறு செய்ய முற்பட்டபோதெல்லாம் தமிழ்ப்புலவர்கள் இடித்துரைத்து அவர்களைத் திருத்தினர். சங்கப் புலவர்கள் பெருமையற்ற மன்னர்களைப் பொருள்பெறுவதற்காக வீண்புகழ்ச்சி செய்து பாடுவதில்லை. பிசிராந்தையாரும், கோப்பெருஞ்சோழனும் கொண்டிருந்த நட்பு புதுமையானது. புணர்ச்சியும் பழகுதலும் இல்லாமல் அவர்கள் உயிர்நட்பு பூண்டிருந்தனர்.
- கோவூர் கிழாரின் முயற்சியால் நலங்கிள்ளி – நெடுங்கிள்ளி போர் தவிர்க்கப்பட்டது. உறையூர் முற்றுகையும் அகன்றது. கோவூர் கிழார் நலங்கிள்ளியிடம் சிறைப்பட்டு யானைக்காலால் சிதைய இருந்த மலையமான் மக்களை அறவுரை கூறி விடுவித்தது ஓர் அரிய செயலாக் கருதலாம்.

# இயல் – 5

# அரசப் புலவர்களும் போரும்

## முன்னுரை

சங்க காலம் முடியுடை மூவேந்தரின் ஆட்சியில் இருந்தது. சேரர், சோழர், பாண்டியர் என்னும் மூவேந்தர்களே பெரும்வேந்தர்கள். மற்ற மன்னர்கள் குறுநில மன்னர்கள். அவர்கள் மூவேந்தர்கள் ஆட்சிக்குத் துணை நின்றனர். சங்ககாலத் தமிழகத்தை,

*“வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்”*[1]

எனத் தொல்காப்பியம் கூறுவதால் இதனை அறியலாம்.

சங்க காலம் பொற்காலம் என வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். நாட்டில் கலைகள் செழித்திருந்தன; செல்வம் கொழித்திருந்தது; அமைதி நிலவியிருந்தது; இக்காரணங்களால் சங்க காலம் பொற்காலம் என மதிப்பிடப்பெற்றது.

அமைதி நிலவினும் சிற்சில சமயங்களில் தவிர்க்க முடியாத சூழ்நிலையில் போர் நடைபெற வேண்டியதாயிற்று. பெரும்பான்மை உள்நாட்டுப் போர்கள் தான். சேர, சோழ, பாண்டியர் அடிக்கடி தம்முள் பொருது வந்தனர். அப்போர்களைப் பற்றிப் புறநானூறும் பதிற்றுப்பத்தும் கூறுகின்றன. அவற்றின் துணை கொண்டு அப்போர்களைப் பற்றி இவ்வியல் ஆராய்கின்றது.

## தமிழக அரசியல்

பண்டைக்கால தமிழக அரசியல் பற்றி அறியத் தொல்காப்பியமும் பத்துப்பாட்டும், புறநானூறும் பதிற்றுப்பத்தும் ஓரளவு உதவுகின்றன. இவைதவிர வேறுசில நூல்களில் காணப்படும் செய்திகள் அக்கால அரசியல் பற்றியும் போர்கள் பற்றியும் ஓரளவே அறியத் துணைசெய்கின்றன.

முடியுடை மூவேந்தர்கள் தமிழகத்தைச் சிறப்பாக ஆண்டுவந்தனர். அடையாளப் பூவாக சோழனுக்கு ஆத்தி மாலையும், பாண்டியனுக்கு வேப்ப மாலையும், சேரனுக்குப் பனைமாலையும் உரிமை பெற்றிருந்தன. இதனை,

*“போந்தை வேம்பே ஆர்என வரூஉம்*
*மாபெருந் தானையர்”*[2]

என்ற தொல்காப்பிய நூற்பா குறிக்கின்றது.

---

[1] தொல் – பொருள் – செய்யுளியல். சூ. 78.
[2] தொல் – பொருள் – புறத்திணைஇயல் – சூ.5.

## குறுநில மன்னர்கள்

சங்க காலத்தில் ஆங்காங்கு குறுநில மன்னர்கள் பலர் சிறுசிறு பகுதிகளை ஆண்டுவந்தனர். போர் நிகழும்போது இவர்கள் மூவேந்தர்கட்குத் துணை நின்றனர். மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடும்போது,

*"வீயாத் திருவின் விறல்கெழு தானை*
*மூவருள் ஒருவன் துப்பா கியர்என*
*ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி*
*வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே"*[3]

என்று குறிப்பிடுவதால் இதனை அறியலாம். சங்ககால குறுநில மன்னர்களில் பாரி, காரி, அதியமான், ஆய் அண்டிரன் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். இக்குறுநில மன்னர்கள் மூவேந்தர்களை அடுத்து அவர்களின் படைத்தலைவர்களாகவும் பணியாற்றினர். இவர்கள் தமிழகத்தின் குறுநிலப் பகுதிகளை ஆண்டிருந்த மன்னர்களாகவும் மூவேந்தருக்கு அடுத்த நிலையில் வைத்தெண்ணப் பட்டவர்களாகவும் சிறப்புப் பெற்றிருந்தனர்.

"பெருநிலக் கிழவர்களே சிற்றரசர்கள். முதன்முதலில் மருதநிலத்தில்தான் குறுநில மன்னரும் முடியுடை மூவேந்தரும் தோன்றினர் எனவும், நாளடைவில் முல்லை, குறிஞ்சி, நெய்தல் முதலிய நிலங்களில் நில முதலாளிகளாகிய குறுநில மன்னர்கள் தோன்றினர் எனவும் கூறுவர் சாமி சிதம்பரனார்.[4]

குறுநில மன்னர்களின் ஆட்சிப் பரப்பு குறுகியதெனினும், அவர்கள் வீரம் விரிவானது. கொடைப் பண்பினால் அவர்கள் கடைஎழு வள்ளல்கள் எனப் போற்றவும் பட்டனர்.

"பழங்காலத்தில் தமிழகத்தில் பல்வேறு நிலையில் குறுநில மன்னர்கள் ஆடசி புரிந்தனர். பழனி மலையை ஆட்சி புரிந்தவன் பேகன்; பறம்பு மலைத்தலைவன் பாரி; கோடைமலையை ஆண்டவன் கடிய நெடுவேட்டுவன்; கொல்லி மலையில் வல்வில் ஓரி; முதரைமலையில் குமணன்; பொதிய மலையைத் தன் கோலின் கீழ்க் கொண்டவன் ஆய் அண்டிரன்; இவ்வாறு பல குறுநில மன்னர்கள் தத்தம் பகுதியைத் தம்மடிக்கீழ்ப் படுத்தி ஆண்டு வந்தனர்.

---

[3] புறம், 122 : 4–7.
[4] சாமி சிதம்பரனார்; தொல்காப்பியத் தமிழர், ப.78.

அவ்வப்பொழுது ஏற்படும் போரிலே முடிகெழு வேந்தர்க்கு வேண்டும் போது துணைபுரிந்தனர். இவர்தம் துணையால் மூவேந்தர் ஆட்சி மலர்ந்ததை ஊகிக்க முடியும்."[5] என்பார் கூற்று இங்கு நினையத்தக்கது.

## போர்மிடைந்த அரசியல் வாழ்வு

சங்க காலத்தில் நடந்த ஆட்சிமுறைகள் போர்வாழ்வை மிகுதியும் பெற்றுள்ளன என்பதைப் புறநானூறு போன்ற சங்க நூல்களால் அறிய முடிகிறது. முடியுடை மூவேந்தர்கள் தம்முள் தாமே போரிட்டு வந்தனர். அயல்நாட்டுப் பகைவரோடும் பொருதனர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வடநாடு வரை படை நடத்திச் சென்று பல மன்னர்களை வென்று தமிழ்நாட்டின் எல்லையை இமயம்வரை விரிவுபடுத்தினன். இதனை 'இமயவரம்பன்' என்னும் அவன் பெயர் கொண்டே அறிய முடிகிறது.

## போர் ஆற்றல்

சங்ககால வேந்தர்கள் போராற்றல் உடையவர்களாக விளங்கினர். பத்துப்பாட்டில் சில பாடல்கள் அவர்தம் போராற்றலை விளக்குகின்றன.

*"ஆளி நன்மான் அணங்குடைக் குருளை*
*மீளிமொய்ம்பின் மிகுவலி செருக்கி*
*முலைக்கோள் விடாஅ மாத்திரை நெரேர்எனத்*
*தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு*
*இரும்பனம் போந்தைத் தோடும், வேம்பின*
*அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்*
*ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த*
*இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய*
*வெண்ணித்தாக்கிய வெருவருநோன்தாள்*
*கண்ணார் கண்ணிக் கரிகால்வளவன்.'*[6]

என்ற பொருநராற்றுப் படை அடிகள் கரிகால் வளவனின் போராற்றலைப் புலப்படுத்துவதைக் காணலாம். இவ்வாறே சேரரும், பாண்டியரும் போர்வலி பெற்றிருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்கள் அறிவிக்கின்றன.

## போர்க்களம்

இக்காலத்தில் போர்க்களங்கள் இல்லை. போராட்டக் களங்களே மிகுந்துள்ளன. நாளொரு போராட்டம், பொழுதொரு வேலைநிறுத்தம் என்பது இருபது மற்றும் 21-ம் 21நூற்றாண்டின் சமுதாய வாழ்வின் தளமாக அமைந்துவிட்டன. அக்காலத்தில் வில்லும் வேலும் ஏந்திப் போரிடும் உண்மையான போர்க்களங்கள் பல இருந்துள்ளன.

---

[5] டாக்டர் அரங்க. இராமலிங்கம், அஞ்சல்வழிக் கல்வி பாடம் 23, ப.59.
[6] பொருநராற்றுப்படை, அடி 139 : 148.

வெண்ணிப் போர்க்களம், தலையாலங்கானத்துப் போர்க்களம், பாழிப்பறந்தலை, வாளகப் பறந்தலை, நெய்தலங்கானல், கானப்பேர், கருவூர்ப் போர்க்களம் என்று பலப்பல போர்க்களங்கள் பற்றிச் சங்கநூல்கள் கூறுகின்றன.

ஒரு குடியில்பிறந்தமன்னர்களே தம்முள் போரிட முனைந்து நின்றதும் உண்டு. சேரர், பாண்டிய மன்னர்களில் இத்தகையோரைக் காண முடியவில்லை. சோழப் பெருவேந்தர்களான நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் அரச உரிமைக்காகத் தம்முள் போரிட முனைந்து நின்ற செய்தியைப் புறநானூறு கூறுகின்றது.

எந்த ஊரை மன்னர்கள் வென்றனரோ, அந்த ஊர்ப்பெயரால் அவர்களை அழைக்கும் வழக்கம் ஒரு தனிச்சிறப்பாக மேற்கொள்ளப்பட்டு வந்தது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் பெயர்களை நோக்குக.

## போரில் மான உணர்வு

மானம் என்பது தமிழர் வாழ்வில் இயல்பாகவே அமைந்தது. போர்க்களத்தில் வீரப்போர்புரிந்து புண்பட்ட வீரர்கள் போர் மானத்தைப் பெரிதும் கடைப்பிடித்தனர். மார்பில் படுவது விழுப்புண். அதுபெருஞ்சிறப்பாகப் போற்றப்பட்டது. விழுப்புண் படுவதை வீரச்சின்னமாக மதித்தனர் போர்மறவர்கள்.

*"விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்*
*வைக்கும்தன் நாளை எடுத்து"*[7]

என்ற குறளில் இதனைக் காணலாம்.

முதுகில் பட்ட புண் 'புறப்புண்' என இழிவாகக் கருதப்பட்டது. தமிழ் மறவர்கள் புறப்புண் படுவதற்கு நாணினர். ஏனெனில் அவர்கள் போரில் புறங்காட்டுவதில்லை. மன்னர்கள் புறப்புண்ணுக்கு நாணி உயிர்துறந்த செய்தியைப் புறப்பாடல் ஒன்று கூறுகின்றது.

## வெண்ணிப் போர்

சோழன் கரிகால் பெருவளத்தான் பூம்புகாரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டுவந்த காலம் அது. அவன் மாபெரும் வீரன். சோழ மன்னர்களிலே மிகச்சிறந்த வீரன். பேரரசன் எனப் புலவர்களால் பாராட்டப்பட்டவன். பத்துப் பாட்டில் பட்டினப்பாலையும், பொருநராற்றுப்படையும் கொண்டவன். தன்னை எதிர்த்துக் கொல்ல முயன்ற இருங்கோவேளை அழித்து அரியணை ஏறியவன். சேரரையும் பாண்டியரையும் வெண்ணிப்பறந்தலையில் பொருது வெற்றி பெற்றவன். இதனை,

---

[7] திருக்குறள் 776.

*"வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்*
*கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்"*[8]

எனப் பொருநராற்றுப் படை பாராட்டுவதால் அறியலாம்.

வெண்ணிப் பறந்தலையில் கரிகாலனை எதிர்த்துப் போரிட்டவன் சேரமான் பெருஞ்சேரலாதன். இருவரும் போரிடும்போது கரிகாலன் வீசி எறிந்த வேல் சேரலாதனது மார்பில் ஊடுருவிப் புறத்திலும் துளைத்து நின்றது. பெருஞ்சேரலாதன் முறியடிக்கப்பட்டான். எஞ்சியிருந்த சேர் வீரர்கள் அவனைத் தூக்கிச் சென்றனர்.

சேரமான் உயிர் பிழைத்தான் எனினும் தன்மார்பில் ஊடுருவிய வேல்புறத்திலும் சென்று முதுகிலும் புண்ணை ஏற்படுத்தி இருப்பதால் அதனைக் காண்போர் 'புறப்புண்' என்றே கருதுவர். "இது மிகவும் கேவலமான நிலை. நான் புறப்புண்ணோடு உயிர்வாழ விரும்பவில்லை" என்று கூறிய மானமிக்க அம்மன்னன் வடக்கிருந்து உயிர்நீத்தான்.

இதனை வெள்ளிக் குயத்தியார் என்ற பெண்பாற் புலவர் கண்டார். சேரலாதனது மானம் மிக்க பெருமித வாழ்வு அவர் நெஞ்சை உருக்கியது. அவர் உடனடியாகச் சென்று வெற்றிபெற்ற கரிகாலனைக் கண்டார். கண்டு பின்வரும் கருத்தமைந்த ஒரு பாடலைப் பாடினார்.

"கருங்கடலிடையே பெருங்கலம் செலுத்தி முந்நீர்வென்று வளிதொழிலை ஆட்கொண்ட உரனுடையாளர் வழிவந்த வேந்தே! களி இயல் யானைக் கரிகால் வளவ!

வெண்ணிப் பறந்தலையில் அஞ்சாமல் நின்று போரிட்டுப் பகை மன்னர்களை வென்றாய்! அதனால் உன்னுடைய போராற்றலை வெளிப்படுத்தினாய். ஆயினும், உன்னால் தோற்கடிக்கப்பட்டு மார்பில் பாய்ந்த வேல் முதுகில் ஊடுருவியதால் புறப்புண்ணுக்காக நாணி, வடக்கிருந்து உயிர்விட்டான் சேரலாதன். பலர் பாராட்டும் புகழைப் பெற்றுள்ள அம்மன்னன் நின்னினும் நல்லன்" என்று கூறினார்.

*"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி*
*வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!*
*களிஇயல் யானைக் கரிகால் வளவ!*
*சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற*
*வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே*
*கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப் புகழ் உலகம் எய்திப்*
*புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"*[9]

என்பது அவர் கூறிய பாடல்.

---

[8] பொருநராற்றுப்படை, அடி 147–148.
[9] புறம், 66.

ஒரு மாபெரும் மன்னன்முன் அவனது பகைவன் புகழ்பெற்றவன் என்றும், அவன் அம்மன்னனை விடநல்லன் என்றும் கூற எவ்வளவு துணிச்சல் வேண்டும்! ஆம், அத்தகைய துணிச்சல் சங்ககாலப் புலவர்கட்கு இருந்தது.

### போர்க்களங்கள்

சங்ககால மன்னர்களின் வாழ்வு பெரும்பாலும் போர்க்கள வாழ்வாகவே இருந்தது. முடியுடை மூவேந்தர்கள் ஒற்றுமையாக ஆட்சி செய்ததாக இலக்கியங்கள் கூறவில்லை. தம்முள் மாறுபட்டவர்களாய் அவர்கள் ஒருவருக்கொருவர் அடிக்கடி போரிட்டு வந்தனர். இதனை,

"சங்ககால மக்கள் பலவகைப் போர்களைக் கண்டனர். முடியுடை மூவேந்தர்கள் தம்முள் தாமே போரிட்டது அக்கால வாழ்வில் அவர்தம் ஒருமொழி வைத்து உலகாள எண்ணிய எண்ணத்தை நமக்குக் கூறும்.

அவர்கள் வேண்டும்போது குறுநில மன்னர்கள் பலரையும் தம் வலிமையைப் பெருக்கிக் கொள்ள சேர்த்துக் கொண்டனர். ஒரு குடியில் பிறந்த மன்னர்களும் தம்முள் போரிட முனைந்தனர். கரிகாலன் போன்று தன்னிகரற்று விளங்கிய மன்னர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்பது உண்மையே. எனினும் போர்கள் தமிழகத்தில் பல இடங்களில் நடந்த வண்ணம் இருந்தன. பாழிப்பறந்தலை, வெண்ணிப்பறந்தலை, கருவூர், மதுரை, முசிறி, வானகப் பறந்தலை, நெய்தலங்கானல், கானப்பேர், தலையாலங்கானம் போன்ற ஊர்களில் அவை நடைபெற்றன."[10] என்பார் கூற்றுப் புலப்படுத்தும்.

### போருக்கான காரணங்கள்

சங்ககால ஆடவரிடையே போரூக்கம் இயல்பூக்கமாக (instinct) இருந்து வந்தது. தொண்டைமானுழைத் தூது சென்ற ஔவையார்

*"எறிகோ லஞ்சா அரவின் அன்ன*
*சிறுவன் மள்ளரும் உளரே; அதாஅன்று*
*பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை*
*வளிபொரு தெண்கண் கேட்பின்*
*அதுபோர் என்னும் என்னையும் உளனே"*[11]

என்று கூறிய பாடல் தமிழ் மறவரின் போர் ஊக்கத்தை வெளிப்படுத்தும். இதனால் போரின்றிக் கழிந்த நாட்கள் குறைவென்பதைச் சங்க நூல்கள் புலப்படுத்துகின்றன.

---

[10] டாக்டர் அரங்க. இராமலிங்கம், அஞ்சல்வழிக்கல்வி பாடம் 23, ப.61.
[11] புறம், 89 : 5–9.

நாகரிகம் அத்துணை வளர்ச்சிபெறாத காலத்தில் நாட்டில் இனக்குழுக்களே மிகுந்திருந்தன. மக்கள் வாழ்க்கையில் கால்நடைகளே செல்வமாகக் கருதப்பட்டன. ஒருவரிடமிருந்த கால்நடைச் செல்வத்தைக் கவர்வது மற்றொரு குழுவின் நோக்கமாக இருந்தது. இதுவே அக்காலப் போரின் தொடக்கநிலை என்று கருதலாம். இங்கு,

"நாகரிகம் வளராநிலையில் இனக்குழுக்களாக இருந்த தனித்தனிக் குழுக்கள் தங்களுக்குள் மோதிக் கொண்டன.

அவர்களுடைய முதல்நோக்கம் ஒருவரிடம்/ஒரு குழுவிடம் உள்ள பொருள்களைக் கவர்வது. இந்நிலையில், அக்காலத்தில் கால்நடைகள் செல்வமாகக் கருதப்படவே அவற்றைக் கவர்ந்தனர். இதுதான் போரின் தொடக்கநிலை. வெட்சிப் போருக்கு விதை இதுவே."[12] என்பார் கூற்று நினையத்தக்கது.

இன்றும் ஆப்பிரிக்கப் பழங்குடி மக்களான 'பிளைன் கிரீ' (Plain Kree) என்ற இனத்வரிடம் கால்நடைகளைக் கவர்தலும் மீட்டலும் நடைபெறுவதாக மானிடவியல் அறிஞர் 'கார்ல் சாபிரோ' என்பவர் கூறுகிறார்.[13]

தமிழ் இலக்கணம் கூறுகின்ற வெட்சியும், கரந்தையும் கால்நடை கவர்தலையும், மீட்டலையும் குறிப்பன என்பது கருதத்தக்கது.

இவை போர்க்காரணத்தின் தொடக்க நிலை. அவ்வாறு கவரப்பட்ட அல்லது ஈட்டப்பட்ட செல்வங்களைத் தக்க பாதுகாப்புடன் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே முகிழ்த்தது. தன் பாதுகாப்புக்குத் தேவையான இடத்தை அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியதன் விளைவாக வஞ்சிப்போர் தோன்றியது. இதனை,

"வலிமையுள்ள செல்வத்தை ஈட்டிய பிறகு அதனைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்வு மனிதனிடம் முகிழ்த்தது. தேவையான இடத்திற்கு மேலும் தன் பரப்பை விரிவுபடுத்தும் எண்ணம் அரும்பியது. இது மண் ஆசையை அதிகப்படுத்தியது. தலைவன் தன் கூட்டத்திற்காகவும் போதிய இடமும் வளமும் தரமுனைந்தான். வளமை காரணமாகவும்தேவை கருதியும்போர் எண்ணம் அவனுள் கிளைத்துச் சிறப்பது இயல்பே"[14] என்பார் கூற்று வலியுறுத்தும்.

---

[12] கே. ராதிகா, முனைவர்ப்பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு, சங்க இலக்கியம் காட்டும் குறுநில மன்னர்கள், ப.77.
[13] முயசட ஞயபெைசடிஇ ஆயஉ ஊசரடவரசந யனே ஞடிஉைநவல, யீ.4.
[14] இராம. குருநாதன், புறநானூறு ஒரு புதிய பார்வை, ப.39.

## வாரிசுரிமைப் போர்

ஒரு மன்னன் அயல்நாட்டு மன்னனோடு செய்யும் போர்கள் பற்றி இலக்கியங்கள் விரித்துரைக்கின்றன. அவையன்றி ஒரு அரச குடும்பத்தினுள்ளே அரச உரிமை காரணமாகவும் போர்கள் நிகழ்ந்துள்ளன.

எனவே, போருக்கான காரணங்களில் அரசுரிமையும் ஒன்றாக இருந்து வந்துள்ளது. அரசுரிமை என்பது தந்தை இறந்ததும் மகன் முடிசூடும் உரிமை. தமிழகத்தில் இவ்வகை உரிமைதான் பின்பற்றப்பட்டு வந்தது.

*"மூத்தோர் மூத்தோர் கூற்றம் உய்த்தென*
*பால்தரவந்த பழவிறல் தாயம்"*[15]

என்னும் புறப்பாடல் அடிகள் இதனை உணர்த்தும்.

வாரிசுரிமைப் போர் தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்து வந்ததென்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள்ளன. ஆனால் அரசாட்சியை மன்னனுக்கு அளிக்கும் உரிமை மக்களுக்கு இருந்ததற்கான சான்றுகள் இலக்கியங்களில் இல்லை. வழிவழி வந்த அரச குடும்பத்தின் தந்தை வழி தாயமுறையே பின்பற்றப்பட்டுள்ளது.

இத்தகைய அரசுரிமைப் போரில் கரிகாலன் வேளிர் குலத்தலைவனான இருங்கோவேளின் சூழ்ச்சிகளை எல்லாம் வென்று அரச உரிமையைக் கைப்பற்றினான் என அறிகிறோம்.

*"உருகெழு தாயம் ஊழின் எய்தி"*[16]

என பட்டினப்பாலை இதனைச் சிறப்பிக்கின்றது.

தாயாதிகளான நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் அரசுரிமை காரணமாகவே போரிட்டதைப் புறநானூறு கூறுகின்றது.

கோப்பெருஞ்சோழனின் புதல்வர்கள் ஆட்சி உரிமை தங்களுக்கு அளிக்க வேண்டுமென்று தந்தையோடு போர் செய்ய முனைந்தமை நினையத்தக்கது.

போர் நிகழ்ச்சிகளே சங்க காலத்தில் நிறைந்திருந்தன. போரில்லாத நிலை இல்லை. இது பற்றி வியப்பான செய்தி ஒன்றைப் புறப்பாடல் கூறுகிறது. தமிழ் மறவர்கள் பகைவரோடுபொரது வெற்றி பெறவேண்டும். போர் இல்லாவிட்டால் படைவீரர்கள் தம்முள் பொருதாவது மடியவேண்டும் என்கின்றது புறநானூறு.

---

[15] புறம், 75 : 1–2.
[16] பட்டினப்பாலை, 227.

*"உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்கு*
*ஏவா னாகலின் சாவேம் யாமென*
*நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப"*[17]

என்பது அப்பாடல் பகுதி.

இப்பாடலடிகட்கு, "பறவைகளால் தீ நிமித்தம் அறியப்பட்டால் மன்னன் படைகளை ஏவான்; அவ்வாறு போர் நிகழாத சூழ்நிலையிலும் ஒரே படையைச் சார்ந்த மறவர் தமக்குள் பொருது மடியவேண்டும் என்ற மறப்பண்பு கொண்டு நிற்பர்" எனப் பொருள் கூறி இருப்பது சிந்திக்கத்தக்கது.[18]

தமக்குள் போரிட்டு மடிதல் என்பது அவர்களது மறப்பண்பை உணர்த்த மிகைப்படுத்திக் கூறப்பட்ட செய்தி எனக் கருதலாம்.

## போர் அறம்

அறத்தை உயிர் எனப் போற்றியவர் தமிழர். போர்ச் செயலாகிய மறத்துறையிலும் அவர்கள் அறத்தையே மேற்கொண்டனர் என்பதைச் சங்கநூல்கள் தெரிவிக்கின்றன. தமிழ் மன்னர்கள் உடற்றிய போர்களைப் பற்றிப் புறநானூறும் பதிற்றுப்பத்தும் கூறுகின்றன.அவை அனைத்தையும் நோக்க சங்க காலத்தில் மறம் விளைக்கும் போரிலும்அறம் விளைத்து வந்தனர் தமிழ் வேந்தர்கள் என்பதை அறிய முடிகிறது.

அக்காலத்தில் பார்ப்பனர்கள் சாதுக்களாக இருந்தனர். ஒழுக்கமும் நற்பண்பும் உடையவராக வாழ்ந்தனர். மக்களுக்கு இறையுணர்வை ஊட்டி நல்வழிப்படுத்தும் நயமிகு வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். எனவே, மக்களிடையே அவர்களைப் பற்றிய எண்ணம் தெய்வத்தன்மை பெற்றிருந்தது. பார்ப்பனர்களுக்குத் தீங்கிழைப்பது பெரும்பாவம் என்ற நிலை சமுதாயத்தில் அழுத்தமாக நிலவியது.

அக்காலத்தில் ஒருநாட்டின் மீது படையெடுத்துச் செல்ல விரும்பும் மன்னன் தன்படை எடுப்புப் பற்றி பகைவர் ஊரில் பறை அறைவிப்பான். அப்பறை, "நாங்கள் உங்கள் நாட்டின் மீது படை எடுத்துவர உள்ளோம். எங்கள் அம்புகளையும் வேல்களையும் விரைந்து வீசுவோம். நீங்கள் உங்கள் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளுங்கள். ஆநிரைகளும், ஆக்கள் இயல்பை உடைய பார்ப்பனர்களும், பெண்களும், பிணி உடையவர்களும், பிதரர்களுக்கு நீர்க்கடன் இறுக்கும் பொன் போன்ற புதல்வர்களைப் பெறாதவர்களும் அங்கிருந்து சென்று பாதுகாவலான இடத்தை அடையுங்கள்" என்று முழங்கும்.

---

[17] புறம், 68 : 11–13.
[18] கே. ராதிகா, சங்க இலக்கியம் காட்டும் குறுநில மன்னர்கள், ப.79.

இதனை,

*"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணிஉடை யீரும் பேணித்*
*தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்என*
*அறத்தாறு நுவலும் பூட்கை மறம்"*[19]

என்ற புறப்பாடல் எடுத்துரைக்கின்றது.

பறை முழக்குவதன் கருத்தை உணரமாட்டாத ஆநிரைகளை மன்னன் தனது வீரரை அனுப்பிக் கவர்ந்து வரச்செய்வான். அவ்வீரர்கள் பசுக்களைக் கவர்தலும், பசுக்களுக்குரிய வீரர்கள் அவற்றை மீட்டலும், 'வெட்சித்திணை' எனப்படும்.

போர் புரியுங்கால், 'அறம்' மேற்கொள்ளப்படுவதால் பண்டைத் தமிழகத்தில் நிகழ்ந்த போர்கள்,

*'நல்லமர்' – அகம் 67.*

*'நற்போர்' – முல்லைப் – 19.*

*'வசையில் வெம்போர்' – அகம் 143.*

*'அறத்தின் மண்டிய மறப்போர்' – புறம் 62.*

என இலக்கியங்களில் சுட்டப்பெற்றன.

நற்போர் என்பதற்கு 'அறத்தால் பொருகின்ற போர்' என நச்சினார்க்கினியர் உரை எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது. மற்றும் போர் தொடங்குமுன் முரசறைந்து தெரிவிப்பதை 'அறத்தாறு நுவலம் பூட்கை' எனப் புறநானூறு சிறப்பிப்பதும் நினையத்தக்கது.

## ஒத்த வலிமை உடையாரோடு பொருதல்

போர் செய்யுங்கால் வீரர்கள் ஒருவரோடொருவர் ஒத்த வலிமை உடையாரோடேயே பொருதனர் என்பது குறிப்பிடத்தக்கது.

யானைவீரர் யானை வீரரோடு பொருவரேயன்றிக் குதிரை வீரரோடு பொருவதில்லை. குதிரை மீதிருந்து பொருவோர் காலாட்படை வீரரோடு பொருவதில்லை.

உழிஞைத்திணை இலக்கணம் கூறும் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர்,

---

[19] புறம், 9 : 1–6.

"சிறப்புடை அரசியலாவன, மடிந்த உள்ளத்தோனையும், மகப்பெறாதோனையும், மயிர்குலைந்தோனையும், அடிபிறக்கிட்டோனையும், பெண்பெயரோனையும், படையிழந்தோனையும், ஒத்தபடை எடாதோனையும், பிறவும் இத்தன்மை உடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொருதலும் முதலியனவாம்"[20] என்று குறிப்பிட்டிருத்தல் கருதத்தக்கது.

'போர்' என்ற சொல்லே 'பொரு' என்ற வேர்ச்சொல்லிலிருந்து பிறந்ததுதான்.

பொரு அல்லது பொருவுதல் என்பது ஒத்திருத்தல் என்று பொருள்படும். எனவே, ஒத்த நிலையாரோடு போரிடுதலே போர் அறமாகக் கருதப்பெற்றது.

## புறமுதுகிடுவோருடன் போர் செய்யாமை

போரில் புறமுதுகிட்டு ஓடுவோருடன் போர் செய்யாமை அவர்களைத் தாக்காமை போர் அறமாகக் கருதப்பட்டது.

*"நற்போர் ஓடா வல்வில்"*[21]

என வரும் முல்லைப் பாட்டுத் தொடரையும், அதற்கு "அறத்தால் பொருகின்ற போரில் ஓடாமைக்குக் காரணமான வலியவில்" என நச்சினார்க்கினியர் கூறிய உரையையும் நினைக.

இதனை, 'தழிஞ்சி' என்ற துறையாக அமைத்து,

*"அழிகுநர் புறக்கொடைஅயில்வாள் ஓச்சாக்*
*கழிதறுகண்மை காதலித் துரைத்தன்று"*[22]

என விளக்குவர் ஐயனாரிதனார்.

## படைமடம் படாமை

சங்க நூல்களில் 'கொடைமடம் படுதல்', 'படைமடம் படுதல்' என இரண்டு தொடர்கள் காணப்படுகின்றன. கொடைமடம் என்பது இன்னார் இனியார் என்று பாராமல் எல்லோர்க்கும் அள்ளி வழங்குதல். முல்லைக்குத் தேர் ஈந்த பாரியின் செயலும், மயிலுக்குப் போர்வை தந்த பேகனின் செயலும் கொடைமடம் என குறிக்கப்படும்.

படைமடம் என்பது வீரர் அல்லாதார் மேலும், புறமுதுகிட்டோர் மேலும், புண்பட்டோர் மேலும், மூத்தார் இளையார் மேலும் படைகளை வீசுதல் என்பர் உ.வே.சா.[23]

சங்ககால அரசர்கள் கொடைமடம் படுதல் அல்லது படைமடம் படாதவராக விளங்கினர்.

---

[20] தொல், பொருள், புறத்திணை, சூ.65, நச்சர் உரை.
[21] முல்லைப் பாட்டு, அடி 38–39.
[22] புறப்பொருள்வெண்பாமாலை, 55.
[23] டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் விளக்க உரை, புறம், 42 : 4–6 அடி.

*"கடாஅ யானைக் கழற்கால் பேகன்*
*கொடைமடம் படுதல் அல்லது*
*படைமடம் படாஅன் பிறர்படை மயக்குறினே'*[24]

என்ற பாடல் இதனைக் கூறுகின்றது.

## போர்த்திணைகளும் போரும்

போர்த்திணைகள் ஏழு என்பர் தொல்காப்பியர். அவை:

1. வெட்சித் திணை
2. வஞ்சித் திணை
3. உழிஞைத் திணை
4. தும்பைத் திணை
5. வாகைத் திணை
6. காஞ்சித் திணை
7. பாடாண் திணை

என்பன. இத்திணை இலக்கணம் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்றது.

கி.பி.9–ஆம் நூற்றாண்டில் தோன்றியது எனக் கருதப்படும் புறப்பொருள் வெண்பாமாலை[25] புறத்திணை 12 எனக் கூறுகிறது.

தொல்காப்பியர் கூறிய ஏழு திணைகளுடன் கரந்தைத் திணை, நொச்சித் திணை, பொதுவியல் திணை, கைக்கிளை, பெருந்திணை என்னும் ஐந்தையும் கூட்டி, புறத்திணை பன்னிரண்டு என அந்நூல் வகுத்துரைக்கின்றது.

புற இலக்கணத் துறையில் காலப் போக்கில் ஏற்பட்ட வளர்ச்சி என்றே இதனைக் கருதலாம். இதனை அடியொற்றியே பிற்கால நூல்கள் பேசுகின்றன. இலக்கணம் வகுத்துரைக்கின்றன.

*"வெட்சி நிரைகவர்தல், மீட்டல் கரந்தையாம்*
*வட்கார் மேல்செல்வது வஞ்சியாம் உட்காது*
*எதிர்ஊன்றல் காஞ்சி, எயில்காத்தல் நொச்சி*
*அதுவளைத்த லாகும் உழிஞை அதிரப்*
*பொருவது தும்பை, போர்க்களத்து மிக்கோர்*
*செரு வென்றது வாகை யாம்'*[26]

என்னும் பழம்பாடல் இங்கு நினையத் தகும். இத்திணைகள் தழுவிய சங்ககால மன்னர்களது போர்கள் பின்வருமாறு அறியப்படும்.

---

[24] புறம், 142 : 4–6.
[25] டாக்டர் மு. வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.144.
[26] பழம்பாடல்.

## கால்நடைப் போர்

மன்னர்களிடையே நிகழும் போரின் தொடக்கம் கால்நடைப் போராக அமைந்துள்ளது. இதனை 'வெட்சிப் போர்' என இலக்கண நூல்கள் கூறும்.

ஒரு நாட்டின் மீது படைஎடுக்கும் மன்னன் ஆநிரைகளையும் அத்தனரையும் பெண்டிரையும், பிணியாளரையும், குழந்தைகளையும், குழந்தை பெறாதவர்களையும் அப்புறப்படுத்தல் கருதி பகைவர் நாட்டில் பறை அறைவிப்பான். பறை அறைவதன் கருத்தை அறியமாட்டாத ஆநிரைகளைத் தன் வீரர்களை அனுப்பி ஓட்டிவரச் செய்வான். இவ்வாறு ஆநிரை கவரச் செல்லும் வீரர்கள் வெட்சிப்பூவை அணிந்து செல்வர். இதனால் இத்திணை வெட்சித்திணை எனப்பெயர்பெற்றது. இது களவுத்திணை என்பது குறிப்பிடத்தக்கது.

பகைவரது ஆக்களைக் கவர்ந்து வருதலே வெட்சித்திணை என்பதை,

*"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்*
*ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்"*[27]

என்னும் நூற்பாவால் புலப்படுத்துவர் தொல்காப்பியர்.

வேந்தன் ஆணைப்படிதான் பகைப்புலம் சென்று ஆக்களைக் கவர்ந்து வருவர் என்பது தொல்காப்பியர் தரும்விளக்கம். இது பிற்காலத்தில் வளர்ச்சிபெற்று வேந்தனது கட்டளை பெற்றும், பெறாமல் மறவர்கள் தாமே சென்றும் பசுக்கணத்தைக் கவர்ந்து வருவர் என இலக்கண விதி பெற்றது.

வெட்சி என்பது இருவகைத்து, மன்னுறு தொழிலும் தன்னுறு தொழிலும் என;

*"வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும்*
*சென்று இகன்முனை ஆதந்தன்று"*[28]

என்பது புறப்பொருள் வெண்பாமாலை கூற்று.

முடியுடை வேந்தர்கள் இத்தகைய போரில் ஈடுபட்டதாகச் சான்றில்லை. குறுநில மன்னர்கள் ஈடுபட்டிருக்கக்கூடும். புறப்பாடல் ஒன்று ஆநிரை கவர்ந்துவந்த வெட்சி மறவரைப் பற்றிக் கூறுகின்றது.

வெட்சியார் கவர்ந்து சென்ற பசுக்கணத்தை விரைந்து சென்று போரிட்டு மீட்டு வருபவர் கரந்தை மறவர் எனப் பெயர் பெறுவர். இவர்களைப் பற்றி ஒரு படலம் முழுவதும் விரித்துரைக்கின்றது புறப்பொருள் வெண்பாமாலை.

கரந்தையார் போர்மலைந்துஆநிரை மீட்டலை,

---

[27] தொல், பொருள், புறத்திணை, சூ.2.
[28] புறப்பொருள் வெண்பாமாலை, கொளு 1.

*"வெட்சியாரைக் கண்ணுற்று வளைஇ*
*உட்குவரத் தாக்கி உறழ்செருப் புரிந்தன்று"*[29]

என்ற கொளு புலப்படுத்தும்.

அவ்வாறு வெட்சியாரைத் தாக்கி நிரை மீட்பதற்குச்சென்ற மறவருள் ஒருவனை நோக்கிச் சான்றோர் கூறியதாக,

*"ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது*
*இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த*
*வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்;*
*செல்லல் செல்லல் சிறக்கநின் உள்ளம்*
*முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்*
*தாவுபு தெறிக்கும் ஆன்மேல்*
*புடைஇலங்கு ஒள்வாள் புனைகழ லோயே!"*[30]

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது.

பகைவர் நிரைகளை வெட்சி மறவர் கவர்ந்து சென்றனர். அதனை மீட்பதற்காகக் கரந்தை மறவர் புறப்பட்டனர். அநிரை காட்டகத்தில் வைத்து காவல் புரியப்பட்டிருந்தது. இந்நிலையை அறிந்த சான்றோர் ஒருவர் நிரைமீட்கச் செல்லும் மறவனை நோக்கி, 'காட்டில் மறைந்திருந்து காவல் புரியும் பகைவர்களைக் கண்டு அவர்கள் காவலைக் கட்டழித்த பின் அல்லது ஆநிரைகளை மீட்க முயலக்கூடாது' என அறிவுறுத்தியதாக இப்பாடல் அமைகின்றது.

## வஞ்சிப் போர்

இதனை 'மண் நசைப்போர்' என்று கூறுதலும் பொருந்தும். ஏனெனில் ஒருவனது நாட்டைக் கைப்பற்றும் ஆசையால் நிகழும் போர் இது. பகைவர் நாட்டைக் கைப்பற்ற விரும்பும் மன்னர்கள் வஞ்சி மாலையைச் சூடி படைநடத்திச் செல்லுதல் வஞ்சித்திணை என்பர்.

நாடு கைப்பற்றுதல் காரணமாக இப்போர் நடக்கும் என்பதை,

*"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்*
*அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே"*[31]

என்ற தொல்காப்பிய நூற்பா எடுத்துரைக்கின்றது.

படை எடுத்துச் செல்பவனும் வஞ்சியான்; அவனை எதிர்த்து நிற்பவனும் வஞ்சியான் என்பது தொல்காப்பியர் கருத்து. இதனை,

---

[29] புறப்பொருள் வெண்பாமாலை, கொளு 25.
[30] புறம், 259.
[31] தொல், பொருள், புறத்திணை, சூ.7.

"ஒருவன் மண்நசையால் மேற்சென்றால் அவனும், அம்மண்ணழியாமல் காத்தற்குரியவனும் எதிரே வருதலின் இருவர்க்கும் மண்ணசையால் மேற்சேறல் உளதாகலின் அவ்விருவரும் வஞ்சி வேந்தர் ஆவரென்றுணர்க" என்னும் நச்சர் உரை வலியுறுத்தும்.

பின்னாளில் புறப்பொருள் வெண்பா மாலையை இயற்றிய ஐயனாரிதனார் இதனை ஒப்பவில்லை. தொல்காப்பியர் கருத்திற்கு மாறாகக் காஞ்சித் திணை என்ற ஒன்றை வகுத்துக் கொண்டு படை எடுத்துச் செல்பவன் வஞ்சியான்;அவனை எதிர்த்துப் போரிடுபவன் 'காஞ்சியான்' என இலக்கணம் வகுத்துரைக்கின்றார்.

*"பரந்தெழுதரு படைத்தானை*
*வரம்பு இகவாமைச் சுரங்காத்தன்று"*[32]

என்ற கொளு இதனைப் புலப்படுத்தும்.

*"உட்காது எதிர்ஊன்றல் காஞ்சி"*

என்ற பாடல் கருத்துக்கியைய புறப்பொருள் வெண்பா மாலை அமைந்துள்ளது. தொல்காப்பியர் காஞ்சித்திணையை வஞ்சித்திணைக்கு எதிர்த் திணையாகக் கூறாமல், 'நிலையாமையை உணர்த்தும் வேறு திணையாகக்' கூறுகின்றார்.

## வஞ்சி–மண் நசைப் போர்

சங்க காலத்தில் ஒருவனுடைய நாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் நடைபெற்ற போர்கள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்கது பூதப்பாண்டியனால் சேர, சோழ மன்னர்களை எதிர்த்து 'ஒல்லையூர்' என்ற ஊரில் நடைபெற்ற போர்.

பாண்டியனுக்கு உரிமையாக உடையது ஒல்லையூர். அது பாண்டிய நாட்டில் உள்ளது. எக்காரணம் கொண்டோ அதனைக் கைப்பற்ற வேண்டும் என்று ஆசை கொண்டனர்.

## ஒல்லையூர்

'ஒல்லையூர்' என்று இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு வழங்கிய ஊர் இன்று 'ஒலியமங்கலம்' என்ற பெயரோடு புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. அது பழங்காலத்தில், 'ஒல்லையூர்' என்றும் அதைச் சூழ்ந்துள்ள நாடு, 'ஒல்லையூர் நாடு' எனவும் பெயர்பெற்றிருந்தன.

சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் எல்லையாக ஓடுவது வெள்ளாறு. வெள்ளாற்றின் தென்கரை, 'தொன்கோனாடு' என்று அழைக்கப்பெறும். இத்தென்கோனாட்டின் மேலைப் பகுதியே ஒல்லையூர் நாடு. நல்ல வளம் மிக்கது.

---

[32] புறப்பொருள்வெண்பாமாலை, கொளு 63.

வளமிக்க நாடாகையால் அதைச்சோழர்கள் கைப்பற்றிக்கொண்டனர். மண்ணாசையின் விளைவு இது!

பூதப்பாண்டியன் பாண்டிய நாட்டு அரியணையில் அமர்ந்து பல பகைவர்களை அடக்கி வெற்றி பெற்றான். புலவனாகவும் விளங்கினான். புலவர் பாடும் புகழுடையோனாகவும் திகழ்ந்தான். பெரும் புகழ்பெற்ற அவ்வேந்தனுக்குத் தன் நாட்டின் ஒரு பகுதியை மாற்றரசர்கைப்பற்றி ஆள்வது பொறுக்க முடியாத சினத்தை உண்டாக்கிற்று. அவன் ஒல்லையூரை மீட்பதற்காகப் புறப்பட்டான். ஒல்லையூரை ஆண்ட சோழன், சேர மன்னனையும் துணைசேர்த்துக் கொண்டு பூதப்பாண்டியனை எதிர்த்தான்.

இதுகண்ட பூதப்பாண்டியனது சினம் ஒரு வஞ்சினமாக ஒரு பாடல் வடிவில் வெளிப்பட்டது.

"என்னோடு போரிட வரும் வேந்தரை ஆரமரில் அலறும்படி தாக்கி அவர்கள் தேரைக் கைப்பற்றிக் கொண்டு அவர்களைப் புறமுதுகு காண அடிப்பேன். அவ்வாறு செய்யேனாயின், அமர்த்த கண்களை உடைய என் அன்பு மனைவியை யான் விட்டுப் பிரிவேனாகுக! அறம் நிலைபெற்ற எனது உறையூர் நீதிமன்றத்தில் நடுநிலைப் பண்பு இல்லாத ஒருவனை நீதிபதியாக அமர்த்தி முறையில்லாத தீர்ப்பை வழங்கிக்கொடுங்கோல் செய்தேனாகுக! எனது உயிர் நண்பர்களான மையல் நாட்டின் தலைவன் மாவனும், மன்னெயில் ஆந்தையும், புகழ்மிக்க அந்துவஞ்சாத்தனும், ஆதன்அழிசியும் வெஞ்சின இயக்கனும் ஆகியவர்களை விட்டுப் பிரிவேனாகுக! மன்பதை காக்கும்நன்குடியாகிய பாண்டியர் குடியைத் தவிர்த்து தென்புலத்தை ஆளும் ஆட்சியையும் இழந்து மறுமையில் வேறுபுள் புலம் காக்கும் குடியில் பிறப்பேனாகுக!"

என்னும் கருத்துக்களுடன் அவன் வெஞ்சினம் ஒரு பாடலாக வெளிப்பட்டது. அப்பாடல்,

> *"மடங்கலிற் சினைஇ மடங்கா உள்ளத்து*
> *அடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்து*
> *என்னொடு பொருதும் என்ப, அவரை*
> *ஆரமர் அலறத் தாக்கித் தேரோடு*
> *அவர்ப்புறம் காணே னாயின் சிறந்த*
> *பேரமர் உண்கண் இவளினும் பிரிக!*
> *அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
> *திறனில் ஒருவனை நாட்டிமுறைதிரிந்து*
> *மெலிகோல் செய்தே னாகுக! மலிபுகழ்*
> *வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்*
> *பொய்யா யாணர் மையற் கோமான்*
> *மாவனும் மன்னெயில் ஆந்தையும் உரைசால்*

*அந்துவஞ் சாத்தனும் ஆத னழிசியும்*
*வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்*
*கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த*
*இன்களி மகிழ்நகை இழுக்கி யான்ஒன்றோ*
*மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த*
*தென்புலங் காவலின் ஒரீஇப் பிறர்*
*வன்புலங்காவலின் மாறியான் பிறக்கே'*[33]

என்பது. அப்பாடலாகும். இவன் தன் மனைவிபால் எத்துணைப் பேரன்பு உடையவன் என்பது புலனாகிறது.

"கணவர் இறந்தாராக அவரை இழந்து வாழக் கருதாது, உடனுயிர் துறக்கத் துணிந்து, சான்றோர் பலர் நின்று தடுப்பவும் நில்லாது, அவர்களுக்குக் கற்புடை மனைவியின் கடமை யாது என்பதை அழகிய பா ஒன்றின் வாயிலாக எடுத்துக் கூறி உயிர் துறந்த சிறப்புடைய அம்மையாரைத் தன் அருமை மனைவியாகக் கொண்ட பெருமை உடையவர் நம்பூதப்பாண்டியன்"[34] என்பார் கூற்று இங்கு நினையத்தகும்.

## மதில் (எயில்) போர்

பண்டைக் காலத்தில் நகரைக் காப்பதற்கு அரணாக விளங்கியவை கோட்டைகள். இவற்றை 'அரண்', 'எயில்' என்ற சொற்களால் குறிக்கின்றன இலக்கியங்கள்.

திருவள்ளுவர் காலத்தில் 'அரண்' மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. அரசனுக்கு இன்றியமையாது அமைந்த ஆறு உறுப்புகளுள், 'அரணும்' ஒன்றாக விளங்கியது. நல்ல வலிமை மிக்க அரணைப் பாதுகாவலாகப் பெற்றுள்ள அரசன், 'அரசருள் ஏறு' எனச் சிறப்பிக்கின்றார் வள்ளுவர்.

*"படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்*
*உடையான் அரசருள் ஏறு"*[35]

என்பது அவர் கூற்று.

'அரண்' என்பது பற்றித் திருவள்ளுவர் தனி அதிகாரமே வகுத்து கருத்துக்களைக் கூறுகின்றார். இதன் காரணமாக அக்காலத்தில் 'அரண்' அரசியலில் பெற்றிருந்த சிறப்பு புலனாகும்.

இத்தகைய அரண்கள் தமிழகத்தில் பல நகரங்களில் இருந்தன. மதுரையைச் சுற்றி இருந்து வலிய அரண் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகிறது. உறையூரில் வலிமைமிக்க கோட்டை இருந்ததென்பது புறநானூற்றால் அறியப்படுகிறது. இவ்வாறு சிறப்புற்றிருந்த

---

[33] புறம், 71.
[34] புலவர் கா. கோவிந்தன், காவல பாவலர்கள், ப.98.
[35] திருக்குறள் 381.

எயில்களில் 'கானப்பேர்' என்னும் நகரில் கட்டப்பட்டிருந்த மதிலும் ஒன்று. அது எவராலும் வெல்ல முடியாத பல சிறப்புறுப்புகளை உடையது.

இதன் புறமதில்கள் வானளாவ உயர்ந்திருந்தன. "வான் தோய்வன்ன புரிசை". அதன் உறுப்புகளில் ஒன்றாகிய சூட்டுகள் வானில் மீன் பூத்தது போல் ஒளிர்ந்தன. அதைச் சுற்றியுள்ள அகழி நிலத்தின் அளவைக் கடந்து பாதலம் வரை சூழ்ந்திருந்தது.

"நிலவரை இறந்த குண்டுகண் அகழி" சூரியனது கதிர்கள் புகமுடியாத மரங்கள்செறிந்த காவற்காட்டால் சூழப்பெற்றது கானப்பேரெயில். பகைமன்னர் எவராலும் வெல்வதற்கரிது என்ற புகபெற்றிருந்தது அக்கானப்பேரெயில்.

அது வேங்கைமார்பன் என்ற குறுநில மன்னனுக்கு உரியதாக இருந்தது. கோட்டை வலுவாக உள்ளது என்ற செருக்கினால் அவன் பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியைப் பகைத்தான். அவனது செருக்கை அடக்க உக்கிரப் பெருவதி கானப்பேரெயிலை முற்றுகையிட்டான்.

## உழிஞைத் திணை

போர்த்திணைகளுள் பகைவர் மதிலை முற்றுகை இடுதல் உழிஞை என்பர் தொல்காப்பியர்.

> *"முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்*
> *அனைநெறி மரபிற் றாகும் என்ப"*[36]

என்பது அவர் நூற்பா.

மதிலை முற்றுகையிடுதல் உழிஞை; அம்முற்றுகையை மதிலுள் இருந்து காத்து நிற்றல் நொச்சி என்பது பிற்கால இலக்கணிகள் கொள்கை.

> *"எயில் காத்தல் நொச்சி –*
> *அதுவளைத்த லாகும் உழிஞை"*

என்ற பழம்பாடல் இதனை உணர்த்தும். சங்க காலத்தில் மதிற்போர்கள் மிகுதியாக நடந்தன.

## கானப் பேரெயில் போர்

'கானப்பேர்' என்பது பாண்டிய நாட்டில் உள்ளதோர் ஊர். இப்போது 'காளையார் கோயில்' என வழங்குகிறது. சங்க காலத்தில் இதை ஆண்டவன் வேங்கை மார்பன். பகைவரால் வெல்ல இயலாத வலிமை உடையவனாக இவன் படைபலம் மிக்கு விளங்கினான். அருங்குறும்புடுத்த கானப்பேரெயில் என்னும் கோட்டை இவனுடைய வலிமைக்குத் துணை செய்தது. பகைவர் தாக்கி அழிக்க முடியாதது; வானளாவ

---

[36] தொல், பொருள், புறத்திணை, சூ.10.

உயர்ந்தது; அகலமும் திண்மையும் உடையது. காவற்காடுகளால் சூழப்பெற்றது என்பதனை,

*"நிலவரை இறந்த குண்டுகண் ணகழி*
*வான்றோய் வன்ன புரிசை, விசும்பின்*
*மீன்பூத் தன்ன உருவ ஞாயில்*
*கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை*
*அருங்குறும் புடுத்த கானப் பேரெயில்'*[37]

என ஐயூர் மூலக்கீழார் பாராட்டுவர்.

## உக்கிரப் பெருவழுதி

மதுரையை ஆண்ட பாண்டியருள் கடைச்சங்கத்தை நிர்வகித்துத் தமிழ் வளர்த்தவன் இவன். அகநானூறு தொகுப்பித்தவனும் இவனே. பெரும் வீரனாகிய உக்கிரப் பெருவழுதி சிறந்தவீரனாக விளங்கியதோடன்றித் தமிழ்ப் புலவனாகவும் விளங்கினான். திருக்குறள் அரங்கேறியதும் இவன் அவைக்களத்தில்தான் என்பர்.

பகைவர் அணுகுதற்கரிய கானப்பேரெயிலை உக்கிரப் பெருவழுதியின் காலத்தில் ஆண்டுவந்த வேங்கை மார்பன் ஆணவத்தால் செருக்குற்று, உக்கிரப் பெருவழுதியோடு பகைமை பூண்டான். உக்கிரப் பெருவழுதியின் பெரும்படை கானப்பேரெயிலை வளைத்தது. பெரும்போர் நிகழ்ந்தது. வேங்கை மார்பன் தோல்வியுற்று ஓடிமறைந்தான். இக்காரணத்தால் பெருவழுதி, 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' என்ற சிறப்புப் பெயர் பெற்றான்.

இவனிடம் தோற்றோடிய வேங்கைமார்பன் இரும்பு உண்ட நீரை மீட்டலும் கூடும்; உக்கிரப் பெருவழுதியிடம் சிக்கிய கானப்பேரெயிலை மீட்டல் அரிது என உளம் வருந்திக் கூறினார். இதனை ஐயூர் மூலங்கிழார்,

*"புலவரை இறந்த புகழ்சால் தோன்றல்!...*
*அருங் குறும்புடுத்த கானப் பேரெயில்*
*கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய*
*இரும்பு உண்நீரினும் மீட்டற் கரிதென*
*வேங்கை மார்பன் இரங்க வைகலும்*
*ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்*
*பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே!*
*இகழுநர் இசை யொடு மாயப்*
*புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே'*[38]

எனப் பாராட்டினார்.

---

[37] புறம், 21 : 2–6.
[38] புறம், 21.

## தும்பைப் போர்

உழிஞைத் திணையை அடுத்த போர்த்திணை தும்பைத்திணை. இருபெருவேந்தரின் படைகள் ஒன்றை ஒன்று எதிர்த்து சமவெளியில் போரிடுவது தும்பை. அப்போது இரு திறத்து வீரரும் தும்பைப் பூவை மிலைந்து போரிடுவர்.

*"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்*
*சென்று தலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப"*[39]

என்று இத்திணையைப் புலப்படுத்துவர் தொல்காப்பியர். இதனை,

*"செங்களத்து மறங்கருதிப்*
*பைந்தும்பை தலை மலைந்தன்று"*[40]

எனத் தெளிவுபடுத்துவர் ஐயனாரிதனார்.

இரு திறத்து வேந்தரும் தும்பை சூடுவர் என்பதைத் தொல்காப்பியர் தெளிவாகக் கூறவில்லை. புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர்,

*'பைந்தும்பை தலைமலைந்தன்று'*

எனத் தெளிவாகக் கூறுதல் குறிப்பிடத்தக்கது.

தும்பைப் போரில் தலையாலங்கனாத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன்னோடு எதிர்த்து வந்த ஏழு மன்னர்களை முறியடித்ததும், சோழன் செங்கணான் சேரமான் கணைக்கால் இரும்பொறையோடு நிகழ்த்திய போரும் குறிப்பிடத்தக்கவை.

## தலையாலங்கானப் போர்

தலையாலங்கானப் போர் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கும் தமிழ்நாட்டு மன்னர் எழுவர்க்கும் நடைபெற்றது. இப்பாண்டியனது இயற்பெயர் நெடுஞ்செழியன். இவன் தன்னை எதிர்த்து வந்த சேர, சோழர் உள்ளிட்ட ஏழு மன்னர்களையும் தலையாலங்கானம் என்னுமிடத்தில் எதிர்த்துப் போரிட்டு வென்றமையால், 'தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்' எனச் சிறப்புப் பெயர் பெற்றான். இவன் பெரும் வீரன். பல போர்க்களங்களைக் கண்டவன்.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் போரில் வென்று சிறைப்படுத்தியதும், வேள் எவ்வியின் மிழலைக் கூற்றத்தையும், முதுவேளிர்கட்குரிய முத்தூர்க் கூற்றத்தையும் வென்று கைப்படுத்தியதும் இவன் பெற்ற பெரு வெற்றிகள்.

பாண்டியன் நெடுஞ்செழியன் அரியணை ஏறியபோது வயதில் இளைஞனாக இருந்தான். அதனால் எளிதாகப் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி விடலாம் என்று கருதி,

---

[39] தொல், பொருள், புறத்திணை, சூ.15.
[40] புறப்பொருள் வெண்பாமாலை, கொளு 127.

1. சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

2. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி

3. திதியன்

4. எழினி

5. எருமையூரன்

6. இருங்கோ வேண்மான்

7. பொருநன்

ஆகிய எழுவரும் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வந்தனர். அவர்களைத் தலையாலங்கானம் என்னுமிடத்தில் தன் படைகளோடு தாக்கிப் பெருவெற்றி பெற்றான் நெடுஞ்செழியன். அவன் அரசப் புலவனாதலின் அவர்கள் மேல் இவன்கொண்ட வெஞ்சினம் ஒரு வஞ்சினப் பாடலாக வெளிவந்தது.

"நாமோ யானையும் தேரும் குதிரையும் படையமை மறவரும் உடையோம்; இவனோ இளையன் என்ற பொருளற்ற புல்லிய சொற்களைக் கூறி என் ஆற்றல் அறியாது படையெடுத்து வந்த இவ்வரசர்களைப் போரில் சிதையுமாறு தாக்கி முரசமோடு கைப்பற்றுவேன்.

அவ்வாறு கைப்பற்றேனாயின், என் ஆட்சியில் வாழும் குடிமக்கள், தாங்கள் சென்று தங்குவதற்குரிய நிழலைக் காணாது, கலங்கி நின்று, எம் அரசன் கொடியன் என்று தூற்றும் கொடுங்கோலை உடையேனாகுக! ஓங்கிய சிறப்பினையும், உயர்ந்த கேள்வி ஞானத்தையும் உடைய மாங்குடி மருதன் முதலாகிய புலவர்கள் என்னையும் என் நாட்டையும் பாடாமல் விட்டு நீங்குவாராக! என்பால் வந்து இரப்பவர்கள் துன்பம் அடையும்படி எப்பொருளையும் ஈயமுடியாத வறுமையை யான் அடைவேனாகுக!" என்பது அவன் கூறிய வஞ்சினம். இதனை அகப்படுத்தியுள்ள பாடல்;

*நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்*
*இளையன் இவன்என உளையக் கூறி*
*படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்*
*நெடுநல் யானையும் தேரும் மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்என்று*
*உறுதுப்பு அஞ்சாது உடல்சினம் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமம் சிதையத் தாக்கி, முரசமொடு*
*ஒருங்ககப் படேனாயின் பொருந்திய*
*என்நிழல் வாழ்நர் சென்னிழல் காணாது*
*கொடியன் எம்இறை எனக்கண்ணீர் பரப்பிக்*

*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக!*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவ னாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைக என்நிலவரை!*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயாஇன் மையான் உறவே'*[41]

என்பதாகும்.

நெடுஞ்செழியன் கூறிய வஞ்சினத்தால், அவன் பகைவர் கூறும் பழிச்சொல்லைப் பொறாத தன்மானம் உடையவன் என்பதும், குடிபழி தூற்றும் கொடுங்கோலை உடையனாதற்கு நாணுபவன் என்பதும், புலவர் பாடும் புகழுடையோர் விசும்பில் வலவன் ஏவாவான ஊர்தி ஏறி நண்ணுவர் என்பதை அறிந்து புலவரைப் போற்றும் பேரன்பு உடையவன் என்பதும், இரப்போர்க்கு ஒன்றும் ஈயாமை இழிவு என்பதை உணர்ந்து தன்பால் வந்து இரப்போர்க்கு வரையாது வழங்கும் வள்ளலாக வாழ்ந்தவன் என்பதும் அறியப்படுகின்றன.

## வேந்தர்களும்–மன்னரும் போர்

சங்க காலத்தில் முடியுடை மூவேந்தரும் மன்னர்களும் பொருதநிலை பெரும்பாலும் காணப்படுகிறது. சேரன் பொறையன் – மூவன் என்னும் குறுநில மன்னனைத் தோற்கடித்து, அவனது பற்களைத் தகர்த்துக்கொண்டு வந்து, தொண்டித்துறை முகத்து கோட்டைக் கதவுகளில் பொறித்து வைத்தான்.

இவ்வாறு இழிவுதரும் செயல்களும் அக்காலத்தில் நடைபெற்றன என்றாலும் போர்களால் நாகரிகம் வளர்ந்தது."

"அக்காலத்தில் போர்கள் தவிர்க்க இயலாத நிகழ்வுகள் என்பது மட்டுமல்ல, பரந்து சிதறிக் கிடந்த பல இடங்களைத் தமிழகமாக்கி, தமிழ்ச் சமுதாயத்தை நாகரிக வாசலுக்குக்கொண்டு வந்ததே போர்கள் தாம் என்பதையும் உணர்கிறோம்"[42] என்பார் கூற்று இதனைப் புலப்படுத்தும்.

## குறுநில மன்னர்கள் போர்

சங்க காலத்தில் மக்கள் சமுதாயம் பெரும்பான்மையும் போர் பற்றிய சிந்தனையிலேயே மூழ்கியிருந்தது எனலாம். தங்கள் வாழ்வின் உயர்வுக்கு ஆணிவேராக அமைவது போரே என மக்கள் உள்ளம் எண்ணியிருந்த காலம் அது.

இலக்கியங்களும் இதனையே வலியுறுத்துகின்றன.

---

[41] புறம், 72.
[42] ச. சிவகாமி, சங்கத் தமிழியல், ப.119

*"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்*
*புதுவதன்று உலகத் தியற்கை"*

என்ற அடிகள் தொன்றுதொட்டு மனித சமுதாயம் போரில் வைத்திருந்த நம்பிக்கையைக் காட்டுகிறது.

## அதியமான்–பெருஞ்சேரல் இரும்பொறைபோர்

சங்ககாலக் குறுநில மன்னர்களில் குறிப்பிடத்தக்க அளவு வீரனாகவும் பெரும் வள்ளலாகவும் விளங்கியவன் அதியமான் நெடுமானஞ்சி. இவன் தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். ஔவையாரை ஆதரித்து அவைக் களப்புலவராக ஏற்றவன். இணையற்ற பெருவீரன். இவனது வீரத்தை,

"மறப்புலி உடன்றெழுமாயின் அதன்முன் மான்கணம் நிற்குமோ? வானத்தில் வெங்கதிர் வீசும் ஞாயிறு சினந்தெழுமாயின் அதன் கதிர்களை எதிர்த்து நிற்கும் இருளும் உண்டோ? புனல்கொழித்த மணல் பரக்கவும், கற்கள் பொடிபடவும் நடக்க வல்லபெருமிதப் பகட்டுக்குப் போதற்கரிய துறையும் உண்டோ?

முழந்தாள் அளவு தோய்ந்த எழுமரம் போன்ற வண்கைகளை உடைய மழவர் பெருமகனே! நீ போர்க்களம்புகுந்தால் உன்னை எதிர்த்து நிற்கும் வீரரும் உண்டோ? என்று உவமைகளை அடுக்கிப் பாராட்டுகின்றார் ஔவையார்.

*"மறப்புலி உடலின் மான்கணம் உளவோ?*
*மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய*
*இருளும் உண்டோ ஞாயிறு சினவின்?...*
*அரிமணல் ஞெமிரக்கல்பக நடக்கும்*
*பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ?*
*எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை*
*வழுவில் வண்கை மழவர் பெரும!*
*இருநிலம் மண்கொண்டு சிலைக்கும்*
*பொருநரும் உளரோ நீகளம் புகினே?'*[43]

என்பது அவர்பாடல்.

புலவர்களால் பெரிதும் போற்றப்பட்டவன் அதியமான். அதியமானுக்கு முதல் மகனாகப் பிறந்தவன் பொருட்டெழினி. பொருட்டெழினியும் தன் இளமைக் காலத்தில் பெருவீரனாக விளங்கினான்.

---

[43] புறம், 90 : 3–13

### கடையெழு வள்ளல்களிடையே போர்

மலையமான் திருமுடிக்காரிக்கும் அதியமானுக்கும் எக்காரணம் கொண்டோ பகை ஏற்பட்டது. காரி அதியமானை வெல்லக் கருதிச் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையைத் துணைநிற்குமாறு வேண்டினான்.அவனும் அதற்கு இசைந்தான்.

இருவரும் கூடி முதற்கண் கொல்லிமலையை ஆண்ட வல்வில் ஓரி மீது படையெடுத்தனர். கொல்லிப்பொருநன் ஓரி தன் ஓரிக்குதிரை மீதமர்ந்து போர்க்களம் புகுந்தான்.

ஒள்வாள் மலையன் படையும், வல்வில் ஓரியின் சேனையும் ஒன்றோடொன்று தாக்கிப் போரிட்டன. போர் கடுமையாக நிகழ்ந்தது. குருதி வெள்ளம் போல் பாய்ந்தோடியது. கொல்லிக் கூற்றத்தின் தலைவன் ஓரி தன் உயிரைத் துரும்பென மதித்துக் கடும்போர்புரிந்தான். ஆனால், பகைவரின் வேலொன்று அவன் மார்பில் பாய்ந்து உயிரைக் குடித்தது.

ஓரியின் நாடும் மலையும் அவலமுற்றன. கூத்தரும் பாணரும் நிலைகுலைந்துஅழுதனர். புலவர்கள் ஆறாத்துயருற்றனர். என்செய்வது? கொல்லிக் கூற்றம் பெருஞ்சேரல் இரும்பொறை வசப்பட்டது.

*“முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி*
*செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்*
*ஓரி கொன்று சேரலர்க் கீந்த*
*செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி’*[44]

என வரும் அக்நானூற்று அடிகள் இவ்வரலாற்றுச் செய்தியைக் கூறுகின்றன.நற்றிணை 320–ஆம் பாடலிலும் இவ்வரலாறு குறிக்கப்பட்டுள்ளது.

### அதியனுடன் போர்

ஓரியைக் கொன்று கொல்லி மலையைத் தனக்களித்த காரியின் மனவிருப்பத்தை நிறைவேற்ற பெருஞ்சேரல் இரும்பொறை விரும்பினான். தகடூரை அழிப்பதல்லவோ காரியின் குறிக்கோள். அதைநிறைவேற்ற எண்ணினான் சேரன்.

மலையமான் திருமுடிக்காரியும் சேரனும் தகடூர் மீது படையெடுத்தனர். சேரன் படையும் காரியின் படையும் தகடூரை முற்றுகையிட்டன. இது கண்ட அதியமான் தன் படையுடன் வெளிப்போந்து அவர்களைத் தாக்கினான். சோழனும் பாண்டியனும் அதியமானுக்கு உதவியாகப் பெரும்படை அனுப்பி உதவினர்.

கடும்போர் மூண்டது. தன்னை ஒத்த ஓரியைக் கொன்ற மலையமான் காரியின் வஞ்சம் அதியமான் நெஞ்சத்தைச் சுட்டது. அவன் எரிமலை போலக் கொதித்தான்.

---

[44] அகம், 209 : 12–15.

போர்க்களம் புகுந்து எதிர்த்து வரும் மறவரையும் குதிரைகளையும் இருகூறாகப் பிளந்தான். சிங்கமெனச் சீறி எழுந்து பகைவர் பலரைக் கொன்று வீழ்த்தினான். அதியனது ஆற்றொணாச் சினத்தையும், போராற்றலையும் கண்ட மழவர் வீரர்கள் தாங்களும் உற்சாகம் பெற்று உடன்று போரிட்டனர். இருதிறத்திலும் பேயும் அஞ்சும் பெரும்போர் நிகழ்ந்தது. குருதி வெள்ளம் ஆறு போல் வழிந்தோடியது.

அம்பொடு வேல் பாயும் இடமெல்லாம் தான் அஞ்சாது நின்று போரிட்டான் அதியன். ஆயினும் பகைவீரன் ஒருவன் வீசிஎறிந்த கூர்வேல் ஒன்று அவன் மார்பில் வந்து பாய்ந்து உயிரைக் குடித்தது. அதியமான் வாழ்வு வீரச்சாவோடு முடிவுற்றது.

அதியமான் மாண்டான்; தகடூர் தன்னிலை கலங்கி அழுதது. ஔவையார் மனம்வருந்தி அழுதார். பதிற்றுப் பத்தின் 8–ஆம் பதிகத்தில் இச்செய்தி காணப்படுகிறது.

*“பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு*
*வேளாவிக் கோமான் பதுமன்தேவி ஈன்றமகன்*
*கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்*
*பல்வேல் தானைஅதிக மானொடு*
*இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று*
*முரசும் குடையும் கலனுங் கொண்டு*
*உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டு’*[45]

என்ற பதிகப் பாடலில் இதனைக் காணலாம்.

### பறம்பு மலைப்போர்

குறுநில மன்னர்கள் செய்த போர்களில் குறிப்பிடத்தக்கதும் இலக்கியப் புகழ் பெற்றதும் பறம்புமலைப் போராகும். பறம்புமலை என்பது புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. இப்போது ‘பிரான்மலை’ என வழங்கப்படுகிறது. இப்பறம்பு நாடு முந்நூறு ஊர்களை உடையது.

இதனை ஆண்டவன் வேள் பாரி. இவன் வேளிர் குலத்தில் ‘எவ்வி’ என்பானது குடியில் பிறந்தவன். கடைஎழு வள்ளல்களில் ஒருவன். பறம்பு நாட்டை அடுத்த பாண்டிய நாட்டுத் திருவாதவூரில் பிறந்து சிறந்த புலவராக விளங்கிய கபிலருக்கு இவன் இனிய நண்பன். கபிலர் பறம்பு மலையில் எல்லாவகையான சுகபோகங்களையும் அனுபவித்துக் கொண்டு நீண்ட நாள் தங்கியிருந்தார்.

ஆட்டை அறுத்துச் சமைத்த இறைச்சி உணவு சுவையானது. அதனைத் தன் விருப்பப்படி கபிலர் வேண்டிய அளவு உண்டு மனம் நிறைந்தார். மதியை மயக்கும்

---

[45] பதிற்றுப்பத்து, 8–ஆம் பத்து, பதிகம்.

மதுவகைகள் நிறைந்த குடங்கள் நாள்தொறும் பெருகி வழிந்தன. அவற்றை வேண்டிய அளவு குடித்து மகிழ்ந்தார் கபிலர். இதனை,

*"மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்*
*அட்டான் றானாக் கொழுந்துவை ஊன்சோறும்*
*பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி*
*நட்டனை மன்னோ முன்னே"*[46]

எனத் தனது பறம்புமலை வாழ்க்கை பற்றி அவர் கூறுவதால் அறியலாம். கபிலர் அந்தணர், புலனழுக்கற்ற அந்தணாளன்[47] என மாறோக்கத்து நப்பசலையார் இவரைக் குறிப்பிட்டுள்ள்தால் இதனை அறியலாம்.

அந்தணராயிற்றே, இறைச்சி உணவை உண்பாரா? கள் அருந்துவாரா? என்ற ஐயம் தோன்றலாம். சங்ககாலத்தில் சைவம் – அசைவம் என்ற பேதம் உணவில் இல்லை. அந்தணர்கள் மாமிச உணவு உண்ணுதல் பழக்கத்தில் இருந்தது என அறியப்படுகிறது.

பாரி கடை எழுவள்ளல்களில் ஒருவன். வருநர்க்கு வரையாது வழங்கும் வள்ளல். முடிகெழு மூவேந்தரைவிட அதிக அளவு இவன் இரவலர்கட்கு வழங்கினான் எனக் கபிலர் சுட்டுகின்றார்.

*"நிழல்இல் நீளிடைத் தனிமரம் போல*
*பணை கெழு வேந்தரை இறந்தும்*
*இரவலர்க் கீயும் வள்ளியோன் நாடே"*

என்ற பாடலடிக்களில் இதனைக் காணலாம். இதனால் பாரியின் புகழ் தென்னாடெங்கும் பரவியது. அதுகண்ட சிற்றரசர் மூவர் ஒருங்கு கூடிப் பாரியை அழித்துவிடுவதெனக் கருதிப் பறம்புமலையை முற்றுகையிட்டனர்.

## பறம்புமலை முற்றுகை

மூன்று மன்னர்கள் முற்றுகை இட்டனர் என்பது கபிலர் பாடலால் தெரிய வருகிறது.

*"நளிகொண் முரசின் மூவிரும் முற்றினும்*
*உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே"*[48]

எனவும்

*"கடந்தடு தானை மூவிரும் கூடி*
*உடன்றனி ராயினும் பறம்பு கொளற் கரிதே"*[49]

எனவும் அவர்பாடிய பாடல்கள் இதனைத் தெளிவுறுத்துகின்றன.

---

[46] புறம், 113 : 1–4.
[47] புறம், 126 : 11.
[48] புறம், 109 : 2–3.
[49] புறம், 110 : 1–2.

மூவேந்தர் முற்றினர்என்பதில் எவ்வித தடையும் இல்லை. புறநானூறு 110-ஆம்பாடலுக்குத் திணை துறை எழுதியவர்கள், "மூவேந்தரும் பறம்பு முற்றி இருந்தாரை அவர் பாடியது" என எழுதியுள்ளனர்.

இவர்கள் மூவரும் தமிழ்நாட்டு முடியுடை வேந்தர்களான சேர, சோழ, பாண்டியர் எனத் தோன்றுமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது. இவ்விளக்கம் பொருந்துமா என்பது ஆய்விற்குரியது.

**மூவர் யார் ?**

பாரியின் பறம்புமலையை முற்றுகை இட்டவர்கள் தமிழ்நாட்டு முடியுடை மூவேந்தர் என்பது வரலாற்று முறைக்கோ, மூவேந்தரின் பெருமைக்கோ முரண்பட்டதாக அமைகிறது.

ஒரு குறுநில மன்னனை எதிர்த்துப் போரிட்டு அழிப்பதற்கு ஒரு முடியுடை வேந்தரே போதுமானவராவர். மூவர் தேவையில்லை. பாரி பறம்புமலையை ஆண்டகாலத்தில் சோழ நாட்டை ஆண்டவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.

மாறோக்கத்து நப்பசலையார் கிள்ளிவளவனைப் பாடியுள்ளார். அவரே கபிலரைப் 'புலனழுக்கற்ற அந்தணாளன்' எனக் கபிலரைக் குறித்துப் பாடுகிறார். இவர் கபிலர் காலத்தில் வாழ்ந்தவர் என்பது இதனால் அறியப்படுகிறது.

மாறோக்கத்து நப்பசலையார் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியுள்ளார் (புறம் 37, 39). சங்ககாலச் சோழர்களில் பெரும் வீரனாக விளங்கியவன் கிள்ளிவளவன். ஈழம் வரை இவன் வெற்றிக்கொடி பறந்தது. பல பகையரசர்களை வென்று களங்கொண்ட இம்மன்னன் புலவர் பலர் பாடும் புகழ்பெற்றவன். இந்த மாபெரும் வேந்தன் ஒரு சாதாரண குறுநில மன்னனான பாரியின் சேனைக்கு அஞ்சி அவனை வெல்ல முடியாமல் திணறி சூழ்ச்சியால் வென்றான் என்பது எத்துணை பொருத்தமற்றது என்பது சிந்தித்து உணரத்தக்கது.

இவனைப் பாடிய எந்தப் புலவரும் இவன் பாரியை வென்றான் என்று குறிப்பிடவில்லை என்பதும் கருதத்தக்கது.

பாரியின் காலத்தில் சேரநாட்டை ஆண்டவன் செல்வக் கடுங்கோவாழியாதன். பாரி இறந்ததும் கபிலர் இவன்பாற் சென்று இவனது பண்பையும், வீரத்தையும் பாராட்டிப் பாடியுள்ளார். பதிற்றுப்பத்து ஏழாம் பத்தில் செல்வக் கடுங்கோவின் வீரம், வெற்றி, கொடைப்பண்பு, வாய்மை, கண்ணோட்டம் போன்ற பல பண்புகளையும்சிறப்பித்துப் பாடுகிறார். தன் உயிர் நண்பனான பாரியைச் சேரமான் சூழ்ச்சியால்

கொன்றிருப்பானாயின் இவ்வாறு சென்று மனம் திறந்து பாராட்டியிருக்க முடியுமா ?அன்றியும் அப்பாடல்களில் அவன் பறம்பு மலையை முற்றுகையிட்டதாக எவ்வித குறிப்பும் இல்லை. எனவே, இவற்றை நோக்கும்போது பறம்பை முற்றுகை இட்டவர்கள் பாரியைப் போன்ற குறுநில மன்னர்கள் மூவராக இருக்கவேண்டும் என்பது புலனாகின்றது.

## மகட்பாற் காஞ்சி

மகட்பாற் காஞ்சி என்பது ஒரு புறத்துறை. மன்னர்கள் தம்காலத்தில் சிறப்புற விளங்கிய வேளிர், மழவர் போன்ற மறக்குடி மக்களிடையே பெண்கொள்ள வேண்டித் தூதரை அனுப்பியபோது அம்மறக்குடியினர் பெண்கொடுக்க மறுத்ததைக் கூறுவது. தொல்காப்பியர் இதனை,

*"நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி*
*மகட்பா டஞ்சிய மகட்பாலானும்"*[50]

என்னும் நூற்பாவில் குறிப்பிடுவர். பின்னர்வந்த புறப்பொருள் வெண்பாமாலை, இத்துறையை

*"ஏந்திழையாள் தருகென்னும்*
*வேந்தனொடு வேறுநின்றன்று"*[51]

என விளக்கிக் கூறும். இதனை அடியொற்றிக் கபிலர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் மூன்று காணப்படுகின்றன (புறம் 109, 110, 111). இவை குறிப்பாக யாரையும் சுட்டிப் பாடப்பட்டனவல்ல. பொதுமையில் பாடப்பெற்றவை.

## பறம்பு முற்றுகையின் காரணம்

மூவேந்தர்கள் பறம்புமலையை முற்றுகையிட்டதற்கான காரணம் மகட்கொடை வேண்டியே என்று சிலர் கருதுவர். புறநானூறு 109–ஆம் பாடலுக்கு 'மகள் மறுத்தல்' என்று துறை எழுதப்பட்டுள்ளது. பிற்காலத்தில் துறை வகுத்தோர் செய்த கருத்துப் பிழையால் ஏற்பட்ட தவறே இதற்குக் காரணமாகும்.

மதிலை முற்றுகை இடுவது உழிஞை; உள்ளிருந்து காப்பது நொச்சி. முற்றுகையிட்ட மன்னன் மகள் வேண்ட உள்ளிருப்போன் மறுத்துரைத்ததாக வைத்து நொச்சித்திணைக்குரிய துறையாக இதனை அமைத்தனர் புறப்பொருள் வெண்பாமாலை உடையார்.

இவற்றைக் கருத்தில் கொண்டு மூவேந்தர் மகட்கொடை வேண்டிப் பறம்பை முற்றுகையிட்டனர் என்று கருதுவதோ, 'மகள் மறுத்தல்' என்று துறைக்குறிப்பு

---

[50] தொல், புறத்திணை, சூ.24.
[51] புறப்பொருள் வெண்பாமாலை 84.

எழுதியிருப்பதோ பொருத்தம் உடையனவல்ல. பேராசிரியர் வேங்கடராஜுலு ரெட்டியார் குறிப்பிடுவதாவது,

"மேற்கண்ட புறநானூற்றுப் பாடல்களுக்கு நொச்சித்திணை வகுத்தது சரியே. ஏனெனில் அது முற்றுகைப் போர். ஆயின், மகள் மறுத்தல் துறை வகுத்தது பாரி பற்றிய தவறான வரலாற்றை மனத்துட் கொண்டு எழுதப்பட்டதேயன்றி பாடல் பொருளை நோக்கி எழுதப்பட்டதன்று. இச்செய்தி பாரி வரலாற்றுள்ளும் விள்ளப்பட்டது. ஆயின், இப்பாட்டுகளுக்கு 'மகள் மறுத்தல்' என்ற துறை குறிக்கப்பட்டுள்ளதே எனின் அத்துறை தொல்காப்பியத்தில் இன்மையானும், புறப்பொருட்பாக்களைத் தொகுத்த புலவர் எவரோ அவற்றிற்குத் துறை எழுதியுள்ளாராகையானும் அத்துறை அச்செய்யுளுக்குப் பொருந்துதல் இன்று"[52] என்று கூறுதல் மேற்கருத்தை வலியுறுத்தவல்லது.

மகட்கொடை வேண்டி மூவேந்தர்கள் பறம்பை முற்றுகை இட்டிருப்பாராயின் பாரி மடிந்தபின் அவன் மகளிரைக் கைக்கொண்டிருப்பர். அவ்வாறு செய்யவில்லை. கபிலரே பாரி மகளிரைப் பின்னர் அழைத்துச்சென்று மலையமான் காரியின் புதல்வர்க்கு மணம் புரிவித்தார் என வரலாறு கூறுவதால் மகள் வேண்டி முற்றுகை நடந்தது என்ற காரணம் பொருந்துவதன்று. தம்மை விஞ்சிய கொடை வள்ளலாக விளங்கிப் பாரி புகழ் பெற்றதால் அவன் மீது அழுக்காறு கொண்ட சிற்றரசர்கள் அவன் மீது படையெடுத்து வந்தனர் என ஒருவாறு கருதலாம்.

### பாரி – மூவேந்தர் போர்

இறுதியாக, சிந்திக்க வேண்டிய செய்தி ஒன்று உண்டு. பாரி மூவேந்தர் போர் எவ்வாறு நடைபெற்றது என்பது ஐயம் தோன்றும் சிக்கல். பாரியை மூவேந்தர்கள் போரிட்டுக் கொல்லவில்லை. சூழ்ச்சியால் கொன்றனர் என்பது வழிவழியாகக் கூறப்பட்டு வரும் கதை. இக்கதை ஆராய்வதற்குரியது.

பாரியை மூவேந்தர்கள் சூழ்ச்சியால் கொன்றனர் என்பதற்கு, அகச்சான்றோ, புறச்சான்றோ எவ்வித ஆதாரமுமில்லை. பிற்காலத்தில் உரை எழுதியவர்கள், 'மகள் மறுத்து மொழிதல்' என்பதை இணைத்தது போல் மூவேந்தர் பாரியை வஞ்சித்துக் கொன்றனர் எனக் கருதியிருக்கலாம்.

பாரி, கலைஞர்களைப் போற்றும் பண்மை விளக்கும் வகையில்,

*"ஆடினிர் பாடினிர் செலினே*
*நாடும் குன்றும் ஒருங்கீயும்மே"*[53]

---

[52] வே. வேங்கடராஜுலு ரெட்டியார், கபிலர், ப.16.
[53] புறம், 109 : 17–18.

என்று கபிலர் பாடினார். இதனை உண்மை எனக்கருதிய மூவேந்தர்கள், பாணர், பாடினி வடிவில் ஆடியும் பாடியும் சென்று பாரியை வஞ்சனையால் கொன்றனர் என்று எழுதிவிட்டனர். இக்கருத்து முற்றிலும் தவறானது.

பாரி போர்க்களத்தில் வீரமொடுபொருது மடிந்தான்; அவனைப் போரில் வேந்தர்கள் வென்று பறம்பைக் கைப்பற்றினர் என்பதற்குச் சான்று உண்டு. பாரி மகளிர் மூவேந்தரைப் பற்றிக் கூறும்போது,

*"வென்று எறிமுரசின் வேந்தர் எம்*
*குன்றும் கொண்டார்யாம் எந்தையும் இலமே'*[54]

என்று குறிப்பிடுகின்றார். 'வென்று' என்பதற்குச் சூழ்ச்சியால் கொன்று என்று பொருளாகாது. போரில் வெற்றிபெற்று என்பதுதான் பொருள். மூவேந்தர் போரில் வென்று பாரியை மாய்த்தனர்என்பதே இதனால் அறியப்படுவதாகும்.

## முடிவுரை

- சங்க காலம் சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தர்களின் ஆட்சியில் இருந்தது. இக்காலம் பெரும்பாலும் போர்க்காலமாகவே இருந்து வந்துள்ளது. மூவேந்தரும் ஒற்றுமை இன்றித் தம்முள் அடிக்கடிப் போர் செய்துவந்தனர். குறுநில மன்னர்கள் அவர்களுக்குப் போர்நிகழ்ந்த போதெல்லாம் துணைநின்றனர். முதுகில் புண்படுவதை வீரர்கள் விரும்புவதில்லை. புறப்புண் நாணி உயிர்நீத்த சேரமான் பெருஞ்சேரலாதனைப் பற்றிப் புறநானூறு கூறுகிறது.
- மண்ணாசை காரணமாகவும், பகைமை காரணமாகவும் பண்டைக்காலப் போர்கள் நிகழ்ந்தன. மறத்துறையாகிய போர்த்துறையிலும் தமிழ் மன்னர்கள் அறத்துறை வழுவாமல் பாதுகாத்தனர். தொல்காப்பியர் கூறும் போர்த் திணைகள் ஏழு. இவை பிற்காலத்தில் பன்னிரண்டாக வளர்ச்சி பெற்றன.
- போர்க் காலங்களில் பார்ப்பனர்கள் பாதுகாக்கப்பட்டனர். புறமுதுகிட்டோர், ஒத்த வலிமை இல்லோர், தலைமயிர் குலைந்தோர், படைக்கலம் இழந்தோர், மூத்தோர், இளையோர் இவர்கள் மீது படைகளை வீசுவது தவிர்க்கப்பட்டது.
- பாரியின் பறம்பை முற்றுகை இட்டவர்கள் முடியுடை மூவேந்தரல்லர். அவர்கள் ஆட்சிக்குட்பட்ட குறுநில மன்னர்களேயாவர். பறம்பு முற்றுகை மகட்மறுத்தல் காரணமாக ஏற்பட்டதன்று. பாரி மகளிரை விரும்பி மும்மன்னர்கள் பறம்பை முற்றுகை இடவில்லை; அழுக்காறு காரணமாகவே முற்றுகை இட்டனர் என்று கருத இடமுள்ளது.

---

[54] புறம், 112 : 4–5.

# முடிவுரை

சங்க இலக்கியங்கள் என்று கூறப்படுபவை கடைச்சங்க காலத்தில் தொகுக்கப்பெற்ற எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமாகிய பதினெட்டு நூல்களேயாகும்.

கடைச்சங்க காலம் நிலவியது எது என்பது பற்றி அறிஞரிடையே கருத்து வேற்றுமை உண்டெனினும், கி.மு.250 முதல் கி.பி.300 வரை உள்ள காலமே கடைச்சங்க காலம் என்பது அறிஞர் பலரும் ஒப்ப முடிந்த கருத்தாகும்.

சங்க நூல்களில் அக்காலப் புலவர்கள் பாடிய பாடல்களேயன்றி அரசர்கள் புலமை பெற்றுப் பாடிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அவ்வாறு பாடிய அரசப் புலவர்கள் முப்பதின்மர்.

அரசப் புலவர்கள் பாடிய பாடல்களின் தொகை 119. 'சங்கம்' என்பதே இல்லை என்பர் சில ஆய்வாளர். மூன்று சங்கங்கள் இல்லை என்பார் சிலர். எனினும் பலர் கடைச்சங்கம் இருந்ததென்பதை ஒப்புகின்றனர்.

அரசப் புலவர்களில் சங்க நூல்களில் மிகுதியான பாடல்களைப் பாடியவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ. பாலைக்கவி 35 பாடல்களையும் பாடியவர் இவர்.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் தான் பெருமன்னனாயினும் சிறுகுடிகிழான் பண்ணனைத் தன் உயிர்நண்பனாகக் கொண்டு 'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!' என வாழ்த்திப் பாடியுள்ளான்.

கோப்பெருஞ்சோழன் – புலவர் பிசிராந்தையார் இவர்களின் நட்பு அதிசயமானது. புணர்தலும் பழகுதலும் இல்லாமலே வளர்ந்த நட்பாக அது புனையப்பட்டுள்ளது.

சோழன் நலங்கிள்ளி ஓர் அரசப் புலவன். அவன் பாடிய வஞ்சினப் பாடல் அவனது வீரத்தை மட்டுமன்றி வரம்புகடவாத நல்லொழுக்கத்தையும் எடுத்துரைக்கின்றது.

தமிழ்நாட்டு மன்னர்களேயன்றி, ஆரிய மன்னரும் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன் பாடிய பாடல் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது.

கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி கடைச்சங்கம் வைத்துத் தமிழ் ஆராய்ந்தவன்; அகநானூறு தொகுத்தவன். இவன் வேங்கை மார்பனை வென்று கானப்பேரெயிலைக் கைக்கொண்ட வெற்றி குறிப்பிடத்தக்கது.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் இளையனாக இருந்தபோது ஏழுமன்னர்கள் பாண்டிய நாட்டைக் கைப்பற்றப் படையுடன் வந்தனர்.

அவர்களை வென்று தலையாலங்கானத்தில் புறமுதுகுகண்ட பாண்டியனைத் தமிழ்ப் புலவர்கள் பலர் புகழ்ந்து பாடியுள்ளனர். அப்போது அவன் பாடிய வஞ்சினப்பாடல் அறிஞர் பலரால் பாராட்டப்படுகிறது.

சமம் + தாயம் – சமதாயம் – சமுதாயம் என்றாகியது. தாயம்என்பது உரிமை. எனவே சமுதாயம் என்பது நாட்டில் உள்ள உரிமைகளை மக்கள் அனைவரும் சமமாகப் பெற்றுக் கூடிவாழ்தல் என்றே பொருள்படும்.

சமுதாயத்தில் வாழ்ந்த மக்களின் கடமைகள்,மன்னன் கடமைகள் போன்றவற்றைச் சங்க நூல்கள் எடுத்துரைக்கின்றன.

அரசப்புலவர்கள் தாம் பாடிய பாடல்களில், கல்வி, ஒழுக்கம், பண்பாடு, அன்புரிமை, அறநெறி போன்ற பல சமுதாயச் சிந்தனைகளைக் கூறியுள்ளனர்.

சங்க காலத் தமிழ் மக்கள் வாழ்வில் ஒழுக்கம் பெரும் பங்கு வகித்தது. மன்னர்கள் ஆட்சியில் அறம் நிலைபெற்றிருந்தது.

அரசப் புலவர்கள் பாடிய பாடல்கள் சாதாரணப் புலவர்கள் பாடிய பாடல்களுடன் கருத்தொப்புமை பெறுகின்றன.

சங்க காலப் புலவர்கள் அரசர்களோடு பெருமளவு தொடர்பு பெற்றிருந்தனர். சமயம் நேரும் போதெல்லாம் இடித்துரை கூறி அவர்களை நெறி தவறாமல் நல்வழிப்படுத்தினர்.

போர் நேரும் பொழுது புலவர்கள் குறுக்கிட்டுச் சமாதானம் செய்து வைத்த நிகழ்ச்சிகளும் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் போரிட முனைந்து நின்றபோது கோவூர்கிழார் குறுக்கிட்டுச் சமாதானப்படுத்தியது குறிப்பிடத்தக்கது.

சங்க காலம் பெரும்பாலும் போர்க்காலமாகவே இருந்து வந்துள்ளது. மூவேந்தர்கள் தம்முள் போரிட்ட சூழல்களே அதிகம். இவர்கள் தம்முள் ஒற்றுமை இன்றி அடிக்கடி போரிட்டே வந்துள்ளனர். போர்க்காலங்களில் பார்ப்பனர்கள் பாதுகாக்கப்பட்டனர்.

போர் மறத்துறை அமைந்தது. மறத்துறையான போரிலும் தமிழ் மன்னர்கள் அறத்துறையையே பின்பற்றி வந்தனர். போர்க்களத்தில் சில வரம்பு மரபுகள் பின்பற்றப்பட்டன.

புறமுதுகிட்டோர், தலைமயிர் குலைந்தோர், ஒத்தவலிமை இல்லோர், படைக்கலம் இழந்தோர், மூத்தோர், இளையோர் இவர்கள் மீது படைகளை வீசுவதில்லை என்ற மரபு பின்பற்றப்பட்டது. புறப்புண் படுதலை அவமானமாகக் கருதினர். மார்பில் விழுப்புண்

படுதலை வீரத்தின் சின்னமாகக் கருதினர். தொல்காப்பியர் கூறும் போர்த்துறைகளாகிய புறத்துறைகள் ஏழு. இது பிற்காலத்தில் பன்னிரண்டாக வளர்ச்சி பெற்றது.

பாரியின் பறம்புமலை முற்றுகை பற்றி அறிஞரிடையே கருத்து வேறுபாடு உண்டு. பறம்பை முற்றியவர்கள் முடியுடை மூவேந்தர்கள் என்ற கருத்தே பண்டுதொட்டுக் கூறப்பட்டு வருகிறது.

இக்கருத்திற்குப் போதுமான ஆதாரம் இல்லை. பறம்பை முற்றுகையிட்டவர்கள் மூன்று குறுநில மன்னர்களே என்பது அறிஞர் துணிவு.

பறம்பு முற்றுகை மகட்கொடை காரணமாக நேர்ந்தது. மகள் மறுத்து மொழிதல் காரணமாகப் போர் நிகழ்ந்தது என்ற கருத்தும் இத்தகையதே. புறநானூற்றுப் பாடல்களை நோக்குமிடத்து மகள் மறுத்தல் காரணம் இல்லை என்பதும், அழுக்காறு காரணமாகப் பறம்புப் போர் மூண்டதென்பதும் புலனாகின்றன.

'நோக்கு' என்பது தொல்காப்பியரால் கூறப்பட்ட செய்யுள் உறுப்புகள் இருபத்தாறனுள் ஒன்று. தொல்காப்பியத்தைத் தவிர பிற்கால யாப்பிலக்கண நூல்கள் எதுவும் 'நோக்கு' பற்றிக் கூறவில்லை.

ஒரு சொல் இடைநிலை விளக்காக நின்று செய்யுள் முழுவதும் செல்லுதல் இடைநிலை விளக்கணி எனப்படும். நோக்கு என்ற சொல் இடைநிலை விளக்காக நின்று, எல்லாச் செய்யுள் உறுப்புகளோடும் சேர்ந்து நூல் திறனாய்வு முறைக்குப் பயன்படுகிறது. சங்ககால அரசப்புலவர் பாடல்களிலும் நோக்கு சிறப்பிடம் பெற்றுள்ளது.

திணைநோக்கு, துறைநோக்கு, வண்ணநோக்கு, அணிநோக்கு, கூற்றுநோக்கு போன்ற பல துறை நோக்குகள் சங்கப் பாடல்களில் அமைந்துள்ளன.

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாடல்களில் கூற்றுநோக்கு சிறப்பாகச் சுவைபட அமைந்துள்ளது.

வண்ணம் என்பது பாஅவண்ணம், தாஅவண்ணம் முதலாகப் பலவண்ணங்கள் தொல்காப்பியரால் கூறப்பட்டுள்ளன. அவ்வண்ணங்கள் தழுவிய நோக்கை அரசப்புலவர்களின் பாடல்களில் காணமுடிகிறது.

## பின்னிணைப்பு : I

புலவராக விளங்கிய வேந்தர்கள் தம் பாடல்களில் பயன்படுத்திய சிறப்பான தொடர்கள், உவமைகள், வாழ்வியல் உணர்த்தும் உண்மைகள் முதலியவற்றைப் பின்வருமாறு தொகுக்கலாம்.

### I. அரிய தொடர்கள்

1. "மயக்குறு மக்கள்" – புறம். 188:6
2. "பசிப்பிணி மருத்துவன்" – மேலது. 173:11
3. "புல்லுளைக் குடுமிப் புதல்வர்" – அகம். 176:19
4. "திரிகுபு கூர்நுனை மழுங்கிய எயிறு" – மேலது. 176:24–5
5. "கொடைக்கடனேன்ற கோடா நெஞ்சு" – மேலது. 168:6
6. "இரும்பின் இன்னுயிர் உடையோர்" – மேலது. 185:4
7. "சால்பெதிர் கொண்ட செம்மையோர்" – நற்– 345:7
8. "அறிவுடை யோனாறரசுஞ் செல்லும்" – புறம் : 183:7
9. "புலிபசித் தன்ன மெலிவிலுள்ளத் துரனுடையாளர்" – மேலது 190:10–11
10. "வறிதகத் தெழுந்த வாயன் முறுவல்" – அகம். 5:5
11. "ஓவச் செய்தி" – மேலது. 5:20
12. "வினையே ஆடவர்க்குயிர்" – குறுந். 135:1

### அன்பு

13. "நெஞ்சறை போகிய யறிவி னேற்கே" – குறுந். 26:26
14. "இனியவோ பெரும! தமியோர்க்கு மனையே" – மேலது. 124:4
15. "மனையுறை மகளிர்க் காடவருயிர்" – மேலது–135:2
16. "உரவோ ருரவோராக மடவ மாக மடந்தை நாமே" – மேலது–20:3–4

## அறிவுரை

17. "உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கையிரவினு மிளிவு" – குறுந்–283:1–2

## உவமை

18. "உகிர்நுதி புரட்டு மோசை போலச் செங்காற் பல்லி
தன்றுணை பயிரும்" – குறுந்.16:3–4

19. "வாள்போல் வாய கொழுமடற் றாழை" – மேலது–245:3

20. "துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல" – புறம்: 73:7

21. "கழைதின் யானைக் காலகப் பட்ட வன்றிணி
நீண்முளை போல" – புறம் : 73:9–10

22. "நிதியஞ் சொரிந்த நீவி போலப் பாம்பூன் தேம்பும்
வறங்கூர் கடத்திடை" – அகம். 313:11–2.

23. "ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோற் பாழ்பட்ட முகம்" – கலித்– 5:12–13

## உலகியல் உண்மைகள்

*1. "மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது*
*பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்*
*திருவினும் நிலையில்லாப் பொருள்"* *கலித்– 8 : 12–14*

*2. "கிழவ ரின்னோ ரென்னாது பொருடான்*
*பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்"* *மேலது. 21 : 10–11*

*3. "பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை*
*மலையுளே பிறப்பினு மலைக்க வைதா மென்செய்யும்*
*நினையுங்கா ணும்மக னுமக்குமாங் கனையளே*
*சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை*
*நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யுந்*
*தேருங்கானும் மக ணுமாக்குமாங் களையளே;*
*ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்*
*சூழுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே"* *கலித்–9 : 12–20*

4. *“அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்*
*பிறன்கடைச் செலாஅச் செல்வமு மிரண்டும் பொருளி னாகும்”*

*– அகம். 155: 1–3*

**நம்பிக்கை**

*“பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென*
*மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து தன்*
*கல்லளைப் பள்ளி வதியும்”*

*– நற். 98:5–7*

**சமுதாய வழக்கம்**

1. மூத்தோரிடமிருந்து பரம்பரையாக ஆட்சியுரிமை வருதல்
2. நாணயச் சங்கிலியால் பிணித்தல்
3. பண்டைத் தமிழ் வேந்தர், குழவி இறந்து பிறப்பினும், உறுப்பில்லாப் பிண்டமாய்ப் பிறப்பினும், மூத்து விளியினும் நோயுற்றிறப்பினும் வாளால் பொழ்ந்து அடக்கம் செய்தல்.

## பின்னிணைப்பு – II

# புறநானூற்றில் முக்கியத் தொடர்கள்

1. *"அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயங் கொள்பவரோடு ஒன்றாது
காவல் குழவி கொள்பவரின் ஓம்புமதி"* – *5:5–7*

2. *"பணியியர் அத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே"* – *6:17–8*

3. *"நீரின் றாமையா யக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"* – *18:18–9*

4. *"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்து"* – *27:7–9*

5. *"ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்"* – *34:1–6*

6. *"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகன் ஞாலம்"* – *35:27–29*

7. *"நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"* – *55:9–10*

8. "ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்று இவ்வுலகத் தியற்கை" – 76:1–2

9. "யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருள் அறிவாரா. ஆயினும் தந்தையர்க்கு
அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை" – 92: –3

10. "ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன்" – 101:1–3

11. "வரிசை அறிதலோ அரிதே: பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்!" – 121:3–4

12. "இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன்" – 134:1–2

13. "வாழ்தல் வேண்டிப்
பொய் கூறேன்: மெய் கூறுதல்" – 139:5–6

14. "பீடுஇல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டின்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே" – 148:5–8

15. "திரைபொரு முந்நீர்க் கரைநனிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்
சின்னீர் வினவுவர் மாந்தர். அது போல்
அரசர் உழையர் ஆகவும் புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர்" – 154:1–5

16. "இன்னோர்க்கு என்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே" – 163:5 –7

17. "உண்டா லம்ம இவ்வுலகம் .... ..... ....
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே" – 182:1, 8 –9

18. "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே" – 183:8 –10

19. "எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" – 187:3 –4

20. "மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே" – 188: 6 –7

21. "செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே" – 189: 7 –8

22. "யாதும் ஊரே : யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா" – 192:1 –2

23. "இன்னா தம்மஇவ் வுலகம்
இனிய காண்க இதன் இயல்புணர்ந்த தோரே" – 194: 6 –7

24. "நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்!" – 195: 6 –7

25. "மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்" – 197:15 –16

26. "ஈஎன இரத்தல் இழிந்தன்று: அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று: அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று" – 204:1 –4

27. "யானை வேட்டுவன் யானையும் பெறுமே:
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே" – 214:4 –5

28. "சான்றோர் சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே" – 218:6 –7

## பின்னிணைப்பு – III

# அரசப் புலவர்கள் பாடிய பாடல்கள்

### சேரர்

| | | | |
|---|---|---|---|
| 1. | இளங்குட்டுவன் | – | அகம்–153 |
| 2. | கணைக்கால் இரும்பொறை | – | புறம்–74 |
| 3. | கருவூர்ச் சாத்தன் | – | குறு–268 |
| 4. | கோட்டம் பலத்துஞ்சிய மாக்கோதை | – | அகம்–168 |
| 5. | சேரமா னெந்தை | – | குறு–22 |
| 6. | நம்பிக் குட்டுவன் | – | குறு–109, 243, நற்–145, 236, 345 |
| 7. | பாலைபாடிய பெருங்கடுங்கோ | – | பாலைக்கலி 35 நற்–9, 48, 118, 202, குறு–16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398<br>அகம் – 5, 99, 111, 105, 185, 223, 261, 267, 291, 313, 337, 379<br>புறம் – 282 |
| 8. | மருதம் பாடிய இளங்கடுங்கோ | – | அகம்–96, 176, நற்–50 |
| 9. | முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் | – | அகம்–30 |

### சோழர்

| | | | |
|---|---|---|---|
| 1. | சோழன் குளமுற்றுத் துஞ்சிய கிள்ளிவளவன் | – | புறம்–173 |
| 2. | கோப் பெருஞ் சோழன் | – | புறம்–214, 215, 216, குறுந்–20, 53, 129, 147 |
| 3. | சோழன் நல்லுருத்திரன் | – | புறம்–190 |
| 4. | சோழன் நலங்கிள்ளி | – | புறம்–190, புறம்–73, 75 |
| 5. | மாவளத்தான் | – | குறு–348 |
| 6. | தொண்டைமான் இளந்திரையன் | – | நற் 94, 99, 106, புறம் – 185 |
| 7. | செம்பியனார் | – | நற்றிணை – 102 |

## பாண்டியர்

| | | |
|---|---|---|
| 1. | அண்டர்மகன் குறுவழுதியார் | – அகம்–228, குறு–345, புறம்–346 |
| 2. | பாண்டியன் அறிவுடை நம்பி | – அகம்–28, குறு–230, நற்–15, புறம்–188 |
| 3. | காணப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி | – அகம்–26, நற்–98 |
| 4. | ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் | – அகம்–25, புறம்–71 |
| 5. | கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி | – பரி–15, புறம்–182 |
| 6. | தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் | – புறம்–72 |
| 7. | நல்வழுதி | – பரி–12 |
| 8. | மாலைமாறன் | – குறு–245 |
| 9. | பாண்டியன் மாறன் வழுதி | – நற்–97, 301 |
| 10. | முடத் திருமாறன் | – நற்–105, 228 |
| 11. | ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் | – புறம்–183 |
| 12. | பாண்டியன் பன்னாடு தந்தான் | – குறுந்–270 |
| 13. | பெருவழுதி | – நற்–55, 56 |

## ஆரிய அரசன்

| | | |
|---|---|---|
| 1. | ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன் | – குறுந்–184 |

# துணைநூற் பட்டியல்


அழகப்பன். டாக்டர் ஆறு., தமிழ்ப்பேழை, தமிழ்ச்சங்கம், மதுரை, மு.ப.1981.

அழகு கிருஷ்ணன். பொ., சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, மு.ப.1988.

அறவாணன். டாக்டர் க.ப., சைனரின் தமிழிலக்கண நன்கொடை, ஜைன இணைஞர் மன்றம், சென்னை, மு.ப.1974.

இராசமாணிக்கம். மா., தமிழ்மொழி இலக்கிய வரலாறு, பாரி நிலையம், சென்னை, நான்காம் பதிப்பு 1976.

இராமநாதன் செட்டியார். லெ.ப.கரு., நோக்கு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், மு.ப.1966.

இராமலிங்கம். அரங்க அஞ்சல்வழிக்கல்வி, தமிழ்ப்பாடம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

இராமலிங்க அடிகள், திருவருட்பா, ஆறாம் திருமுறை, திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம், வடலூர், மு.ப.1999.

உண்ணாமலை. வீ., புதுக்கவிதையில் சமுதாயம், செல்மா, சிவகங்கை, மு.ப.

கதிரைவேல் பிள்ளை. நா., தமிழ்மொழி அகராதி, ஆசியன் எஜுகேஷனல் சர்வீஸ், புதுதில்லி, மறுபதிப்பு, 1981.

குருநாதன். இராம., புறநானூறு ஒரு புதிய பார்வை, வானதி பதிப்பகம், சென்னை, மு.ப.1997.

கோவிந்தன். புலவர். கா., காவலப் பாவலர்கள், சைவ சித்தார்தி நூற்பதிப்புக் கழகம், சென்னை, மு.ப.1964.

சிதம்பரனார், சாமி தொல்காப்பியத் தமிழர், ஸ்டார் பிரசுரம், சென்னை, மு.ப.1959.

சாமிநாதையர். உ.வே. (பதிப்பாசிரியர்), புறநானூறு மூலமும் உரையும் பாடினோர் வரலாறு, தியாகராஜ விலாசம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1935.

சிவகாமி. க., சங்கத் தமிழாழியார், மாதவி பதிப்பகம், சென்னை, மு.ப.1994.

சீனுவாச பிள்ளை, தமிழ் வரலாறு, பாகம் – 2, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப.1940.

சுப்பிரமணிய பாரதியார். சி., மகாகவி பாரதியார் கவிதைகள், சக்தி காரியாலயம், சென்னை, மலிவுப் பதிப்பு, மு.ப.1957.

சுப்பிரமணியன். கா., சங்க காலச் சமுதாயம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் லிமிடெட், சென்னை, மு.ப.1982.

சூரிய நாராயண சாஸ்திரியார், தமிழ்மொழியின் வரலாறு – மேற்கோள், ஜி.ஏ. நடேசன் & கம்பெனி வெளியீடு, சென்னை, மு.ப.1903.

ஞானசம்பந்தன். அ.ச., பெரியபுராணம் – ஓர் ஆய்வு, கங்கை புத்தக நிலையம், சென்னை, மு.ப.1999.

தமிழண்ணல். இராம., குறிஞ்சிப்பாட்டு, இலக்கியத் திறனாய்வு விளக்கம், வளர்தமிழ் வெளியீடு, சென்னை, மு.ப.1961.

திருநாவுக்கரசு. க.த., திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப.1971.

துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு., (உரையாசிரியர்), புறநானூறு மூலமும் உரையும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மு.ப.1951.

தேசியவிநாயகம் பிள்ளை. கவிமணி. சி., ஆசிய ஜோதி, பாரிநிலையம், சென்னை, மு.ப.1952.

நக்கீரர், இறையனார் களவியல் உரை, பவானந்தர் கழகம், சென்னை, மு.ப.1939.

பரம சிவானந்தம். அ.மு., சமுதாயமும் பண்பாடும், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, மு.ப.1962.

பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், மணிவாசகர் பதிப்பகம், புதிய பதிப்பு, சென்னை, 1938.

பாரதிதாசன், இசை அமுது, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மு.ப.1996.

பால சுப்பிரமணியம். கு.வெ., நற்றிணை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மு.ப.2004.

மறைமலை அடிகள், மாணிக்கவாசகர் வ்ரலாறும் காலமும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மு.ப. 1930.

மாணிக்கம். டாக்டர் வ.சு.ப., தமிழ்க்காதல், பாரி நிலையம், சென்னை, மு.ப.1962.

மீனாட்சி சுந்தரனார். தெ. பொ., சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, கலைக்கதிர் வெளியீடு,கோவை, மு.ப.1947.

வரதராசனார். மு. டாக்டர், இலக்கியத் திறன், தாயக வெளியீடு,சென்னை, மு.ப.1979.

வரதராசனார். மு. டாக்டர், தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்ய அகாதெமி, புதுதில்லி, மு.ப.1972.

விமலானந்தம். மது.ச., தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, மு.ப.1987.

வேங்கடராஜலு ரெட்டியார். வே. பரணர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப.1933.

# ஆங்கில நூல்கள்


Chattarji. S.K., The Indian Synthesis and Social and Cultural Later Mixture in India.

George Luck, The Latin Love Elege, Muthen & Co Ltd., New Fetter Land, London, 1969.

Meenakshi Sundaram, T.P., A History of Tamil Literature, Annamalai University, Annamalai Nagar, 1968.

Nilakanda Sastriyar, A History of South Indians, Oxford University Press, Madras, 1966.

Pillai Dr.K.K., Aryan Influence in Tamilagam During the Sangam Epoch Tamil Culture, University of Madras, 1966.

Srinivasa Ayangar. P.T., History of Tamils, C. Cuomarasamy Naidu & Sons, Madras, 1929.

Richards, I.A., Goldridge on Imagination, Routledge & Kegam Paul, London, 1968.

Winchester, C.T., Some Principles of Literature Criticism, The Macmillan Company, London, 4th Edition, 1950.

**முனைவர் ஒப்பிலா மதிவாணன்,** பிஎச்.டி.
முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை **600 005.**

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியத்தில் அரசப்புலவர்கள்" என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருமதி. கோ. ஜெயந்தி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு என் மேற்பார்வையில் நிகழ்த்தியதாகும். இது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அவரால் அளிக்கப் பெறவில்லை என்பதற்கும், இவ்வாய்வு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும் சான்றளிக்கிறேன்.

08-01-2008

மேற்பார்வையாளர்

OPPILA. MATHIVANAN
Senior Lecturer in Tamil
Directorate of Distance Education
University of Madras
Chennai-600 005

# முடிவுரை

"முடியும் என்ற எண்ணம் கொண்ட ஒரு மனிதன் நாளடைவில் சாதனைகள் நிறைந்த பெரும் மனிதனாய் மலர்கின்றான். சாதனைகள் புரியும் மனித சமுதாயம் சரித்திரத்தின் பொற்காலமாய் மலர்கிறது."



– டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி

(எண்ணங்கள், வானதி பதிப்பகம், சென்னை
23ஆம் பதிப்பு, செப்டம்பர், 1990, ப–21)

# முடிவுரை

'கவிஞர் மு.மேத்தாவின் திரையிசைப் பாடல்கள் – பன்முகப் பார்வை' என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வின் முடிவுகள் பின்வருமாறு:

கவிஞரின் வாழ்க்கைக் குறிப்புகளை சுட்டுவதாக ஆய்வின் முதல் பகுதி அமைகிறது.

- **கவிதையும் இசையும் கலந்த திரையிசைப் பாடல்களில், வளர்ச்சி நிலைகளை நோக்கும் ஆய்வுப் போக்கில் இவ்ஆய்வு அமைகிறது.**
- **இளமைப்பருவம் முதலே இலக்கியப் பணியில் தன்னை இணைத்துக் கொண்டவர் கவிஞர்.**
- **தமிழ் ஆர்வமும் இதழ்களை நடத்துவதில் துணிவும் கொண்டவர், சமுதாயத்தின் மீது அக்கரையும், மனிதாபிமானமும் உள்ளவராகத் திகழ்ந்து தமது பொதுவுடைமை சிந்தனைகளை வெளிப்படுத்தியவர்.**
- **புதுக்கவிதை இயக்கமான வானம்பாடி இயக்கத்தின் மையப் புள்ளிகளில் ஒருவராய்த் திகழ்ந்தார்.**
- **கவிதை, கட்டுரை, சிறுகதை, புதினம் முதலான இலக்கியப் பணிகளில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்.**
- **மத நல்லிணக்கச் சிந்தனையுடைய மனிதநேய மிக்கவர்.**

அகவாழ்க்கையின் அடிப்படையாக விளங்கும் காதல் பற்றிய செய்திகளை எடுத்துரைப்பதாகக் ஆய்வின் இரண்டாவது பகுதி அமைகிறது.

- காதலின் தன்மைப் பற்றியும் மனத்தில் அது தோன்றி வளரும் இயல்பு பற்றியும் கவிஞர் எடுத்துரைக்கின்றார். மின்சாரத்தைப் போன்ற கண்ணுக்குப் புலப்படாத உணர்வு வயப்பட்டது காதல் என்கிறார்.

- காதல் இசையின் மேன்மையைப் போன்றது என்று புகழ்ந்துரைக்கின்றார்.

- கள் போதையைவிடக் காதல் போதை இன்பத்தைக் கொடுக்கும். காதல் உறவு உரிமையால் உருவாகும். காதல் பிரிவு உள்ள நோய்க்கு காரணமாகிவிடும் என்றுரைக்கின்றார்.

- வாழ்வின் ஆளுமையாகிய திருமணத்தின் அடித்தளமாக விளங்குவது காதல் என்பதையும் கவிஞர் தெளிவுப்படுத்துகின்றார்.

இயற்கையும் வாழ்வும் ஒன்றையொன்றுச் சார்ந்தே இருக்கும் என்கிற இயற்கை நியதி கவிஞரின் திரையிசைப் பாடல்களில் வெளிப்படும் தன்மையை எடுத்துரைப்பதாக மூன்றாம் பகுதி அமைந்துள்ளது.

- இயற்கையின் ஆற்றலை எடுத்துரைக்க இயலாது. வாழ்வின் நெறிகளை வெளிப்படுத்துவது. பிற எல்லாவற்றிலும் உயர்ந்தது என்கிறார் கவிஞர்.

- கவிஞரின் திரையிசைப் பாடல்கள், இயற்கைக் கூறுகளான நிலம், நீர், காற்று, வானம், விண்மீன்கள், மின்னல், மழை, மேகம் போன்ற அனைத்து பற்றியும் சுட்டுகின்றன.

- மரங்களின் சிறப்பு காய், கனிகள், மலர்கள், பயிர்கள் ஆகியவற்றின் பயன்பாடுகள் பற்றியும் பாடல்கள் அமைந்துள்ளன.

- பறவைகளின் சிறப்புகள் பற்றியும், விலங்குகளின் குணங்கள் பற்றியும் பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன.

- மனித சமுதாயம் இயற்கையின் கூறுகளை மையப்படுத்தி வளர்ச்சியடைகின்றன என்றக் கருத்தைக் கவிஞரின் பாடல்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

உறவுகளின் உயர்வைக் காட்டுகின்ற சமுதாயப் போக்கினையும், சமுதாயச் சீர்கேடுகளையும் வெளிப்படுத்துகின்ற கவிஞரின் பாடல்களைப் பற்றியதாக ஆய்வின் நான்காம் பகுதி அமைகிறது.

- திரைப்படங்களின் சூழலுக்கேற்பப் பாடல்கள் எழுதப்பெற்றாலும், அவற்றிலும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையுடையக் கருத்துகளைக் கவிஞர் சுட்டிக்காட்டத் தவறவில்லை.

- அரசியல் தலைவர்களின் அத்துமீறல்கள், மக்களின் வறுமைநிலை, மதக்கலவரங்கள், கட்டுப்பாடுகளற்ற வாழ்க்கை முறைகள், மூட நம்பிக்கைகள் போன்ற சமுதாயத்தில் இருக்கும் எல்லாச் சிக்கல்களையும் கவிஞர் பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

- தனிமனிதன், குடும்பம், சமுதாயம் என்ற வளர்ச்சி நிலையில் மனிதனிடம் இருக்கின்ற நிறைகுறைகளையும் விளக்கியுள்ளார்.

- மக்களிடையே சமுதாயத்தில் நடக்கின்ற நிகழ்வுகள் பற்றிய விழிப்புணர்வு வேண்டும் என்பதைக் கவிஞர் வலியுறுத்தியுள்ளார்.

- சமுதாயத்தில் நடக்கின்ற பல அழிவுகளுக்கு காரணமாக விளங்குவது வன்முறைச் செயல்கள் என்பதை எடுத்துரைத்து அவற்றைப் போக்க

ஒற்றுமையுணர்வு கொண்டு வாழ்வதே தீர்வு என்பதையும் குறிப்பிடுகின்றார்.

- பெண்களின் திருமண ஒப்பந்தத்தை எடுத்துரைக்கும்போது கட்டாயப் பொருள் வசூலிக்கும் வரதட்சணை முறையைக் கண்டிக்கின்றார்.

- அரசாங்கத்தையும், சமுதாயத்தையும் மட்டுமே குறை கூறாமல் அரசின் சமுதாய விதிமுறைகளுக்குக் கட்டுப்படுதல் அவசியம் என்பதையும் எடுத்துரைக்கின்றார்.

வாழ்க்கையைக் காட்டுகின்ற கண்ணாடி போன்று விளங்கும் இலக்கியம் பற்றியச் சிந்தனைகள் கவிஞரின் திரையிசைப் பாடல்களிலும் பொதிந்திருப்பதை வெளிப்படுத்துவதாக ஐந்தாம் பகுதி அமைகிறது.

- கவிஞரின் (மு.மேத்தாவின்) திரையிசைப் பாடல்கள் கற்பனை நயம், உவமை, உருவகம் முதலான இலக்கியக் கூறுகளைக் கொண்டதாக அமைகிறது.

- குறியீட்டு உத்தி, முரண் உத்தி, அங்கத உத்தி போன்றவற்றையும் கவிஞர் கையாண்டுள்ளார்.

- கவிஞர் தமது திரையிசைப் பாடல்களில் பழமொழிகளையும் பயன்படுத்தியுள்ளார்.

- கவிஞரின் பாடல்களுக்கு எதுகை, மோனை போன்ற தொடை நயங்கள் மேலும் சிறப்பை அளிக்கின்றன.

- **தேவாரம், திருவாசகம், சிலப்பதிகாரம், உலா, தூது, பிள்ளைத்தமிழ் ஆகிய இலக்கியப் பெயர்களும் கவிஞரின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.**

- **கவிஞரது பாடல்களில் பேச்சு வழக்குச் சொற்களும், பிறமொழிச் சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.**

- **கவிஞரின் பாடல்களில் பல இடங்களில் நாட்டுப்புற இலக்கியத்தின் தாக்கத்தைக் காண முடிகின்றது.**

மேற்கண்ட கருத்துகள் இவ்ஆய்வின் முடிவுகளாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஒரு காலத்தில் மேட்டுக்குடி மக்கள் மட்டுமே திரைப்படங்களைப் பார்க்கலாம் என்ற நிலையிலிருந்து மாற்றம் பெற்று இன்று பாமர மக்களும் பணம் செலவிட்டுப் பார்க்கலாம் என்ற நிலைக்கு திரைப்படம் வளர்ச்சிப் பெற்றுள்ளது.

- **பிரச்சார ஊடகம், கேளிக்கைச் சாதனம் என்று வழங்கப்பட்ட திரைப்படங்கள் வளர்ச்சி மாற்றங்கள் பெற்று நாட்டின் வருமானத்திற்கும் வழிவகைச் செய்கின்றது.**

- **மனித ஆற்றலைப் பல்வேறு கோணங்களில் வெளிப்படுத்துகின்றது.**

- **திரைப்படங்களின் வெற்றிக்கு பாடலும் இசையும் பெரும்பங்கு அளிக்கின்றது.**

- **மனிதச் சிந்தனைகளுக்கு மாற்று வடிவம் தருகின்றது.**

- **இன்றைய திரைப்படங்களில் பல்வேறு தரமிக்கப் பாடல்கள் வெளிவந்த வண்ணமுள்ளன. சில பாடல்கள் நினைவில் வைத்துக்**

**கொள்ள முடிகின்றன. பல பாடல்கள் சுவைக்கும் படியாக அமையவில்லை. இந்நிலையில், கவிஞர் மு.மேத்தாவின் திரையிசைப் பாடல்கள் எக்காலத்திற்கும் பொருந்தும் வகையில், எல்லாத் தரப்பினரும் போற்றும் வகையில் தனிச்சிறப்புடன் விளங்கி வருகின்றன.**

## எதிர்கால ஆய்வுக்கான களங்கள்

1. கவிஞர் மு. மேத்தாவின் பாடல்களை இயற்கை, சமுதாயம், வாழ்வியல் என்று தனித்தனி ஆய்வுகளாகவும் செய்யலாம்.
2. கவிஞர் மு. மேத்தாவின் திரையிசைப் பாடல்களையும் அவருடைய சமகாலக் கவிஞர்களுடையப் பாடல்களையும் ஒப்பிட்டு ஆய்வு நிகழ்த்தலாம்.
3. திரையிசைப் பாடல்கள் வெறும் பொழுது போக்கிற்கு என்றில்லாமல் மக்களின் வாழ்க்கையில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றது, என்ற விழிப்புணர்வை இன்றைய திரைப்படப் பாடலாசிரியர்கள் பெருமாறும் வெவ்வேறு காலக்கட்டங்களில் வெளியான பாடல்களை சுட்டிக் காட்டியும் ஆய்வு செய்யலாம்.